Saraswati Mahal Series No. 16

# THREE TAMIL OPER[A]

மூன்று நாடகங்கள்:

1. மதனசுந்தரப் பிரசாத சந்தான விலாசம்
2. பாண்டிய கேளீவிலாச நாடகம்
3. புருரவ நாடகம்

Madras Government Oriental Series

No. XLIV

Saraswati Mahal Series No. 16

# Madras Government Oriental Series

Published under the authority of the Government of Madras

*General Editor:*
**T. CHANDRASEKHARAN, M.A., L.T.**
Curator, Govt. Oriental Manuscripts Library, Madras

No. XLIV

## மூன்று தமிழ் நாடகங்கள் :

(1. மதனசுந்தரப் பிரசாத சந்தான விலாசம் 2. பாண்டிய கேளீவிலாஸ நாடகம் 3. புரூரவ நாடகம்)

Saraswati Mahal Series No. 16

# THREE TAMIL OPERAS

1. **Madana Sundara Prasada Santana Vilasam**
2. **Pandya Keli Vilasa Natakam**
3. **Pururava Natakam**

*Critically Edited with Introduction and Notes*

by

Vidwan Kee. Vaa. JAGANNATHAN, B.O.L.

Editor, Kalaimagal

*Published by*

S. GOPALAN, B.A., B.L.

Honorary Secretary for the Administrative Committee,

T.M.S.S.M. Library, Tanjore

1950

Price Rs. 2/4/-

# PREFACE

The three plays published in the following pages, entitled "MADANA SUNDARA PRASADA SANTANA VILASAM", "PANDIA-KELI VILASA NATAKAM" and "PUROORAVA NATAKAM" belong to a type of Tamil operas in vogue in the Tamil land about a century ago. They appear to be modelled on the Telugu drama called Yakshaganas, perfected under the Telugu Kings of Tanjore, in the seventeenth century. They were popular plays enacted in the court and in villages under the direction of hereditary teachers and even today they linger here and there, like the Yakshaganas.

Sri K. V. Jagannathan, the able Editor of Kalaimagal, has edited these works for us with his characteristic ability and thoroughness. His introductory remarks on the Tamil Drama are invaluable to students of Tamil dramatic literature. We are grateful to him for the excellent piece of work done by him for the Saraswathi Mahal.

We are grateful to the Government of Madras for the timely financial help given to us to publish these and other manuscripts in the Saraswathi Mahal.

S. GOPALAN,  
*Honorary Secretary,*  
*T. M. S. S. M. Library Committee*

# GENERAL INTRODUCTION OF
# THE MADRAS GOVERNMENT ORIENTAL SERIES

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in different languages on subjects like Philosophy, Medicine and Science etc., early in May 1948. Important manuscript Libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Sarfoji's Saraswathi Mahal Library, Tanjore, alone compiled with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10, Education dated 4-4-1949 constituted an expert committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publications. The following are the members of the Committee :—

## The Name of Personnel of the Committee Constituted for Selecting Manuscripts for Publication.

1. Sri T. M. Narayanaswami Pillai, M.A., B.L.,
2. „ R. P. Sethu Pillai, B.A., B.L.,
3. „ C. M. Ramachandra Chettiar, B.A., B.L.,
4. „ R. Krishnamoorthy (Kalki)
5. „ Dr. N. Venkataramanayya, M.A., Ph.D.,
6. „ M. Ramanuja Rao Naidu, M.A.,
7. „ V. Prabhakara Sastri,
8. „ N. Venkata Rao,
9. „ H. Sesha Ayyangar,
10. „ Masti Venkatesa Ayyangar,
11. „ M. Mariappa Bhat, M.A., L.T.,
12. „ Dr. C. Achyuta Menon, M.A., Ph.D.,
13. „ Dr. C. Kunhan Raja, M.A. D.Phil.,

14. Sri Dr. A. Sankaran, M.A., Ph.D., L.T.,
15. „ P. Rama Sastri,
16. „ S. K. Ramanatha Sastri,
17. Dr. M. Abdul Haq, M.A., D.Phil., (Oxen),
18. Afzul-u-Ulma Hakim Khader Ahamed,
19. „ P. D. Joshi,
20. „ S. Gopalan, B.A., B.L.,
21. „ T. Chandrasekharan, M.A., L.T.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Marathi and Islamic languages. They met during the month of May 1949 at Madras and at Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the Government in G. O. No. Mis. 2745 Education dated 31–8–1949 and they decided to call these publications as "MADRAS GOVERNMENT ORIENTAL SERIES" and appointed the Curator, Government Oriental Manuscripts Library, Madras-5, as the General Editor of the Publications. The following manuscripts have been taken up for publication during the current year :—

# "A" From The Government Oriental Manuscripts Library, Madras

### TAMIL

1. KAPPAL SASTRAM
2. ANUBHAVA VAIDYA MURAI
3. ATTANAKOLAHALAM
4. UPADESA KANDAM
5. COLAN PURVA PATTAYAM
6. KONGA DESA RAJAKKAL
7. SIVAJNANA DIPAM
8. SADASIVA RUPAM, with commentary

### TELUGU

1. SANGITA RATHNAKARAMU
2. AUSHADHA YOGAMULU

3. VAIDYA NIGHANTU
4. DHANURVIDYA VILASAMU
5. YOGA DARSANA VISAYAMU
6. KHADGA LAKSHANA SIROMANI

## SANSKRIT

1. VISHANARAYANIYAM
2. BHARGAVA NADIKA
3. HARIHARACATURANGAM
4. BRAHMA SUTRA VRITTI-MITAKSHARA
5. NYAYA SIDDHANTHA TATTVAMRUTHAM

## MALAYALAM

1. GARBHA CHIKITSA
2. (a) VASTHULAKSHANAM
   (b) SILPASASTRAM
   (c) SILPAVISHAYAM
3. MAHASARAM
4. KANAKKUSARAM
5. KRIYAKRAMAM

## KANNADA

1. LOKOPAKARA
2. RATTAMATA
3. DIKSABODHE
4. ASVASASTRAM
5. (a) AUSHADHAGALU
   (b) VAIDYA VISHAYA
6. SANGITA RATNAKARA
7. SUPA SASTRA

## ISLAMIC LANGUAGES

1. JAMIL-AI-ASHYA
2. TIBB-E-FARIDI
3. TAHQUIQ-AL-BUHRAN
4. SAFINAT-AL-NAJAT

# 'B' From The Tanjore Maharaja Sarfoji's Saraswathi Mahal Library, Tanjore

## TAMIL

1. SARABENDRA VAIDYA MURAI (Diabatese)
2. do (Ear, Nose, Throat, Head)
3. KONGANAR SARAKKU VAIPPU
4. TIRUCHITRAMABLA KOVAIAR, with Padavurai
5. SARABENDRA VAIDYA MURAI (Anaemia)
6. TALA SAMUDRAM
7. BHARATA NATYAM
8. (a) PANDIKELI VILASA NATAKAM
   (b) PURURAVA CHAKRAVARTI NATAKAM
   (c) MADANA SUNDARA VILASA NATAKAM
   (d) PERCY MACQUEEN'S COLLECTION in the Madras University Library, of Folklore
9. RAMAYYAN AMMANAI
10. SARABENDRA VAIDYA MURAI (Asthma, cough and other lung diseases)

## TELUGU

1. KAMANDAKA NITISARAMU
2. TALA DASAPRANAPRADIPIKA
3. (a) RAGHUNATHA NAYAKA ABHYUDAYAMU
   (b) RAJAGOPALA VILASAMU
4, RAMAYANAMU by Katta Varadaraju

## MARATHI

1. NATYA SASTRA SANGRAHA
2. (a) BOOK OF KNOWLEDGE, VAHI
   (b) FOLK SONGS
   (c) DORA DHARUN VENI PADDHATI
   (d) ASWAS CHATULA TUMNI
3. (a) PRATAPASIMHENDRA VIJAYA PRABANDHA
   (b) SARABENDRA TIRTHAVALI
   (c) LAVANI

4. DEVENDRA KORAVANJI
5. BHAKTA VILAS
6. SLOKA BADDHA RAMAYANA

**SANSKRIT**

1. ASWASASTRA with Tricolour Illustrations
2. RAJAMRIGANKA
3. CHIKITSAMRITASAGARA
4. GITA GOVINDA ABHINAYAM
5. (a) COLA CAMPU
   (b) SAHENDRA VILASA
6. DHARMAKUTAM-SUNDARA KANDA
7. JATAKA SARA
8. VISHNUTATVANIRNAYA VYAKHYA
9. SANGITA DARPANA
10. BEEJA PALLAVA

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them with other copies. The Editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the foot note or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of Publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

T. CHANDRASEKHARAN,
*General Editor*

# பதிப்புரை

இந்தப் புத்தகத்தில் உள்ள மூன்று நாடகங்களும் தஞ்சை ஸ்ரீ சரபோஜியரசர் சரஸ்வதிமகால் புத்தகசாலையில் உள்ள ஏட்டுச் சுவடிகளில் இருந்தன. மூன்றாவது நாடகம் அபூர்த்தியாக இருக்கின்றது. முதல் இரண்டும் சிறியவை. மூன்றாவது நாடகம் பழைய கதை ஒன்றைத் தழுவியதாதலின் பெரியதாகவே இருக்க வேண்டும். கதையின் தொடக்கமென்று சொல்வதற்குரிய முதற் பகுதியிலே 71 பாடல்கள் உள்ளன. இன்னும் 200 பாட்டுகளாவது மேலே இருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது.

ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழைகள் பல இவற்றில் இருந்தன. அவற்றைக் களைந்து ஒழுங்குபடுத்தி அடிவரையறை செய்து அமைத்துள்ளேன். பல கீர்த்தனங்களுக்கு ராகதாளங்களே காணப்படவில்லை. முன்னுள்ள இரண்டு நாடகங்களும் கதையமைப்பு உடையன அல்ல; புலவர்கள் தாமே புனைந்து அமைத்தவை. மூன்றாவது நாடகத்தின் கதாநாயகனை புரூரவன் வேத புராண காவியங்களில் சொல்லப் பெறுபவன். ஆகவே புரூரவன் வரலாறு எவ்வெந் நூல்களில் எவ்வெவ்வாறு உள்ளது என்பதைத் தொகுத்து முகவுரையிற் கொடுத்திருக்கிறேன். வெவ்வேறிடங்களில் உள்ளவற்றை ஒருசேரப் பார்க்கும்போது ஒற்றுமை வேற்றுமைகள் நன்கு புலப்படும் என்பது என் கருத்து. இந்த நாடகம் குறையாக இருந்தாலும், இதற்கு மூல நூல் என்று சொல்லத் தகும் வசன நூல் ஒன்று இன்றும் அச்சிட்டு வழங்குகிறது. சென்னைக் கீழ்த்திசை ஏட்டுப் பிரதி நூல் நிலையத்தில் இவ் வசன நூல் ஏடாகவே இருக்கிறது. இந்த வசன நூல் பூர்த்தியாகவே உள்ளது. ஆகவே இந்த நாடகத்தால் அறியப் பெறாத கதையின் பிற்பகுதி அந்த வசன நூலால் தெரியவரும். இதை நினைந்து புரூரவச் சக்கரவர்த்தி கதை என்ற அந்த நூலில் உள்ள கதையைச் சுருக்கமாக முகவுரையில் தந்திருக்கிறேன். இந்த நாடகம் முற்றும் கிடைக்கவில்லை யென்பது ஒரு குறை; இதில் உள்ள கதையையே பொருளாகக் கொண்ட இனிய தமிழ்க் காவியமாகிய புரூரவா சரிதை என்பது ஏட்டுருவத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்ததென்று தெரிகிறது. அந்தக் காவியத்திலிருந்து ஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள் எடுத்துக் காட்டியிருக்கும் செய்யுட்கள்

நல்ல நடையும் காவியச் சுவையும் அமைந்தனவாக உள்ளன. அந்த நூல் கிடைக்காமல் போனது தமிழ் நாட்டுக்குப் பெரிய நஷ்டம்.

முகவுரையில் பொதுவாகத் தமிழ் நாடக நூல்களைப் பற்றிய செய்திகளையும், இப் புத்தகங்களில் உள்ள நாடகங்களின் அமைதியைப் பற்றிய செய்திகளையும் சேர்த்திருக்கிறேன். இம் மூன்றும் சிறந்த நாடக இலக்கியங்களென்று சொல்வதற் குரியன அல்ல எனினும், தமிழ் இலக்கியப் போக்கு எவ்வாறு படர்ந்தது என்பதை அறிய இவை உதவும்.

இவற்றை ஆராய்ந்து அச்சிடும் பணியை எனக்கு அளித்த தஞ்சைச் சரபோஜி மன்னர் சரஸ்வதி மகால் புத்தகசாலையினருக்கு என் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மயிலாப்பூர்
27–11–50

கி. வா. ஜகந்நாதன்

# முகவுரை

## 1

## நாடகத்தமிழ்

தமிழை இயல்தமிழ் என்றும் இசைத்தமிழ் என்றும் நாடகத் தமிழென்றும் மூன்று வகையாகப் பகுத்திருக்கின்றனர். இந்தப் பகுப்பு, தொன்று தொட்டே இருந்து வருகிறது. முத்தமிழ் என்று தமிழை வழங்குவது இந்தப் பகுப்பினுல்தான். இயல்தமிழ் என்பது இலக்கிய இலக்கணங்கள். இசைத் தமிழ் என்பது இசைக்குரிய இலக்கணங்களும், இசைக்குரிய உருப்படிகளும் ஆகும். நாடகத்தமிழ் கதை தழுவிவரும் கூத்தென்றும், அஃதல்லாதன என்றும் இருவகைப்படும். நாடகம் என்று இப்போது நாம் வழங்கும்போது பெரும்பாலும் கதை தழுவிவரும் கூத்தையே (Drama) குறிப்பிடுகிறேம். மற்றதை நடனம் (Dance) என்று வழங்குகிறேம். சங்ககாலத்தில் நடனப்பகுதியே பெருக வளர்ந்து வந்ததென்று தெரிகிறது.

நாடகமும் அக்காலத்தில் வழங்கியது. ஆனல் நடனத்தை நோக்க அது சிறிய அளவில்தான் நிகழ்ந்தது என்று சொல்ல வேண்டும். சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் மாதவி என்னும் நடனமாது அரங்கேறிய செய்தியே விரிவாகச் சொல்லப் பெறுகிறது. ஆகவே அங்கே நடனத்தைப் பற்றிய சில செய்திகள் வருகின்றன. சிலப்பதிகாரத்தின் உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், அரங்கேற்று காதையின் உரையில் நாடகத்தமிழ் சம்பந்தமான பல செய்திகளை எடுத்துச் சொல்கிறார், சில நாடகத் தமிழ் நூல்களின் பெயர்களும், அவற்றில் உள்ள சில சூத்திரங்களும் அவ்வுரையிடையே காணக் கிடைக்கின்றன. அவ்விடத்தில் கதை தழுவிவரும் கூத்தைப்பற்றியும் சில செய்திகள் உள்ளன. *

ஆயினும் நாடகத்தமிழுக்கு இலக்கியமாகப் பழைய நூல் ஒன்றும் இப்பொழுது கிடைக்கவில்லை. சில நூல்கள் இருந்து மறைந்திருக்கவேண்டும். பழைய நாடகங்கள் இப்போது

* சிலப்பதிகாரம், 3: 13, உரை பார்க்க.

கிடைக்காததனுல், கதை தழுவிவரும் கூத்துக்கள் தமிழ் நாட்டில் நடைபெறவில்லையென்று நினைத்து விடக்கூடாது. வடமொழியிலும் ஆங்கிலத்திலும் பல நாடகங்கள் இலக்கியச்சுவை மலிந்து இன்றும் வழக்கிலிருந்து விளங்கும் போது, தமிழில் மாத்திரம் அத்தகைய நாடகங்கள் இல்லாமைக்குக் காரணம் என்ன? இது நன்கு ஆராய்வதற்குரிய விஷயமாகும்.

## கலைஞர்கள்

**ப**ழங்காலத்தில் இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழிலும் வல்ல கலைஞர்கள் பலர் இருந்தனர். இயற்றமிழ் வல்ல கலைஞர்களைப் புலவரென்றும், இசையில் வல்லவர்களைப் பாணர் என்றும், கூத்தில் வல்லவர்களைக் கூத்தர் என்றும் சொல்வார்கள். அபிநயம் பிடித்து முகபாவம் தோன்ற ஆடும் பெண்களை விறலியர் என்று வழங்குவர். இவர்கள் அனைவரும் எப்போதும் ஊர் ஊராகப் போய்க்கொண்டே இருந்தனர். எங்கெங்கே உபகாரிகள் இருந்தார்களோ, அங்கெல்லாம் சென்று தம் கலைத்திறமையைக் காட்டி வந்தார்கள். அவர்களுக்கு எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் செல்லும் உரிமை இருந்தது.

இந்தக் கலைஞர்களுள் கூத்தர் என்பவர் நாடகத் தமிழ்ப் புலவர்கள். பல சாதியினரிலும் கூத்தர் இருந்தனர்.* வழி வழியே வந்த கூத்துப்புலமையைப் பாதுகாத்து வந்தார்கள். அரசர்களையும் செல்வர்களையும் கூட்டம் கூட்டமாகச் சென்று சேர்ந்து கூத்தாடிப் பரிசு பெற்ருர்கள். புதிய புதிய செல்வர்களைத் தேடிக்கொண்டு செல்லும் வழக்கம் அவர்களிடம் இருந்தது. 'ஆற்றுப்படை' என்ற நூல்வகை ஒன்று தமிழில் உண்டு. அது புலவர், கூத்தர், பாணர் ஆகிய கலைஞர்களைப் பார்த்து வேருெரு கலைஞன் சொல்வதாக அமைவது. "நான் இன்ன ஊரில் உள்ள இன்ன செல்வனைக்கண்டு என் திறமையை வெளிப் படுத்திப் பரிசுபெற்றேன். நீயும் அவனை நாடிச் செல்வாயானுல் பரிசு பெறலாம்" என்று அச்செல்வர் இருக்கும் ஊருக்குச் செல்லும் வழியைக் காட்டுவதாக அந்நூல் இருக்கும். புலவராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை, கூத்தராற்றுப்படை என்று அத்தகைய நூல்

* தொல்காப்பியம், புறத்திணை ௩. உரை.

களின் பெயர்கள் வழங்கும். பிற தொழிலில் ஈடுபட்டவர்களைக் கண்டு இப்படிச் சொல்வது வழக்கம் அன்று. தமிழ்க் கலைஞர் களைப் பார்த்துச் சொல்வதாக மட்டும் ஒரு மரபு அமைந்திருக் கின்றது. இதிலிருந்து கூத்தர் முதலியோர், கலையைத் தேர்ந்து பரிசளிக்கும் வள்ளல்களை நாடிச் சென்றனரென்றும், அவர்கள் அளித்த பரிசைப் பெற்று வாழ்ந்தனரென்றும் தெரியவருகிறது.

பாணர் என்போர் தனியே ஒரு சாதியினர். கூத்தர் பல சாதியினராயினும் கூத்துத் தொழிலில் வல்லவர். பிற்காலத்தில் பாணர் என்ற சாதி இல்லாமற் போயிற்று. மேளம், நாயனம் முதலிய இசைக்கருவிகளை வாசிக்கும் சாதியினர் இப்போது தமிழ் நாட்டில் இருப்பது போல, அக்காலத்தில் பாணர்கள் இருந்தனர். கூத்தாடும் மக்கள்கூடப் பிற்காலத்தில் ஒரு சாதியாக வாழத் தலைப் பட்டனர். 'கூத்தாடிகள்' என்று அவரை வழங்கும் வழக்கத்தை இன்றும் கிராமங்களில் காணலாம்.

## நாடகத் தமிழ் நூல்

பழங்காலமுதல் கூத்தர்கள் தமிழ்நாட்டில் இருந்து வந்தனர்; இன்றும் இருக்கின்றனர். அவர்கள் கூத்தாடி ஊதியம் பெற்று வாழ்ந்தனர். அவர்கள் ஆடிய கூத்துக்களில் நடனத்தோடு, நாட கங்களும் இருந்தன. வேடம் புனைந்து ஆடினார்கள். அவர்கள் ஆடிய கூத்துக்கள் வாய்மொழியாகவே வழங்கின. கூத்தில் வழங்கும் வசனத்தையும், பாடல்களையும் பரம்பரை பரம்பரை யாக ஆசிரியர் மாணாக்கருக்குக் கற்பித்து வந்தார்கள். பார்த்து மகிழ்வதுதான் கூத்தின் பயன். படித்து மகிழ்வது இயல்தமிழ். ஆகவே கூத்தைத் தனியே படித்து இன்புறுவார் யாரும் இல்லை. வடமொழி நாடகங்கள் அறிவிற் சிறந்த மக்கள் கூடிய அரசவை யிலே நடைபெற்றன. ஆதலின் அவற்றில் இலக்கியச் சுவையும் மிகுதியாக இருந்தது. தனியே படிப்பதற்கும் ஏற்றவையாக நாட கங்கள் இருந்தன. அந்த நாடகங்கள் நாட்டு மக்களிடம் வரவில்லை. நாட்டில் உள்ள பாமர மக்கள் வடமொழியை ரஸிக்கமுடியாது. எனவே, ஊர்தோறும் உள்ள மக்களின் இன்பத்துக்குக் கூத்தர் ஆடும் கூத்துக்கள் காரணமாயின. தமிழ்க் கூத்தர்கள் நாட்டி லுள்ள எளிய மக்களையும் அணுகினர்; வயலில் வேலை செய்யும் மக்களுக்கும் இன்பத்தை உதவினர். ஆதலின் அவர்களுடைய

கூத்துக்களில் படித்து மகிழ்வதற்குரிய பகுதியைவிடப் பார்த்தும் கேட்டும் மகிழும் பகுதியே அதிகம். அந்த நாடகங்கள் எழுதப் படாமல், வாய்மொழியாகவே நிலவிவந்தன. நாட்டு மக்களுக்கு உரிய இலக்கியம் எல்லாம், ஏட்டில் புகாமல் நாடோடியாக வழங்கி வருவதை நாம் அறிவோம். நாடோடிப் பாடல்கள் அப் படி வழங்கி வருகின்றன. அப்படியே இந்த நாடகங்களும் கூத்தர் களிடையே வழங்கின.

நாளடைவில் இந்தக் கூத்துக்களைத் தெருக் கூத்து என்று வழங்கலாயினர். தெருக்கூத்தில் பல நாடகங்களைப் பார்த்த கிழவர்கள் இன்னும இருக்கிறார்கள். இந்த நாடகங்களை எழுதி வைக்கவில் அச்சுக்கலை வந்த பிறகு, இந்த நாடகங்களிற் சில அச்சேறின. விலாசங்கள் என்றும், நாடகம் என்றும் பெயர் கொண்ட பல நாடகங்கள் இன்றும் உள்ளன. தெருக்கூத்துக்கு ஆதாரமான நாடகங்கள் இன்ன முறையில் இருந்தன என்பதை, இந்தப் புத்தகங்களைக் கொண்டு தெரிந்துகொள்ளலாம்.

## நாடக மரபுகள்

இந்த நாடகங்களில் எல்லாம் சில மரபுகள் உண்டு. கட்டியக் காரன் இல்லாத நாடகம் இல்லை. அரசனுக்குக் கட்டியம் கூறும் தொழிலுடையவன் அவன். சபையோர்களுக்கு இன்னார் வரப் போகிறார் என்று அறிவிக்கும் கடமை அவனைச் சார்ந்தது. விநாயகர், கலைமகள், மோகினி ராஜன், மோகினி என்ற பாத்திரங் கள் பெரும்பாலான நாடகங்களில் ஆரம்பத்தில் வருவார்கள். வசனம், விருத்தம், கீர்த்தனம் என்னும் மூன்று உறுப்புக்களால் நாடகம் அமையும். நாடகம் முழுவதுமே கூற்றுவகைகளாக இருக்கும் என்று சொல்வதற்கு இல்லை. விருத்தங்கள் இடை யிலே நிகழ்வனவற்றைச் சொல்வதுண்டு. இன்னார் இன்ன சம் பிரமத்துடன் வருகிறாரென்று வருணிக்கும் கீர்த்தனைகள் உண்டு. அந்தப் பாத்திரம் மேடைக்கு வரும்போது, கட்டியக்காரன் அத் தகைய பாடல்களைப் பாடுவான். கட்டியக்காரனே எல்லாவற் றையும் சபையோர்களுக்கு அறிமுகம் செய்து வைப்பவன். நிகழ்ச்சிகளைச் சொல்லும் பாட்டுக்களும் வரும்.

கீர்த்தனங்களைத் தரு என்று வழங்குவது நாடக சம்பிர தாயம். சிந்து என்று சொல்வதும் உண்டு. வசனத்திலும்,

விருத்தத்திலும், கீர்த்தனங்களிலும் வழக்குச் சொற்கள் பல அமைந்திருக்கும்; நாட்டு மக்களுக்கு விளங்கும் நடையில், பழமொழிகளும், மரூஉமொழிகளும், உலக வழக்குத் தொடர்களும் நிரம்பியிருக்கும். பாரத விலாசம், நச்சுப்பொய்கை விலாசம், கிருஷ்ண விலாசம், பூம்பாவை விலாசம், கர்ணராசன் விலாசம் முதலிய நாடகங்கள் இந்த வகையைச் சார்ந்தனவே. குறவஞ்சி நாடகங்களும் இந்த நாடக வகையிலே சேர்ப்பதற்குரியனவே.

## மூன்று நாடகங்கள்

இந்தப் புத்தகத்தில் உள்ள மூன்று நாடகங்களும் மேலே சொன்னபடி அமைந்தனவே. '**மதன சுந்தரப் பிரசாத சந்தான விலாசம்**' என்பது அருணாசல கவி என்பவரால் இயற்றப் பெற்றது. '**பாண்டிய கேளீ விலாச நாடகம்**' என்பது நாராயண கவி என்பவரால் இயற்றப் பெற்றது. இந்த இரண்டு நாடகங்களும் தஞ்சையில் சென்ற நூற்றாண்டில் அரசாண்டு வந்த மகாராஷ்டிர மன்னராகிய சிவாஜியின் விருப்பப்படியே இயற்றப் பெற்றவை. '**புரூரவ நாடகம்**' என்பதை இயற்றியவர் இன்னார் என்று தெரியவில்லை. அந்த நாடகம் முற்றும் கிடைக்கவில்லை. நாடகத்தின் முற்பகுதி மாத்திரம் கிடைத்திருக்கிறது.

இந்த மூன்றுமே தெருக்கூத்தை நினைவூட்டும் வகையில் அமைந்தவை. இவற்றால் அக்காலத்துப் பேச்சு நடையும், வழக்கங்களும், பழமொழிகளும், பழங்காலப் பொருள்களைப் பற்றிய செய்திகளும் தெரியவருகின்றன. இனி, இவற்றைப் பற்றித் தனித் தனியே ஆராய்வோம்.

# 2

## மதனசுந்தரப் பிரசாத சந்தான விலாசம்

**மதன சுந்தரப் பிரசாத சந்தான விலாசம்** என்பது, மதன சுந்தரேசராகிய சிவபெருமான் திருவருளால் பெற்ற மக்களின் விளையாட்டைச் சொல்லும் நாடகம் என்னும் பொருளுடையது. மதனசுந்தரேசரைக் குல தெய்வமாக உடைய சோழ மன்னன் ஒருவனுடைய பிள்ளைகள் நால்வர் பலவகை விளையாடல்களைச் செய்வதும், சிவபெருமானைப் பக்தி பண்ணுவதும், சோழ மன்னனுடைய பிரார்த்தனைக்கு இணங்கி இறைவன் எழுந்தருளி அந்தப் பிள்ளைகளுக்கு எல்லா நலங்களும் அருளுவதுமாகிய செய்திகளை இந்நாடகம் விரிவாகக் கூறும்.

இதில் வரும் சோழேந்திரன் குறிப்பிட்ட சோழமன்னன் ஒருவனென்று கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. யாரேனும் ஓர் அரசன் என்று சொல்வதற்குப் பதிலாகச் சோழேந்திரன் என்று சொல்லிவைத்திருக்கிறார் புலவர்.

சோழேந்திரன் பாண்டியன், சேரன், கொங்குநாட்டரசன், கேரளநாட்டு மன்னன் என்னும் நால்வருடைய புதல்வியர் நால்வரை மணந்து நான்கு புதல்வரைப் பெற்றவன். அந்த நான்கு புதல்வரும் சேர்ந்து விளையாடத் தொடங்கினர்.

முதலில் கழற்சிக்காய் விளையாட்டைத் தொடங்கினர். கழற்சிக்காய்களை ஒன்று இரண்டு மூன்றென்று வீசி எறிந்து பிடித்து ஆடினார்கள். அப்படி ஆடும்போது அந்த அந்த எண்களுக்கு ஏற்ற பொருள்களைச் சொல்லிப் பாடினார்கள். ஒன்றுக்கு ஒன்றேயாகிய தெய்வத்தையும், இரண்டுக்குச் சக்தி சிவத்தையும், மூன்றுக்குத் திரிமூர்த்திகளையும், நான்குக்குச் சதுர்வேதங்களையும், ஐந்துக்குப் பஞ்சவர்ணங்களையும், ஆறுக்குச் சாத்திரங்களையும், ஏழுக்குக் கடல் ஏழையும், எட்டுக்குத் திக்கயங்களையும், ஒன்பதுக்கு நவரத்தினங்களையும், பத்துக்குத் திசை பத்தையும் சொல்லிப் பாடினார்கள்.

பிறகுகழற்சிக்காய் ஊசல் என்ற விளையாட்டை ஆடலாயினர். ஒரு கழற்சிக்காயைக் கோட்டில் வைத்து அதை வேறு கழற்சிக்

காயினால் எற்றி இந்த விளையாட்டை ஆடினார்கள். அப்பால் பந்து விளையாடத் தொடங்கி ஆனைப் பந்து குதிரைப் பந்து விளையாடினார்கள், பந்தை வீசுவதும் பிடிப்பதுமாக இந்த ஆட்டம் நடைபெற்றது. பின் கிட்டிப் பந்து ஆடினார்கள். கிட்டியினால் ஒருவன் பந்தை அடிக்க மற்றவர்கள் அதை எடுத்து வீசினார்கள். கிட்டிப் பந்துக்குப் பின் பாண்டி விளையாட்டில் ஈடுபட்டார்கள். சில்லை வீசிக் காலால் எற்றி விளையாடினார்கள். ஒவ்வொரு பகுதியாகத் தாண்டி, முழுவதும் தாண்டினவுடன் மொச்சி கட்டிக் கொண்டார்கள். இதன்பின் உப்புக் கோடு ஆடினார்கள். நாலு மூலைத்தாச்சி, கண்ணாமூச்சி என்பவற்றைப் பின்பு ஆடினார்கள்.

அப்பால் நால்வரும் சேர்ந்து கொப்பி தட்டிப் பாடி விளையாடினார்கள்; மதனசுந்தரேசுவரரைப் புகழ்ந்து பாடினார்கள்.

இப்படிக் குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்து மகிழ்ந்த அரசன் மதனசுந்தரேசுவரரைத் தியானித்து, "இந்தப் பாலகர்களுக்குத் தீர்க்காயுளும் மற்ற நலங்களும் அருளவேண்டும்" என்று வேண்டினான். அவனுடைய பக்திக்கு இரங்கின மதனசுந்தரேசுவரர் காமசுந்தரி யம்பிகையோடு எழுந்தருளினார். அரசன் பெருமானைத் துதித்துப் பரவினான். காமசுந்தரேசுவரியைப் பார்த்து, "தாயே, எங்களுக்குத் திருவருள் புரியவேண்டும்" என்று வேண்டித் துதித்தான். அப்பெருமாட்டி இறைவனிடம், அந்த நான்கு புத்திரர்களுக்கும் சீரும் ஜயமும் செல்வமும் சித்தியும் திடகாத்திரமும் தீர்க்காயுளும் பிற நலங்களும் கிடைக்கும்படி செய்யவேண்டுமென்று திருவாய் மலர்ந்தருளினாள். அப்படியே அரசனும் அரசியும் புதல்வர்களும் எல்லா நலங்களும் எய்தி வாழுமாறு சிவபெருமான் அருள் செய்தார்.

இதனுடன் நாடகம் முடிகிறது.

முதலில் கணபதி காப்புடன் நாடகம் தொடங்குகிறது. பிறகு கதைச் சுருக்கத்தை ஓர் அகவல் தெரிவிக்கிறது. பாண்டிய கேளீ விலாச நாடகத்திலும் கதாசங்கிரக அகவல் இருக்கிறது. ஹரி கதைகளைச் செய்பவர்கள் முதலில் கதை முழுவதையும் தெரிவிக்கும் ஒரு பாடலைப் பாடுவார்கள். அதை நிருபணம் என்று சொல்வார்கள். நந்தனார் சரித்திரக் கீர்த்தனத்தில் "பழனமருங் கணையும்" எனத் தொடங்கும் கொண்டிச்சிந்தில் கோபால

கிருஷ்ண பாரதியார் நந்தனார் சரித்திரச் சுருக்கத்தை அமைத்திருக்கிறார் இவற்றை இக் கதாசங்கிரகம் நினைப்பிக்கின்றது. இந்த அகவலின் கடைசியில், இந்த நாடகம் சரபேந்திர மன்னனுடைய குமாரனாகிய சிவாஜிராஜேந்திரன் உத்தரவுப்படி அருணாசல கவியால் இயற்றப் பெற்றதென்ற செய்தி வெளியாகிறது.

கதாசங்கிரகத்தின் பின் நாடகம் ஆரம்பமாகிறது. கட்டியக்காரன் வருகிறான். கட்டியக்காரனுடைய ஆடையலங்காரங்களை விருத்தம் ஒன்றும் சிந்து ஒன்றும் தெரிவிக்கின்றன. நாடகங்கள் பலவற்றிலும் கட்டியக்காரனுடைய முண்டாசும், கச்சும், பிரம்பும் காட்சியளிக்கும். கட்டியக்காரனுக்குப் பின் விநாயகர் வருகிறார். அதன்பின் நாடகத்தின் நாயகனாகிய சோழேந்திர மகாராஜன் வருகிறான். தன் மனைவிமார் நால்வரும் எழில் மைந்தர் நால்வரும் உடன்வர அவன் வருவதை இரண்டு பாடல்கள் சொல்கின்றன. அப்பால் மைந்தர் நால்வரும் பலபல விளையாடல்களை ஆடுகிறார்கள்.

கழற்சிக்காய் ஆடுகையில் ஒன்று முதல் பத்துவரைக்கும் உள்ள எண்களுக்கு ஏற்ற பொருள்களை அமைத்துப் பாடுகிறார்கள். கல்லாங்காய் விளையாட்டை விளையாடும் பெண்கள் இத்தகைய பாட்டுக்களைப் பாடுவதை இன்றும் காணலாம். பெதும்பைப் பருவப் பெண்கள் ஏழு கழங்குகளை வைத்து ஆடிப் பாடுவார்கள். உலா என்ற பிரபந்தங்களில் பெதும்பையின் வருணனையில் இதைக் காணலாம். ஒன்று முதல் ஏழுவரைக்கும் உள்ள தொகைப் பொருள்களை அவர்கள் பாடுவதாக அமைப்பது புலவர்கள் வழக்கம். இவற்றையெல்லாம் நினைவில் வைத்தே இந்த நாடக ஆசிரியர் இப் பகுதியைப் பாடியிருக்கிறார்போலும். பெரும்பாலும் பெண்களே விளையாடும் கழற்சிக்காய், சில்லு, கொப்பி ஆகிய விளையாட்டுக்களைச் சோழன் மைந்தர்கள் விளையாடுவதாக ஆசிரியர் அமைத்திருக்கிறார்.

விளையாட்டைப் பற்றிக் கூறிய பிறகு சோழேந்திரன் மதன சுந்தரேசுவரரைத் தியானிக்க, அவர் எழுந்தருளி அருள்புரியும் பகுதி வருகிறது.

இந்த நாடகத்தில் 6 விருத்தங்களும், 1 அகவலும், 1 கொச்சகமும், 16 சிந்துகளும், 4 வசனப் பகுதிகளும் உள்ளன.

# 3

## பாண்டிய கேளி விலாச நாடகம்

**பாண்டிய கேளி விலாச நாடகம்** என்பது பாண்டியன் தன் மனைவியோடு இன்ப விளையாடல் புரிவதைச் சொல்லும் நாடகம் என்னும் பொருளுடையது. பாண்டியன் தன் மனைவியோடு ஒரு பூங்காவிற்குச் சென்று அங்குள்ள மலர்களையும் பறவைகளையும் கண்டுகளிப்பதும், அப்போது இரண்டு ரத்தினவியாபாரிகள் வந்து தம்பால் இருந்த மணிகளையும் அணிகளையும் காட்ட, வேண்டிய வற்றை அரசன் வாங்குவதும், அப்பால் அங்கே குறிசொல்லும் பூசாரிகள் வந்து குறி சொல்வதும் இந் நாடகத்தில் சொல்லப் படுகின்றன.

பாண்டியன் பெயர் இன்னதென்று இதில் குறிப்பிக்கப்பட வில்லை. முன் உள்ள நாடகத்தைப் போலவே இதுவும் சரித்திரத் தொடர்புள்ள எந்தப் பாண்டியனையும் குறிக்காமல் புலவர் கற்பனை யால் அமைத்த அரசனை நாயகனாக உடையது.

நாடகம் கதாசங்கிரகத்துடன் தொடங்குகிறது. கதாசங்கிரக அகவலின் இறுதியில் இந்த நாடகம் சிவாஜீந்த்ர பூபதியின் விருப் பப்படி நாராயண கவி இயற்றியது என்ற செய்தி தெரியவருகிறது. சிவாஜி மன்னனைப் புலவர், 'ஆழிசூழ்ந் திலகும் அவனியிற் சிறந்த, சோழநா டதனைச் சுகமுடன் புரக்கும், சத்திர பதியாம் சாருவ பூமன், எத்திசை யோரும் இசைத்திடுங் கீர்த்தியான், போசல குலமது புகழுடன் விளங்க, வாசவ வைபவன் மன்னர் சிகாமணி, சித்தஜன் எனவே சேயிழை மாதர், நத்தியே தொடரும் நன்மை யார் அழகன், சிந்தா மணியும் தேவகற் பகமும், புந்தியில் நாணப் புலவர்கட் கெல்லாம், பொன்னும் மணியும் பொருந்தக் கொடுத்தே, எந்நாளும் விஜயம் எய்திடும் தீரன், செந்திரு மார்பன் சிவாஜீந்த்ர பூபதி' என்று பாராட்டுகிறார்.

கட்டியக்காரன் வெள்ளிப்பிரம்பேந்தி முண்டாசு புனைந்து நகைத்துப் பேசி மகிழ்ந்து வருகிறான். அவன் ஐங்கரரிடத்தில் பக்தி உடையவன். அப்பால் இன்பவிநாயக மூர்த்தி எழுந்தருளுகிறார்.

பிறகு மதனனினும் அழகுதனில் அதிகம் இவன் என்று கொண்டாடும் பாண்டிய மன்னன் தன் மனைவியாகிய கேரளேந்திரன் புதல்வியோடு அரச சபைக்கு வருகிறான். நெற்றியிலும் உடம்பிலும் திருநீறு தரித்துத் தக்க அலங்காரங்களுடன் அவன் வருகிறான். தன் மனைவியுடன் பூஞ்சோலைக்குச் சென்று அங்குள்ள காட்சிகளை அவளுக்குக் காட்டுகிறான். இருவரும் அந்தக் காட்சிகளைப் பற்றி ஒருவருக் கொருவர் பேசிக் கொள்கிறார்கள்.

"மங்கையருள் மணியே, இங்கே பல மரங்களின் மலர்களையும் பார். முல்லை அரும்பு மடந்தையர் பல்லைப் போல மலர, அந்த வேடிக்கையைக் கண்டு நிற்கும் சண்பகமரங்கள் மலரோடு விளங்குகின்றன. உன் அழகைப் பார்க்க வேண்டுமென்று உடம்பெல்லாம் கண்ணாகி மயில்கள் வந்தன. அன்னங்கள் உன்னுடைய நடையைப்போல நடந்து காட்டுகின்றன" என்று மன்னன் கூறுகிறான்.

"அரசே, இந்தப் பூம் பொழில் மன்மதன் கொலுவிருக்கை போல விளங்குகிறது. குயில்கள் கானம் பாட, மயில்கள் ஆட, வண்டுகள் சுருதி மீட்டுகின்றன. மந்தாரை, கோங்கு முதலிய மரங்கள் மலர்கள் நிறைந்து, மன்மதன் கொலுவில் வந்திருப்பவர்களைப்போல் விளங்குகின்றன. வண்டுகளும் குயிலினங்களும் ஆணும் பெண்ணுமாக இணைந்திருக்கின்றன. புன்னை மலரிலுள்ள தேனை ஆண்வண்டுகள் பெடைகளுக்கு ஊட்டுகின்றன. ஆண்குயில் பெண் குயிலுக்குப் பழங்களைத் தந்து கொஞ்சுகிறது. மகளிருடைய பேச்சைப்போலப் பெண் கிளிகள் பேச, அதைக் கேட்டு ஆண் கிளிகள் பாராட்டுகின்றன" என்று அவன் மனைவி கூறுகிறாள்.

**அரசன்:** கிளி மொழியையுடையாய், மாதுளமலரின் இதழ்கள் உன் உதட்டை ஒவ்வாததனால் கிளிகள் அவற்றைக் கோதி, உன்னைப் போல இனிய மொழிகளை உள்ளங்குளிரப் பேசுகின்றன.

**அரசி:** மாமரத்தில் தளிருக்கிடையே சிவந்த பழம் தென்றற் காற்றால் அசைவது, இந்தப் பூம் பொழிலாகிய பெண் தங்களைக் காணப் பொன் தட்டிற் பழத்தை வைத்திருப்பதைப் போலத் தோன்றுகின்றது.

**அரசன்:** அதோ பார்: கோங்கரும்புகள் உன் நகிலைப் போலத் தோன்றுகின்றன.

அரசி: இங்குள்ள கொடிகள் பூங்கொத்துக்களைச் சுமந்து கொண்டு வளைந்திருப்பது, தங்களைக் கண்டு மாதர் வணங்குவது போல விளங்குகின்றது.

இவ்வாறு பேசியபடியே அரசன் சண்பகம், பன்னீர், முல்லை, சாதி ஆகிய மலர்களைத் தன் மனைவியின் கூந்தலில் சூட்டுகிறான்.

இத்தகைய நிலையில் நவமணிகளையும் ஆபரணங்களையும் விற்பனை செய்யும் செட்டிமார் இருவர் அங்கே வருகிறார்கள். அவர்கள் தம்மிடத்தில் உள்ள பொருள்களை அரசனுக்குக் காட்டுகிறார்கள்.

இங்கே ஒரு பகுதி விட்டுப் போயிருக்க வேண்டுமென்று தோற்றுகிறது. கதாசங்கிரகத்தில், "செட்டி இருவர் சிறக்கவே வந்து, சட்டமாய் அடுத்துச் சரங்களும் வனைந்த, பச்சைமா மணிகளும் பத்மரா கங்களும், உச்சித நகைகளும் உயர்ந்தநற் பொருள்களும், பாண்டியன் முன்பாய்ப் பட்சமாய் வைத்து, வேண்டிய பொருளுக்கு விலைசொல்லும் போது, வணிகர் இருவரும் வர்த்தகத் தொழிலில், துணிவுடன் பேசத் தொடங்கிய காலை, வேந்தன் மனத்தில் வேண்டிய நகைகளும், காந்திரத் தினங்களும் கைக்கொண்ட பின்பு" என்று இப்பகுதியைப்பற்றிய செய்தி வருகிறது. செட்டிமார் வருகையைத் தெரிவிக்கும் கீர்த்தனத்துக்குப் பின், அரசன் வேண்டிய நகைகளை வாங்கும் செய்தியைத் தெரிவிக்கும் பகுதி நூலில் இல்லை. அப்பகுதியே விட்டுப் போயிருக்க வேண்டும்.

வேண்டிய ஆபரணங்களைப் பெற்றுக்கொண்ட அரசன் செட்டிமாரை அனுப்பியபின், குறிசொல்லுகிற பூசாரிகள் இருவர் கையில் உடுக்கை ஏந்திக் கொண்டு அங்கே வருகின்றனர். உருமாலை அணிந்து திருநீறு தரித்து உடுக்கை அடித்துத் தெய்வங்களை அழைத்துப் பாடிக் குறி சொல்லும் இயல்பினர் அவர்கள்.

முதலில் கணபதியைத் துதித்துப் பின்பு கலைமகளையும் முருகனையும் மீனாட்சியையும் வேண்டுகின்றனர். பிறகு முத்தை வைத்துக் குறி பார்க்கத் தொடங்குகின்றனர். ராசிச்சக்கரம் ஒன்றை எழுதி, சிங்க ராசியிலே முத்து விழுந்தால் நல்ல குறியென்று முத்தைப் போடுகிறான் ஒரு பூசாரி. அவன் கேட்ட

ராசியிலேயே முத்து விழுகிறது. இப்படி மூன்று தடவை போட்டுப் பார்த்து மும்முறையும் அதே ராசியிலே விழுந்ததைக் கண்டு ஜயம், ஜயம் என்று பெருமகிழ்ச்சி கொள்கிறான். அந்த மகிழ்ச்சியோடு குறி சொல்லத் தொடங்குகிறான். "அரசே, நான் இவ்வுலகில் பல இடங்களுக்குச் சென்று மன்னவருக்கும் பிறருக்கும் மங்கைமாருக்கும் குறி சொல்லி அவர்கள் வழங்கும் பரிசுகளை வாங்கிக் கொண்டு வந்தேன். தங்களுடைய முகத்தில் உள்ள குறிகளையும் வேறு குறிகளையும் பார்த்துப் பயன்களை அறிந்தேன். தங்களுக்கு மங்கல நிகழ்ச்சிகளும் மங்கையர் உறவும் நன் மக்கட்பேறும் நாட்டுரிமையும் பிற ஊதியங்களும் விரைவிலே கிடைக்கும்" என்று கூறி முடிக்கிறான்.

குறிபார்க்கும் பூசாரிகள் தொன்று தொட்டே இந்த நாட்டில் இருந்து வருகிறார்கள். வேலன் என்று பழைய நூல்களில் பூசாரி வழங்கப் பெறுவான். முருகனை வழிபடுபவன் அவன். நெல்லை முறத்தில் இட்டுக் கட்டுப் பார்ப்பதும், கழற்சிக்காயைக் கொண்டு குறி பார்ப்பதும் பழையகால வழக்கங்கள். இந்நாடகத்தில் பூசாரி முத்தைக் கொண்டு குறிபார்க்கும் செய்தி வருகிறது.

பூசாரி குறிபார்த்துச் சொல்லும் நிகழ்ச்சிக்குப்பின் வாழ்த்து வருகிறது. அதனோடு நூல் முற்றுப் பெறுகிறது. தஞ்சையில் எழுந்தருளியுள்ள பிரகதீசுவரரையும் பிரகந்நாயகியையும் அவ் வாழ்த்துச்சிந்து குறிக்கிறது. சோழமண்டலமும், தஞ்சைமா நகரும், போசலகுலமும், சிவாஜி மன்னனும், அவன் செங்கோல் கொடி குடை முதலியனவும், அவன் புத்திர பௌத்திரர்களும், மருகரும், பிற சுற்றத்தாரும், மந்திரி தந்திரி சேனாபதிகளும், பிற ஜனங்களும், சதுரங்கங்களும் வாழவேண்டுமென்று புலவர் வாழ்த்துகிறார். தேசத்தில் எல்லோரும், ஆனினங்களும், தன தானியமும் பெருகவேண்டுமென்றும் வாழ்த்துகிறார். 'நான் மறைகள் வாழி, கவிராஜர்கள் வாழி' என்று வாழ்த்தி நாடகத்தை நிறைவேற்றுகிறார். புலவர் கவிராஜரை இறுதியில் வைத்து வாழ்த்தியிருப்பது பாராட்டுதற்குரியது.

இந்த நாடகத்தில் 2 வெண்பாக்களும், 2 அகவல்களும், 3 விருத்தங்களும், 5 கலித்துறைகளும், 4 கண்ணிப்பகுதிகளும், 14 சிந்துகளும், 13 வசனப்பகுதிகளும் உள்ளன. வசனப் பகுதிகள் முன்னுள்ள பாட்டின் கருத்தையே சொல்கின்றன.

# 4

## புரூரவ நாடகம்

இத்தொகுதியில் உள்ள மூன்றாவது நூல் புரூரவ நாடகம். சந்திர குலத்தில் உதித்தவனும் இதிகாச புராணங்களில் பேசப் பெறுபவனுமாகிய புரூரவஸ் என்பவனைப் பற்றியது இது. புரூரவ மன்னன் சிற்பிரபை என்பவளை மணந்து வாழ்க்கையில் சனீச்சர னுடைய தொடர்பால் பலவகைத் துன்பங்களை அடைந்த சரிதத் தைச் சொல்வது. இந்த நாடகம் முழுவதும் கிடைக்கவில்லை. 71 பாடல்களே கிடைக்கின்றன. கதையின் பெரும்பகுதி இதன் பின்புதான் இருக்கவேண்டும். இதில் கதாசங்கிரகம் இல்லாமை யால் கதையின் போக்கு இன்னவாறிருக்கும் என்று கிடைத்த பகுதியிலிருந்து தெரிந்துகொள்ள முடியவில்லை. இப்போது கிடைக்கும் பகுதியில் கூறப்பெறும் வரலாறு வருமாறு:—

### சுருக்கம்

இந்திரபுரி நகருக்கு அதிபதியாகிய புரூரவச் சக்கரவர்த்தி திக்குவிசயம் செய்து ஐம்பத்தாறு தேசமெல்லாம் ஒரு குடைக் கீழ் ஆண்டுவந்தான். ஒரு நாள் அவன் சிங்காதனத்தில் நவரத்தின கிரீடம் மின்ன அமர்ந்திருந்தான். வேதம் முழங்க, அரிவையர் மங்களம் பாட, அதிரதர் சமரதர் சூழ, பூவுலகத்து ஐம்பத்தாறு தேச மன்னரும் அடிதொழ, அர்த்தரதரும் மகாரதரும் கவிஞரும் சான்றோரும் உடன் இருக்க, மகளிர் உபயசாமரை வீச வீற்றிருந்தான். தன் ஏவலாளனிடம் தன் மந்திரியாகிய மதிதரனை அழைத்துவரக் கட்டளையிட்டான். அவன் அவ்வாறே அழைத்து வர, மதிதர னென்னும் அமைச்சன் வந்து அரசவையில் அமர்ந்தான்.

இவ்வாறு புரூரவ மன்னன் சபை கூடியிருக்கும்போது, இந் திர சபையில் நடனமாடும் ஊர்வசி பூவுலகை நோக்கி வந்தாள். இந்திரன் பூசை செய்து அருள்பெற்ற சோமனார் கோவிலுக்கு வந்து நியமத்துடன் இருந்து பூசை செய்யலானாள். நவதீர்த்தங் களை நினைந்து தியானித்து நீராடி, ஆடையணிந்து ருத்திராட்சம்

பூண்டு பஞ்சாட்சர மந்திரத்தை ஜபித்துத் திருநீற்றைப் பூசிப் பூசை செய்யத் தொடங்கினாள். தேன், பால் ஆகியவற்றால் அபி ஷேகம் செய்து, சந்தனந் தரித்து, மல்லிகை, முல்லை, இருவாட்சி, வில்வம், குடமல்லிகை, துளசி ஆகியவற்றால் அருச்சித்து, தூபதீப நைவேத்தியம் கொடுத்துச் சோடசோபசார பூசையை நிறை வேற்றினாள். "சங்கரா சரணம், என்றன் தயாபரனே சரணம், கங்கைவேணியா சரணம், கடவுளே சரணம், பித்தா, பிறைசூடி, பெருமானே" என்று பலவாறாகத் துதித்தாள்.

இவ்வாறு பூசை புரிந்துவிட்டு மீண்டும் தேவலோகத்துக்குப் போகும்போது ஓர் அசுரன் ஊர்வசியைக் கண்டு தாவிக் கட்டி னான். அஞ்சிய ஊர்வசி, "மனுவின்ஞானா, அபயம்" என்று கூவி முறையிட்டாள்.

அந்தக் கூக்குரலைக் கேட்ட மந்திரி, "யாரோ ஒரு பெண் ஆகாயத்தில் அபயமென்று அலறுகின்றாள்" என்று சக்கரவர்த்தி யினிடம் தெரிவித்தான். அதைக் கேட்ட மன்னவன் மனம் நொந்து அந்தக் கணத்தில் தன் தேரில் ஏறி அதை வானவெளியிற் செலுத்தி அந்த அசுரனை எதிர்த்தான். அவனோடு போர்புரிந்து அவனைக் கொன்று ஊர்வசியை மீட்டான். அப்பால் அவளை இந்திரலோகத்துக்கு அழைத்துச் சென்று இந்திர சபையில் விட் டான். ஊர்வசிக்கு நிகழ்ந்த ஆபத்தையும் மனுவின்ஞானனாகிய புரூரவமன்னன் செய்த உபகாரத்தையும் அறிந்த இந்திரனும் பிற தேவர்களும், "நீ செய்த உபகாரத்தை என்றும் மறவோம்" என்று கூறி அவனை வாழ்த்தினார்கள்.

புரூரவ மன்னன் தேவலோகத்தை விட்டுத் தன் நகரத்துக்கு மீளும்போது விதர்ப்ப தேசத்தின் வழியே வந்தான். அந்த நாட்டு அரசனாகிய சந்திரலோசனனுக்குத் தவத்தினாற் பிறந்த சித்திரசேனை என்ற அழகிய மகள் மணப் பருவம் எய்தி யிருந்தாள். அவள் நான்கு சமஸ்யைகளை எழுதிக் கட்டி, அவற்றிற்குத் தக்க விடைகளைச் சொல்லுபவரையே மணம்புரிவதாக உறுதி பூண் டிருந்தாள். அவள் விருப்பப்படியே சுயம்வரம் நடைபெற அவள் தந்தை ஆவன செய்தான். ஐம்பத்தாறு தேசத்து அரசரும் வந்தார்கள். புரூரவ சக்கரவர்த்தியும் சென்றான்.

சிற்பிரபை மன்னர்கள் கூடியிருந்த சபையில் நான்கு சமஸ்யை களை வெளியிட்டாள்; (1) "இங்கும் உண்டு, அங்கும் உண்டு-இது என்ன ?", (2) "இங்கும் இல்லை, அங்கும் இல்லை - இது என்ன ?", (3) "இங்கு உண்டு, அங்கே இல்லை-இது என்ன ?", (4) "அங்கே உண்டு, இங்கே இல்லை - இது என்ன?" என்ற அந்த நான்கு வினாக் களுக்கும் விடை கூறமுடியாமல் மன்னர்கள் யாவரும் விழித் தார்கள்.

அப்போது புரூரவ சக்கரவர்த்தி விடைகூறத் தொடங்கினான். "முதலாவது இங்கும் உண்டு, அங்கும் உண்டு என்பது: அருந் ததிக்கு இணையாகிய மனைவியுடன் இல்வாழ்வு நடத்தும் ஒரு வனுக்கு இக வாழ்விலும் இன்பம் உண்டு, மறுமையிலும் இன்பம் உண்டு என்பதைக் குறிப்பது. இரண்டாவது, இங்கும் இல்லை, அங்கும் இல்லை என்பது: சிறிய பறவையைக் கொன்று தின்னும் வேடனுக்குப் பசி நீங்காமையால் இவ் வுலகத்திலும் இன்பம் இல்லை, உயிர்க் கொலை செய்த பாவத்தால் மறுமையிலும் இன்பம் இல்லை என்பதைக் குறிப்பது. மூன்றாவது, இங்குண்டு, அங் கில்லை : தங்கள் உடம்புக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொண்டு, தம் நலமே பேணிப் பிறரிடம் அன்பு செய்யாதவர் களுக்கு இவ்வுலகில் இன்பம் உண்டாகலாம்; மறுமையில் இன்பம் இல்லை என்றபடி. நான்காவது அங்குண்டு, இங்கில்லை என்பது : தன் கைப்பட்ட பொருளை யெல்லாம் தான் நுகராமல் பிறர்க்கே உதவி வாழ்பவன் இவ்வுலகில் இன்பம் பெறுவிட்டாலும் மறுமை யில் இன்பம் அடைவான் என்றபடி" என்று நான்குக்கும் ஏற்ற விடைகளைச் சக்கரவர்த்தி கூறவே, யாவரும் மகிழ்ந்தனர். தேவர் மலர்மாரி பொழிந்தனர். சிற்பிரபைக்கும் புரூரவ மன்னனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. அவ் விருவரும் இந்திரபுரிக்கு வந்து இன் புற்று வாழ்ந்தனர். இப்படி வாழும் காலத்தில் சிற்பிரபை கரு வுற்றாள். பத்து மாதம் நிறைந்த பின் அவள் இரண்டு ஆண் மக வைப் பெற்றாள். மனைவி மக்களுடன் நீதிநெறி தவறாமல் புரூரவ மன்னன் அரசு செலுத்திக்கொண்டு வந்தான்.

ஒருநாள் மன்னன் சத்தியதரன், தர்மசீலன் என்ற இரண்டு பாலருடனும் மனைவியுடனும் மந்திரியாகிய மதிதரன் முதலியவ ருடனும் இருந்தபோது, தவத்திற் சிறந்த உபரிசனர் என்ற

முனிவர் அங்கே வந்தார். மெய்யில் திருநீறும் கையில் கமண்டலமும் இடையில் புலியுரியும் முடியில் சடையும் தரித்த திருக்கோலத்துடன் அவர் எழுந்தருளினார். சக்கரவர்த்தி அவரை வரவேற்று, "மாதவா போற்றி போற்றி, மாமுனி நாதா போற்றி, தாதையே போற்றி" என்று துதித்துச் சிங்காதனத்தில் அமரவைத்து, "அடியேனிடம் தேவரீர் எழுந்தருளியதன் காரணம் யாதோ?" என்று பணிவுடன் கேட்டான். "குற்றமற்ற மனத்தோடு நீதி தவறாமல் செங்கோல் செலுத்துகின்ற நிருபனே, நான் சொல்வதைக் கேள். ஆதித்தன் மகனாகிய சனி, பிராமண உருவத்தில் இங்கே வந்து உன்னைத் தொடர்ந்து, உன் மனைவி மக்களைப் பிரித்து விடுவான். ஆடி மாதம் முப்பதாந் தேதி ஆதித்த வாரத்தில் உன்னைத் தொட்டுத் துன்பத்தைக் கொடுப்பான்" என்று முனிவர் கூறினார். அதனைக் கேட்ட அரசன் உள்ளம் கலங்காமல், "பூமியில் மக்களாகப் பிறந்தவர்கள் இவைகளுக்கெல்லாம் அஞ்சி அழுதால் விடுமோ? பிரமதேவன் எழுதியபடியே யாவும் முடியும்" என்று சொல்ல, உபரிசனர் விடைபெற்றுக்கொண்டு சென்றார்.

அப்பால் சக்கரவர்த்தி பாவமே சாராதவண்ணம மிக்க கவனத்தோடு பூவுலகை ஆண்டு வந்தபோது சனீச்சரன் பிராமண உருவத்தில் வந்தான். சங்கரனும் பிரமஹத்தி தோஷத்தால் கபாலத்தில் பிக்ஷையேற்று உண்டு சுடலையில் தங்கும்படி செய்தவனும், ஆதிமூலம் என்று அலறிய யானைக்கு உதவ வந்த திருமாலை உறியில் பால் திருடச் செய்தவனும், முருகவேளைக் காட்டில் வேங்கை மரமாக நிற்கச் செய்தவனும், மூலப்பொருளாகிய பரமசிவனைப் பிட்டுக்காக மண் சுமந்து பாண்டிய பூபாலனால் அடிபடச் செய்தவனும், நீல நிறமுடையவனும், ராவணன் சீதையைத் தரையோடு எடுத்துச் செல்லச் செய்தவனுமாகிய சனீச்சரன் சக்கரவர்த்தியைப் பிடிக்கும் பொருட்டு அவ்வாறு வந்தான். முன்னால் உபரிசனர் சொன்ன நாளில் அந்தப் பிராமணன் வந்ததைக் கண்டு, சனியென்று அறிந்துகொண்டு, முன்னே சென்று உபசரித்து வணங்கி ஆசனத்தில் இருக்கச்செய்து, "இங்கே எழுந்தருளிய காரணம் என்ன?" என்று அரசன் கேட்டான். சனிபகவான், "உண்மை தவறாத சக்கரவர்த்தியே, நான் உன்னைப் பிடிப்பதாக இருக்கிறேன். மூப்பிலே வரட்டுமா, இளமைக் காலத்திலே

வரட்டுமா ? உன்னுடைய விருப்பம் யாது ?" என்று வினவினன். சக்கரவர்த்தி அது கேட்டு, "தாய் போன்ற அன்புடனே என்னை ஒரு பொருட்டாய் எண்ணி வந்து இதனைச் சொன்ன ஆண்டவரே, மூப்புப்பருவத்தில் வந்தால் உம்முடைய கடுமையைத் தாங்க மாட்டேன் ; இளமையிலே வந்தருள்க" என்று தைரியத்துடன் இயம்பினன். அதைக் கேட்டுச் சனிபகவான் சென்றான்.

சனியன் தன் வேலையைச் செய்யத் தொடங்கினன். காட்டு விலங்குகள் நாட்டிற் புகுந்து பயிரைப் பாழ்படுத்துவதாகக் குடிமக்கள் வந்து மன்னனிடம் முறையிட்டுக் கொண்டார்கள். முழங்காலுக்கு மேலே ஆடையை உடுத்து, குலுங்க நடை நடந்து, கொன்னிப் பேசிக்கொண்டு வந்த குடிகள், மானும் கலையும் மரையும் புலியும் ஆனையும் கரடியும் சிங்கமும் செய்யும் கொடுமைகளையும், கிளியும் கிரியும் காக்கைகளும் அணிலும் பயிரை அழிப்பதையும் எடுத்துச் சொன்னார்கள். அரசன் அதனைக் கேட்டு, "நாம் நாளைக்கு வேட்டைக்கு வந்து மிருகங்களை அழிக்கிறோம்" என்று சொல்லி யனுப்பினன். அப்பால் மன்னன் மந்திரியை அழைத்து, "என் மனத்தில் நினைத்தவற்றையெல்லாம் குறிப்பினல் அறியவல்ல அமைச்சனே, காட்டில் இருந்த புலி யாளி சிங்கம் மான் கரடி யானை மரைகள் எல்லாம் தினந்தோறும் வந்து நாட்டிலுள்ள பயிரைத் தின்று அழிக்கின்றனவென்று குடிமக்கள் வந்து சொன்னார்கள். காட்டுக்குப் போய் வேட்டையாடி வருவதற்குரிய வேட்டுவர்களை வரும்படி முரசறைவிப்பாயாக!" என்று கட்டளையிட்டான். மந்திரி அவ்வாறே செய்ய, அரசன் வேட்டையாட வல்லவர்களுடன் வேட்டைக்குப் புறப்பட்டான். யானை பிடிப்பவர், அதனைத் துரத்துபவர், மானைக் குத்துபவர், அதன்மேல் அம்பை எய்பவர், புலியின்மேல் பாய்பவர், ஆண்புலியைக் கொல்பவர், கலைமானைப்பிடிப்பவர், கரடியை அடிப்பவர் ஆகப் பலதிறப்பட்ட வேட்டுவர்கள் அரசனுடன் சென்றார்கள். காட்டில் வலை கட்டியும், வேலினலும் வாளினலும் விலங்குகளைக் குத்தியும், வெட்டியும் அவர்கள் வேட்டையாடினர்கள். இவ்வாறு ஒருநாள் முழுவதும் வேட்டையாடிய பின் அரசன் வேட்டுவர்களுடன் நகரத்தை வந்தடைந்து, "நாளைக்கும் வேட்டைக்குச் செல்லவேண்டும்" என்றான். ஆனல் சனிபகவானுடைய சம்பந்தத்தாலே உடனே அச்சத்தைக் கொண்டு மறுநாள் செல்லுவதை நிறுத்தி விட்டான்.

இரண்டாவது நாள் வேட்டைமேற் செல்வதற்கு அஞ்சி அரசன் நின்ற செய்தியைப் பகைமன்னர்கள் அறிந்தார்கள். சமரினிற் பின் வாங்காத புரூரவ சக்கரவர்த்திக்கு எதிரே வருவதற்கு அஞ்சியிருந்த அப் பகை மன்னர் தங்கள் படைகளுடன் வந்து அந்த நாட்டைக் கைப்பற்றி நகரைச் சூழ்ந்தார்கள். அவர்கள் வந்து சூழ்ந்ததை அமைச்சன் சக்கரவர்த்திக்குச் சொல்லியனுப்பி, என் செய்வதென்று கேட்டுவரச் சொன்னான். கட்டியக்காரன் இச் செய்தியைப் புரூரவ அரசனிடம் வந்து சொல்ல, அவன் கேட்டு, "நாளைக் காலையில் ஆஸ்தானத்துக்கு வந்து செய்ய வேண்டியதைப் பற்றித் தெரிவிக்கிறோம் எனச் சொல்வாயாக" என்று கூறி அனுப்பினான்.

வாடிய இருந்த மன்னனைக் கண்டு அவனுடைய மனைவியாகிய சிற்பிரபை, "மன்னரும் மண்டலீகரும் வானவர்க்கு இறைவனும் மெச்சும் என் பிராணகாந்தரே, தேவரீருடைய தாமரைமலரைப் போன்ற திருமுகத்தில் வாட்டம் உண்டாகக் காரணம் என்ன?" என்று கேட்டாள். புரூரவன், "சந்திரலோசனனுடைய மகளாகிய சிற்பிரபையே, கேள். இன்றோடு இந்திரபுரியின் தொடர்பு நமக்கு ஒழிந்தது. நம்மை அடுத்தவர்கள் இப்போது பகைத்தார்கள். பிரமதேவன் விதித்த விதி தப்பாது" என்று சொல்லக்கேட்டு அரசி மனம் நைந்து புலம்பலானாள். "அரசர்க்கரசே! என் செய்வேன்! பகைமன்னர் எதிர்த்தார்களே. ஆறில் ஒரு கடமை கொண்டு ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் பணிந்து நிற்கப் பகைமன்னரை வென்று எட்டுத்திக்கினிலும் சென்று வெற்றி பெற்றீர்கள். ஆராய்ச்சி மணிகட்டி நீதி வழுவாமல் அரசுபுரிந்தீர்கள். வீராதி வீரர், சிங்கக் குட்டி என்று புகழ் பெற்றீர்கள். இப்போது இப்படி வந்து விட்டதே! நான் என்செய்வேன்! இது நான் செய்த பாவத்தின் பயனோ? புண்ணியம் செய்யாமல் இருந்தேனோ? புலவர் மனம் நோகும்படி புன்சொல் சொன்னேனோ? யாருக்கு என்ன இடர் செய்தேனோ?" என்று கூறி வருந்தினாள்.

அரசன் மந்திரியை அழைத்து, "நம்மிடம் உள்ள படை வீரர்களுக்கு இதுவரைக்கும் கொடுக்கவேண்டிய சம்பளத்தோடு இன்னும் ஆறுமாதச் சம்பளமும் சேர்த்துக் கொடுத்து விடுவாயாக.

வர்த்தகர்களுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை யெல்லாம் கொடுத்துவிடு'' என்று கட்டளையிட, மந்திரியும் கட்டியக்காரனைக் கொண்டு அவ்வண்ணமே செய்வித்தான்.

அரசன் எல்லோருக்கும் நிதியை வழங்கிய பெருந்தன்மை யையும் அதனால் யாவரும் அவனுக்குத் துணையாக நிற்கத் துணிந் திருப்பதையும் அறிந்த பகையரசர்கள், "இவ்வளவு நல்ல மன்ன ருக்குத் தீங்குசெய்ய நினைத்தோமே! நாளைக்கு அவரை நேரே சந்தித்துச் சமாதானம் செய்துகொள்ள வேண்டும்'' என்று எண்ணியிருந்தார்கள். ஆனால் சனிபகவான் மன்னவன் மனத்திற் புகுந்தமையால் அவன் தன் ம டம் சென்று, ாறும் சாதகமாக இருந்த அரசர்கள் யாவரும் இப்போது சதி செய்ய நினைந்தார்கள். அவர்களிடம் அகப்பட்டால் நம்மை ஏவலாளர் களாக்கிவிடுவார்கள். அதற்குமுன் நாம் ஒருவரும் அறியாமல் தப்பிப் போகவேண்டும்'' என்று சொன்னான். சிற்பிரபை அதற்கு உடம்பட்டாள். உடனே சக்கரவர்த்தியும் மனைவி மக்களும் புல் காரருடன் புல்காரராக மறைந்து நகரை விட்டுப் புறப்பட்டுக் கோட்டையைத் தாண்டி வந்தார்கள். அரசன் தன் முடியைக் கழற்றிவிட்டான். யாவரும் கழுத்தில் அணிந்த தாழ்வடம் முதலிய அணிகளைக் கழற்றி வைத்தார்கள். அரசனும் அவன் மனைவியும் ஆளுக்கொரு பிள்ளையாகத் தூக்கிக் கொண்டு புறப்பட்டார்கள். தாம் அரசாண்ட நகரையும் அதில் இருந்த ரத கஜ துரக பதாதிகளை யும் பரிஜனங்களையும் எல்லாவிதமான பாக்கியங்களையும் விட்டுச் சென்றார்கள். ஒன்றும் அறியாப் பேதையர் போல வேதனையுடன் நகரை நீங்கிப் போனார்கள். "சிவபெருமானே, தீனரக்ஷகனே, உமாபதியே, தயாபரனே'' என்று கடவுளை நினைந்து, "முன்பு செய்த பாவத்தின் பயன் இது'' என்று எண்ணியபடியே அர சன் தேவியுடன் நடந்தான். இரவில் காட்டில் அவர்கள் ஆளுக்கு ஒரு பிள்ளையாகத் தூக்கிச் செல்லும்போது அவர்கள் படும் துய ரைக் கண்டு சனி பகவான் அங்கே தோன்றி ஒரு பிள்ளையை வாங்கிக்கொண்டு உடன்வந்தான்; செல்லும் வழியைக் காட்டிக் கொண்டே வந்து விடிந்தவுடன் அவர்களை விட்டுச் சென்றான்.

அப்போது இளைப்பு மிகுதியால் மூத்த பிள்ளை தாய் தந்தை யரைப் பார்த்து, "தந்தையே, தாயே, எனக்கு வயிறு குழைந்து

பசி கண்ணை மறைக்கிறது: உயிர் சோருகிறது. இந்தப் பசி தீர ஏதாவது ஒரு வழி சொல்லவேண்டும்'' என்றான். பின் தாயின் முகத்தைப் பார்த்து, ''என்னைப் பெற்ற அன்னையே, எனக்குப் பசி அதிகமாக இருக்கிறது'' என்று கூறினான்.

**அன்னை :** பசியாகிறதென்றால் இந்தக் கடுமையான கானகத்தில் அன்னம் அகப்படாதே, மகனே.

**பிள்ளை :** அன்னம் அகப்படாதென்றால், என் பசியைப் போக்க என்ன ஆதரவு?

**அன்னை :** ஆதரவு சிவபெருமானையன்றி வேறு ஒருவர் உண்டோ? அப்பா, பசியைப் பொறுத்துக் கொள்.

**பிள்ளை :** பொறு பொறு என்றால் எப்படிப் பொறுத்துக் கொள்வது? அதற்குரிய வழியை நான் அறியச் சொல் அம்மா.

**அன்னை :** நான் என்ன சொல்வது? ஆதிசிவன் கற்பித்த இதற்கு யார் என்ன செய்வார், ஐயா!

**பிள்ளை :** ஐயா ஐயா என்றால் அரும்பசி நிற்குமோ? சிறிது அன்னமாகிலும் சமைத்துத் தருவாய், தாயே!

**அன்னை :** அன்னம் சமைக்க இங்கே தண்ணீர், அரிசி, நெருப்பு, அடுப்பு ஆகியவை இல்லையே, ஐயாவே!

**பிள்ளை :** அன்னையே, அரிசி இல்லை யென்றால் அரும்பசியினால் துடிதுடிக்கிறேன்; என் செய்வேன்!

**அன்னை :** பசி தகித்தால் நான் ஏது செய்வேன்! இன்னும் அரை நாழிகை பொறுப்பாயாக!

**பிள்ளை :** அம்மா! அரை நாழிகை பொறுக்கலாகுமோ? என் பசி ஆற்ற முடியாதே!

**அன்னை :** உன் பசியை ஆற்ற உலகத்தை ரட்சிக்கும் கடவுளாலே முடியும் அன்றி என்னாலே ஆவது என்ன ஐயாவே!

**பிள்ளை :** பட்டினியினால் இரண்டு காதும் பக்கென்று அடைக்கின்றனவே!

**அன்னை :** அடைத்தால் அது உலகத்தைப் படைத்தவன் செயல், மகனே; என்னால் ஆவது உண்டோ?

**பிள்ளை :** நீ என்னை வைதாலும் சரி; நான் என் துன்பத்தைச் சொல்கிறேன். என் கையும் காலும் குரக்குவலி வாங்குகின்றன அம்மா.

அன்னை : ஆலம் உண்ட சிவபிரான் திருவருளால் உண்டான கோலமோ இது? நான் அறியேனே!

பிள்ளை : பாலாகிலும் கொடு; கொஞ்சம் சோறாகிலும் தா; வெறும் நீராகிலும் தா.

அன்னை : நீர் தாலாமென்றால் இங்கே ஆறோ குளமோ ஒன்றும் இல்லையே! நடக்காத வார்த்தைகளைச் சொன்னாயே!

பிள்ளை : என் முகத்தைப் பாராமல், நடக்காது என்று சொல்கிறாயே!

அன்னை : நான் பாராவிட்டாலும் ஆரா அமுதராகிய சிவபிரான் பாராமல் இருப்பாரோ? பதறாதே மகனே. பொறு பொறு.

சிற்பிரபை, மாலையைப் போலத் துவண்டுபோன மக்களைப் பார்த்து, 'எங்கள் சீலமும் வீறும் செல்வச்சிறப்பும் போக நமக்கு இப்படியும் ஒரு காலம் வந்ததே!' என்றெண்ணித் தன் நாயகனைப் பார்த்துத் துயருற்றுச் சொல்லலானாள்.

நாடகம் இதனுடன் அபூர்த்தியாக நிற்கிறது. மேலே புரூரவன் அடைந்த துன்பங்களும் மீட்டும் அவன் தன் நகரம் வந்த செய்தியும் உள்ள பகுதி ஏட்டில் இல்லை.

## வேதத்தில் உள்ள செய்தி

புரூரவ சக்கரவர்த்தியைப் பற்றிய செய்திகள் வட மொழி தென் மொழி நூல்கள் பலவற்றில் காணப்படுகின்றன. ருக் வேதத்தில் இம் மன்னனைப்பற்றிய செய்தி வருகிறது (1 : 31; 10: 95.) அங்கே இவன் சுக்ருத்தென்றும் அக்கினியின் நண்பனென்றும் ஊர்வசியின் காதலனென்றும் இளையின் மகனென்றும் சொல்லப் பெறுகிறான்.

## வியாச பாரதம் கூறும் செய்தி

வியாசர் இயற்றிய மகாபாரதத்தில் குருகுல வரலாறு கூறும் இடத்தில் புரூரவ மன்னன் வரலாறு வருகிறது. * "வித்வானாகிய புரூரவன் என்பவன் இளையினிடம் பிறந்தான். அந்த இளை அவனுக்கு மாதாவாகவும் பிதாவாகவும் இருந்தாளென்று நாம்

* ஆதிபர்வம், 69-ஆம் அத்தியாயம், ம. வீ. ரா. பதிப்பு, ப. 258-9

கேட்டிருக்கிறோம். பதின்மூன்று ஸமுத்ர த்வீபங்களை வசப் படுத்தின பெரிய யசஸுள்ள புரூரவன், தான் மனுஷ்யனாக இருந்து மனுஷ்யரல்லாத பிராணிகளினால் ஸஹாயமாக வேண்டப் பட்டான். பராக்ரமத்தினால் கர்வங்கொண்ட அந்தப் புரூரவன் பிராமணர்களுடன் சண்டை செய்தான். அவன் பிராமணர்கள் கதறியும் அவர்களுடைய ரத்தினங்களையெல்லாம் அபஹரித்தான். ராஜாவே! ஸநத் குமாரர் பிரம்மலோகத்திலிருந்து வந்து அவனுக்குச் சாஸ்திரத்தைப் போதித்தார். அவன் அதையும் அங்கீகரிக்கவில்லை. பிறகு, பொருளாசை கொண்டவனும் பலத்தின் கர்வத்தினால் விவேகம் தப்பினவனுமாகிய அவ்வரசன், கோபித்த மஹாரிஷிகளினால் சபிக்கப்பட்டு உடனே அழிந்து போனான். அந்தச் சக்கரவர்த்தியானவன் ஊர்வசியுடன் சேர்ந்து, கந்தர்வலோகத்திலிருந்த மூன்று விதமாகப் பிரிக்கப்பட்ட அக்னிகளைச் சாஸ்திரப்படி யஜ்ஞம் செய்வதற்காகக் கொண்டு வந்தான். அந்த இளையின் புத்திரனாகிய புரூரவனுக்கு ஊர்வசியினிடம் ஆயுஸ், தீமான், அமாவஸு, த்ருடாயுஸ், வனாயுஸ், சதாயுஸ் ஆகிய ஆறு குமாரர்கள் பிறந்தார்கள்'' என்பது அப் பகுதி.

## வில்லிபாரதம் கூறுவது

தமிழில் வில்லிபுத்தூரார் இயற்றிய பாரதத்தில் குருகுலச் சருக்கத்தில் புரூரவனைப்பற்றி வரும் பகுதி வருமாறு:

வளைநெ டுஞ்சிலைக் கரத்தினன் மநுஅருள் மைந்தன்
உளைஎ ழும்பரித் தேரினன் உறுவதொன் றுணரான்
விளைய ருந்தவ விபினமுற் றம்பிகை விதியால்
இளையெ னும்பெயர் மடவரல் ஆயினன் என்ப. (1)

மார காகளம் எழுவதோர் மதுமலர்க் காவில்
தார காபதி புதல்வன்அத் தையலைக் கானா
வீர காமபா ணங்களின் மெலிவுற மயங்கித்
தீர காமமும் செவ்வியும் மிகும்படி திளைத்தான். (2)

புதனும் அந்தமென் பூவையும் புரூரவா வினைத்தம்
சுதனெ னும்படி தோற்றுவித் தனர்அவன் தோன்றி
இதந லம்பெறும் அழகினும் திறலினும் இலங்கி
மதன னும்கலை முருகனும் எனும்படி வளர்ந்தான். (3)

பொருப்பி னைச்சிற கரிந்தவன் புரத்துமங் கையருள்
உருப்ப சிப்பெயர் ஒண்டொடி உருவினிற் சிறந்தாள்
தருப்பொ ழிற்பயில் காலையில் தானவர் காணு
விருப்பு றக்கவர்ந் தேகினர் அவளுடன் விசும்பில். (4)

கொண்டு போதலும் அபயமென் றுருப்பசி கூவ
அண்டர் யாவரும் அஞ்சினர் அவருடன் அடுபோர்
வண்டு சூழ்குழல் அணங்கை இம் மதிமகன் மகனும்
கண்டு தேர்நனி கடவினன் அசுரர்மெய் கலங்க. (5)

நிறந்த ருங்குழல் அரிவையை நிறுத்திவாள் அவுணன்
புறந்த ரும்படி புரிந்தபின் புரந்தரன் தூதால்
மறந்த ருங்கழல் மன்னவன் மண்மிசை அணைந்து
சிறந்த அன்பொடத் தெரிவையை நலம்பெறச் சேர்ந்தான்.(6)

மாயன் ஊருவின் வந்தருள் அந்தமான் வயிற்றின்
ஆயு வென்றொரு செம்மலை அம்மகன் அளித்தான்
தேயு வும்பல தேவரும் மகிழமற் றிவனே
மேய வண்புகழ் வேந்தரில் வேள்வியால் மிக்ககோன். * (7)

அன்னநடை அரம்பைதனை அவுணாகவாந்
திட இமையோர் அரசுக் காக
முன்னமவ ருடன்பொருது சிறைமீட்டான்
நம்குலத்து முதல்வன் அன்றோ? †

## செவ்வைச்சூடுவார் பாகவதம்

பாகவதத்திலும் ஒன்பதாவது ஸ்கந்தத்தில் புரூரவன் வரலாறு வருகிறது. தமிழில் செவ்வைச்சூடுவார் இயற்றிய பாகவதத்தில் 9-ஆவது கந்தம் 12-ஆவது சந்திரன் மரபு உரைத்த அத்தியாயத்தில் புரூரவன் வரலாறுரைக்கும் பகுதி ‡ வருமாறு :—

பெருந்திறற் புதனெனும் பெயரி னுன்முனம்
திருந்திழை இளையெனச் செப்பு மங்கையாம்
மருந்துறழ் சாயலை மணந்து பெற்றனன்
பொருந்தலர் வணங்குவேற் புரூர வாவையே. (1)

---

* வில்லிபாரதம், ஆதிபருவம், குருகுலச் சருக்கம், 7–13.

† ஷை. கிருட்டினன் தூது. 28. அரம்பையென்றது இங்கே தெய்வப் பெண் என்ற பொருளுடையது; ஊர்வசியைக் குறித்து நின்றது. ‡ பாடல், 13-40.

அன்னவன் நற்குணம் அறிந்து நாரதன்
பொன்னகர் அடைந்தனன் புகழ்ந்து பாடினன்
மன்னெழில் உருப்பசி மகிழ்ந்து கேட்டனள்
துன்னழல் மெழுகினிற் சோர்ந்து நின்றனள். (2)

மருவிய மித்திரா வருணர் என்பவர்
உருகுதல் அறிந்தவண் உரைத்த சாபத்தால்
தரைமிசை உருப்பசி சார்ந்து நோக்கினள்
அரசனை அரசனும் அவளை நோக்கினன். (3)

கண்டானால் வியப்புற்றான் கவினாம் அமுதுகண்ணால்
உண்டான்போ லுள்ளுவந்தான் ஒளியிழையிங் கென்உயிராய்த்
தண்டாமல் உறைதியெனத் தாங்கரிய காதலுரை
விண்டான்அவ் வுரைகேட்ட மெல்லியலும் விள்ளுவளால். (4)

அங்கண்நில வேந்தேநின் அழகினலங் கண்டணையத்
துங்கஎழில் மதனுமொரு தோகையுருக் காதலிப்பான்
இங்கணெனிற் றேயநனி இருந்தவத்தி னாற்கிடைத்தாய்
மங்கையர்யார் நின்னகலம் மருவாமல் ஒழிபவரே. (5)

உன்னவரும் பல்சுவையாம் உணவொழிந்து நெய்யருந்தி
நின்னகலம் புல்லிப்பன் னெடும்பகல்யான் இவணிருப்பல்
என்னொடுநன் னேயம்நல்க இயைந்தஇந்த யாடிரண்டும்
மன்னவர்கள் மன்னஎனை மகிழ்ந்துறையக் காத்தருளே. (6)

கோடாத செங்கோல்கொள் குரிசிலென நிலவரைப்பின்
வாடாமல் உணவுதவ வந்தஇந்த யாடகவின்
தேடா திருப்பினும்நீ சேர்ந்ததுகில் இன்றிவர
நாடாத நின்னுருவம் நாடினும்நான் தீர்குவனால். (7)

என்றுநய மொழிகூறி இயைந்தெழில்செய் கின்றஇரு
குன்றினொடும் இகல்குன்றங் கொடுஞ்சமருற் றுடற்றுதல்போல்
வென்றிதரு வேலோன்றன் விளங்குமணி சேர்புயத்தின்
நன்றிதரு கொங்கையிணை னொருங்கநலன் உண்டனளே. (8)

இன்னணம் வேந்தும்அணி இலங்கிழையும் இன்பநலம்
மன்னமுதம் உண்டுநெஞ்சு மகிழ்ந்துநெடு நாள்கழித்தார்
உன்னிவிசும் பாரரசன் உருப்பசியை நீத்தலிற்றன்
பொன்னகரும் வான்செவ்வி பொலிந்திலதென் றேவுதலால். (9)

கந்தருவர் அன்னோர்கள் கலந்துறையும் நள்ளிரவில்
அந்தமுறு பேர்யாட்டை அடைந்தரற்ற வவ்வுதலும்
சிந்தைமகிழ் செய்வோனைச் சிறந்தஎன்றன் ஆட்டினையார்
வந்துபிடித் தார்கொலென மடந்தையது நேர்ந்தனளால். (10)

தோய்ந்துறையும் அவ்வேந்தன் துகிலொழிய வல்லைஎழுந்
தாய்ந்தவர்கள் விட்டேகும் ஆடுகொடு மேவுதலும்
வாய்ந்ததொரு மின்றனால் வனை துகிலில் லாவேந்தை
ஏந்தெழிலாள் கண்டனளங் கிருவி[illegible]ம்பின் ஏகினளே. (11)

முன்பொருந்து முருந்துழற்வெண் முகிழ்நகையங் கேருதலும்
என்பொருந்தி வைகாமல் எழுந்தனளென் றென்றிரங்கிப்
பொன்பொருந்திப் போக்கிமிகப் புலம்பும்வறி யோர்களென
மன்பொருந்தும் மையல்தனை வழங்கஎவர் வல்லுநரே. (12)

ஏங்கும்எழும் ஓடலுறும் இருக்கும்இறை பதைபதைக்கும்
ஓங்கும்ஒளி நுண்ணுசுப்பாள் உருவெளியைக் கண்டுவக்கும்
வாங்கும்இடை மின்ஒளித்து வந்தனையோ என்றுவக்கும்
நீங்கும்உயிர் மீண்டுவந்து நிலைத்ததெனக் கென்றிசைக்கும். (13)

சூட்டுமலர் புனைதாழ்மென் சுரிகுழலின் மூரலமிழ்
தூட்டஅணு காதொழியின் உய்யேன்என் றிருகரமும்
நீட்டியணை யத்துணைந்து நினைத்துருவு காண்கிலனாய்
மீட்டும்எனைக் கரந்தனையோ எனஉள்ளம் மெலிந்திடுமே. (14)

கொன்னஞ்சு கொடுபொன்னங் குழைபொருத அயில்விழியும்
மின்னஞ்சு கின்றஒரு மெல்லிடையும் கொங்கையுங்கொண்
டென்னெஞ்சு தான்கொடுசென் றிரங்காமே போய்க்கரந்த
கன்னெஞ்சு கொண்டனையால் காட்டுவரார் எனக்கலுழ்மே. (15)

மையோடும் ஒளிகூர்வேல் வரிவிழிமுன் புல்லியது
மெய்யோஅஃ தன்றாயின் விளங்குகன வாகியதோர்
பொய்யோஇஃ தென்றெனக்குப் புலப்படுதல் இல்லையெனும்
ஐயோ மதன்கணையை ஆர்விலக்கு வார்எனுமே. (16)

தண்காட்டில் மேவந்து தயங்குகிளி காள்உமைப்போல்
பண்காட்டும் தீஞ்சொலெழிற் பாவைஎங்ஙன் பகருமெனும்
வெண்காட்டும் திங்கள்முக மெல்லியலை அன்னவள்தன்
கண்காட்டும் மான்காள்நீர் காட்டாத தென்எனுமே. (17)

பாட்டுவரி வண்டுநனி படியுமத கரிஉனது
கோட்டினண்ணுந் தெழுந்தமுலைக் கொம்பினைநீ கண்டதுண்
காட்டுதிநீ ஈங்கென்னும் கலந்தபிடி காள்உமைப்போல் [டோ
பூட்டுமிழை யாள்நடந்து போயநெறி ஏதெனுமே. (18)

காந்தளைநேர் கரதலத்தாள் கரந்தவழி மாமலைவாய்க்
காந்தளையின் வாழுரிகாள் கண்டீரோ கழறும்எனும்
மாந்தளிர்போற் பொலமேனி மயிலையெங்குந் தேர்ந்துநறை
மாந்தளிகாள் என்னைகொலோ வழங்காத வாறெனுமே. (19)

இன்ன வாறுளம் வருந்திய புரூரவா என்னும்
மன்னர் தாழும்வேல் மன்னவன் மகிழ்ந்துருப் பசியைச்
சொன்ன ஆண்டினுக் கொருமுறை கண்டனன் தோய்ந்து
பன்னும் ஆயுவே முதல்இரு மூவரைப் பயந்தான். (20)

உரைசெய் கின்றஅவ் வுருப்பசி ஒள்ளிழை ஒருநாள்
அரச என்றனை அடைவதற் கொருவகை அறைவல்
மருவி யாழினர்க் கேட்டியென் றுரைத்தவள் மறைந்தாள்
விரைவின் அன்னவா றடைந்தவர்க் கேட்டனன் வேந்தன். (21)

விஞ்சை மன்னவர் வேந்துவந் துரைத்தலும் விருப்பால்
மஞ்செ னுங்குழல் உருப்பசி முலைமுகம் மணப்பான்
எஞ்சல் இன்றிநீ எழில்மகம் இயற்றென இயம்பி
அஞ்சு டர்க்கனல் தாழிஒன் றளித்தனர் அன்றே. (22)

கொடுத்த அங்கியந் தாழியைக் கொணர்ந்திட அதர்க்கண்
விடுத்தி தென்கொலென் றரசனும் நகரிடை மேவ
எடுத்தி யம்பிய இரண்டெனும் ஊழியான் தாளின்
அடுத்த தாதலாற் கருமம்வந் தவனுளத் தடைந்த. (23)

கமழ்ம லர்த்தொடைக் காவலன் உருப்பசி கலப்பான்
இமைய வர்க்கிதஞ் செய்மகம் இயற்றுவல் எனப்போய்
உமிழ்க திர்க்கனல் தாழியை உய்த்துழிக் காணான்
சமிக ருப்பமாம் தடஞ்சினை அரசவாட் கண்டான். (24)

கண்டி ரும்பினிற் கருதிய நூல்வழி குறைத்துக்
கொண்டு வந்துமேல் அரணிதான் ஆகமுன் கூறும்
கெண்டை யந்தடங் கண்ணினாள் உருப்பசி கீழா
அண்ட ரும்புகழ் அரணியா மதிக்குமத் தண்டம். (25)

இலிங்க மாகஅங் கெண்ணினன் கடையஅங் கெழுந்த
புலிங்க மார்தழல் மூன்றெனப் பிரிந்தன பொருந்தத்
துலங்கு வேதமும் மூன்றெனப் பிரிந்தன சொல்லும்
நலங்கொள் வேள்வியும் பற்பல புரிந்தனன் நல்லோன். (26)

ஆதி யாம்யுகத் தருமறை குடிலையாய் அடங்கும்
சோதி மாயவன் ஒருத்தனுங் கடவுளாய்த் துலங்கும்
சாதி யோர்வகைத் தாகியே சத்துவ குணத்தாம்
பேத மாகிய வினையின்றி ஞானமே பிறங்கும். (27)

அரிய ஆதியாம் யுகம்ஒழிந் தாங்கிரண் டாய
உரைசெய் ஊழிவந் தடைதலாற் கருமம்உண் டாகிப்
பொருவில் வேள்விகள் புரிந்தஅப் புரூரவா என்போன்
மருவி ஞன்உருப் பசிமுலை வானுல கடைந்தே. (28)

## ஐயங்கார் பாகவதம்

இனி, தமிழில் மற்றொரு பாகவதம் உண்டு. வரதராஜையங்கார் என்பவர் இயற்றிய அந் நூலில் 110-ஆவதாகிய குருகுல மரபுப்படலத்தில் புரூரவ மன்னன் வரலாறு காணப்படுகிறது. அங்குள்ள பாடல்கள் (31—71)பின்வருமாறு ;—

அரிவை யாகிய செயலெலாம் ஆணதாய் மறந்து
நிருப ஞகிய செயலெலாம் நிகரில்மின் உருவாய்த்
தெரிகி லாதுநற் புதன்புயஞ் சேர்ந்துறு கருப்பம்
பருவ மாகியே புரூரவா வினைப்பயந் தனளால். (1)

அரிவை யாகிநன் மகவினைப் பயந்தபின் அறிவாம்
புருட ஞகிய இளமனன் புன்மைதீர்ந் திடத்தான்
சரியி லாப்புதன் தவர்களைக் கூவியே பழிப்பில்
அரன்மகிழ்ந்திட வேஅய மேதத்தை அமைத்தான். (2)

குறைவில் மாதவர் கோடக மேதத்தை விளைப்பக்
கறைமி டற்றரன் கண்முனிற் றோன்றியே கரிமா
நிறைய வீரர்கள் தம்முடன் நிருபஞய் நிலத்தின்
உறைகு வாயென இளன்றனக் குரைத்தரன் போனுன். (3)

அரன்வ ரங்கொடுத் தேகவே அரிவையர் உருவைத்
தரையின் ஓவிநீள் இபமய வீரர்கள் சாரப்
புருட ஞகிய இளமனன் புதனடி வணங்கிப்
பரிக ரித்திரள் பொதுளத்தன் பதியிடை அடைந்தான். (4)

அரச னாகியாண் டிளமனன் தன்நகர் அடையச்
சரியி லாப்புதன் புரூரவாத் தனைவளர்த் தெழில்சால்
நிருபன் ஆக்கியே முடிகவித் துலகினீள் சிகரம்
இரவி சேர்பிர திட்டமா புரியினை ஈந்தான். (5)

புதன ளித்திடு புரூரவா புரியினின் எய்தி
மதியெ னக்குடை வயங்கிட மதனனும் நாண
விதிம தித்திடு வேதியர் ஆசிகள் விளம்பக்
கதமி லாதர சியற்றியே களித்திடுங் காலை. (6)

மித்திர வருணர் என்போர் விசும்புறை வோர்கள் தம்மில்
உத்தம வடிவின் மிக்கார் உருப்பசி எழிலிற் காமன்
அத்திரம் அடர நொந்தே அவளைத்தாம் வரித்துக் காமம்
ஒத்துவீ ரியமுன் வீழ ஒருகுடத் தமைத்தா ரன்றே. (7)

இருவர்வீ ரியத்தை நொய்தின் இலங்குகும் பத்தின் ஏற்பச்
சரியிலா நிமிசா பத்தால் தவர்களெண் வசிட்டன் றானும்
கரையிலா உவரி தன்னைக் கரத்திடை அமைத்தோன் றானும்
ஆரியநான் மறைகள் ஓங்க அவதரித் தார்க ளன்றே. (8)

ஒருகுடத் திரண்டு பேரும் உதயமாய் வயங்கி ஏகத்
தெரிவையர் திலகமாய உருப்பசி நகிலிற் சேர்ந்து
சுரதநூற் படியிற் றோயாத் துன்பவீ ரியந்தான் வீழ
விரகவே தனையி னாலே மித்திர வருணர் சொல்வார். (9)

மீனகு விழியாய் எம்மை விரும்பிஉன் நகிலிற் சேர்த்தே
ஈனமில் அதர ஊறல் ஈந்திலை அதனால் நீபோய்
மானிடன் தேவி யாகி வாழ்குதி என்று போக
ஊனமில் உருப்ப சித்தேன் உம்பர்விட் டிம்பர் வந்தாள். (10)

பரிபுரம் அரற்றச் சதங்கை மிளிற்றப்
பாதசா லம்பதம் இலங்கக்
கரவளை ஒலிப்பத் தொடிகையும் தயங்கக்
காஞ்சிநற் கலிங்கமேல் வயங்க
இருதனம் அசையக் கொடியிடை துவள
இருகயல் விழிகுழை அடர
வரிமலர்க் குழல்மை எழிலியைப் பழிப்ப
அவனியின் உருப்பசி அடைந்தாள். (11)

அரூபியாம் மதனன் மனந்தடு மாற
அருந்தவர் மயல்எழுந் தலையப்
புரூரவா மூனர்வந் துருப்பசி நிற்பப்
புதனருள் புதல்வன்பொற் பாரும்
சுரூபியாம் இவள்விண் தோகையர் துதிக்கும்
சுதைமொழி எவளென உளத்தில்
நிரூபியா தயர்ந்தே அனங்கசா யகமெய்
நிறையநீ யாரென உரைப்பாள். (12)

மித்திர வருணர் அறைந்தசா பத்தால்
மேதினி அடைந்தனன் பழிப்பில்
சித்தசன் சமழ்க்கும் உருவுடை மனநின்
செயலெலாம் நாரதன் செப்ப
வித்தக நின்தோள் அணையஎய் தினன்யான்
உருப்பசி எனவிறல் அரசன்
எத்தவம் உறநீ இவண்அடைந் தனையென்
றியம்பிட இலங்கிழை அறைவாள். (13)

நெய்யெனக் குணவாய்ப் பருகுவன் மிகுந்த
நேயமாய் வளர்த்திடும் இரண்டு
மைஇளப் பறழைக் காத்துநீ இருளின்
மகிழ்வுடன் அணைகுவ தன்றி
வெய்யவன் கனலி உடுபதி யொளியால்
விழுமிய கலையில்நக் கினமாய்த்
துய்யவ புவியின் இருவருங் காணின்
ஒருவுவன் யானெனச் சொன்னாள். (14)

ஓவியத் தெழுதலைப பழித்திட இலஙகுமட
உருப்பசி மொழிந்திட அதற்குக்
காவலன் இசைந்து பருதிபோய் மறையக்
கங்குலிற் கவினுறும் அணைமேல்
ஆவியும் உடலும் வதிந்தசிர் எனவே
அறுபதி னாயிரம் பருவம்
பாவையர் திலகி பயோதர அணைமேற்
சுரதநூற் பரவையிற் படிந்தான். (15)

தூயநற் புரூர வாபுயத் தழுந்தத்
துணைநகிற் கிரியினை மடுத்து
வாயமிர் தளித்து நகக்குறி வகுத்து
வன்பதா யுதங்குயில் மயில்தே
னீயனம் சகோரம் சரோருகம் குறும்பூழ்
இயம்பிடுங் குரல்மொழிந் தணைந்தே
ஆயுமன் னவனோ டறுவரைப் பயந்தாள்
அமரர்தம் பதியுறை அணங்கே. (16)

சந்திரன் புதல்வன் சிறுவனைத் தழுவித்
தனயர்கள் அறுவரைப் பயந்த
சுந்தரம் மலிந்த உருப்பசி யணங்கு
துலங்கிய புவியமர் நாளில்
இந்திரன் அவையில் முராரிஊ ருவினின்
எழுந்தபூங் கொம்பினைக் காணூன்
கெந்தரு வரைச்சென் றவனியின் அரிவைக்
கிளியினைத் தருதிரென் றுரைத்தான். (17)

சசிபதி மொழியாற் சென்றகந் தருவர்
தரணியில் தபனன்போய் மறைய
நிசிபரந் தெழுந்த கங்குலின் அணைமேல்
நிகரிலா உருப்பசி யுடனே
கசரத துரக வலமனன் சுரதக்
கலவியிற் களித்திடுங் காலை
விசையினிற் செச்சைப் பறழிரண் டரற்ற
விண்ணிடைப் பற்றியே கினரால். (18)

அயப்பறழ் இரண்டும் அரற்றிய ஒலியை
அணங்குகேட் டழகதாய் உயர்தன்
குயத்தினின் வதிந்து கலவியை விளைக்கும்
கொற்றவன் தன்னைஎண் டிசையும்
செயித்திடு மனஎன் சிறுவர்போல் வளர்த்த
செச்சையைக் கள்வர்கொண் டேகப்
பயத்தையுற் றெதிரா அலியென இருந்தாய்
என்றுபல் இழிவுகள் பகர்ந்தாள். (19)

இக்கிர தச்சொல் ஏந்திழை விளம்ப
இளைமகன் நாந்தகம் எடுத்தே
நக்கினத் தினனுய்ப் பின்தொடர்ந் திடவே
நகிலொளிர் உருப்பசி கவினுல்
மிக்கபொன் ஆடை புனைகில ளாகி
வெற்றரை யாகிப்பின் நடக்க
விக்கிர மத்தால் ஏருகந் தருவர்
மின்அவிர் மாயையால் விளைத்தார். (20)

மின்னவிர் அதனுற் புவிவெளி யுறவே
மெல்லியல் வெற்றரை தன்னை
மன்னவன் பார்க்க அரசன்நக் கினத்தை
மான்விழி உருப்பசி கண்டே
இன்னலில் நிருப இருவர்நக் கினமும்
இருவரும் நோக்கினம் என்றுச்
சொன்னசொற் படியிவ் வவனியை ஒருவிச்
சுரரிறை நகரினைச் சேர்ந்தாள். (21)

இருவர்நக் கினமும் வெளிசெய்த தெனவே
இயம்பிவான் உருப்பசி ஏக
நிருபன்நொந் தலைந்து நினைவிலா தயர்ந்து
விழுந்தவண் தேறியே நிகரில்
அரிமல ரணையிற் காண்கிலன் வெருவி
அகன்மனை எங்கணும் தேடி
மருளுற அறிவு பறிபட நகரின்
மருங்கெலாம் தேடினன் மயங்கி. (22)

ஓவியம் உயிர்பெற் றெனநடந் தெய்தி
உவட்டிலாக் கலவியை விளைத்தென்
ஆவியும் மனமுந் தன்னிடத் தமையத்
தினந்தினம் அற்புதம் உறவே
காவிநல் விழியாள் நகையினுல் மொழியால்
கலசமென் நகிலினுல் இடையால்
பூவின்மெல் லடியால் நடையினுல் உருக்கும்
பொற்கொடி அகல்வதேன் என்னும். (23)

புயல்பிறை கயல்விற் குமிழ்வளை இலவம்
பூகம்வேய் காந்தள்பொற் கலசம்
இயல்புறுந் துடிகட் செவிகவின் கதலி
அலவன்ஒண் ணிணைவரால் கமடம்
செயல்புரை நளினம் அமர்ந்தகொம் பெனவே
சிறந்தபின் சேணுறின் என்மெய்
உயிர்இரா ததனுல் இம்பரின் உளள்என்
றோடியே தேடினுன் ஒல்லை. (24)

புரவலன் கலங்கிச் சலதியிற் பிறவாப்
புதியநல் அமிர்தெனப் பொருந்தி
இரவும்நன் பகலும் சுரதநூற் சுவையை
ஈந்தமின் யாண்டுளாள் என்றே
கரிபரி இரதம் துதைந்திடும் புரியிற்
காண்கிலான் நாட்டினை இகழ்ந்து
கிரியரி இரலை கிளர்கறை யடிசேர்
கிரியடர் பழுவத்தை அடைந்தான். (25)

வரையிடைக் காணுன் பொழிலிடைக் காணுன்
வாவியின் மருங்கிடைக் காணுன்
வெருவிவிண் டிறைவில் எழிலியைக் கண்டு
விரியும்நீர் மீன்வரால் கமடம்
மரைமலர் குமிழாம் பல்கயல் கதலி
வல்லிநீர்ச் சுழியெலாம் நோக்கி
அரிவைதன் உருவைப் புவியினு சினியிற்
சிதறினள் கொல்லென அயர்ந்தான். (26)

நிலமிசை அயர்ந்த நிருபர்கோன் தேறி
நிகரிலா வரையிடத் தெய்திக்
கலவியின் கனியே அமிர்தினின் சுவையே
கடுவினை யேன்உடற் குயிரே
புலவிசெய் தகன்ருய் புல்லவா எனவே
அம்மொழி மலைத்தொனி புகலச்
சிலையெனும் நுதலி இவண்உளள் எனமன்
தேடியே காண்கிலா தறைவான். (27)

அணைக்கவா எனயான் உரைத்தசொல் உரைத்த
　　தரிவையோ பிறங்கலோ அறியேன்
மணத்தபூங் கணையோன் இரதம்வாள் கவிகை
　　மாமுரசி யாவையும் பகையாய்ப்
பணைக்கைமா அருந்தும் விளாங்கனி போன்றேன்
　　பரவையின் முளரியென் றெய்யும்
கணைக்குநேர் விழியாய் வருதிஎன் றுரைத்துக்
　　காசினி எங்கணும் திரிந்தான். (28)

மாறிலாக் குருக்கேத் திரத்தலப் பொழிலில்
　　மங்கையர் குழாம்புடை சூழ
நாறுபூங் குழலாள் உருப்பசி அவணின்
　　நண்ணவே புரூரவா நோக்கி
ஊறிய களிப்போ டவள்முனர் எய்தி
　　உன்மயல் உறஅரன் விழியால்
ஈறுற எரியும் மதனனைப் போல்யான்
　　இறந்திடா தணைத்திநீ என்றான். (29)

மதிசுதன் சிறுவன் மொழிந்திடக் கேட்ட
　　வனமுலை உருப்பசி யணங்கு
பொதுமடந் தையர்க்குக் கற்புமெய் உளதோ
　　புவியினெண் டிசையினை வென்று
மதகரி வெரிநின் வருமண மகளிர்
　　மயக்கினை வெள்கில என்னுச்
சுதைதரு மொழியாள் வருடமொன் றொருவித்
　　தோய்குவன் உன்னையென் றகன்றாள். (30)

அரிவையர் திலகி இவையெலாம் அறைந்தே
　　அமரர்தம் பதியினை அடைய
விரகவே லையின்வாய் வதிந்திடு புரூர
　　வாஒளிர் நகரத்தின் மேவி
வருடமொன் றொருவக் கழிந்தநாள் குருக்கேத்
　　திரந்தனின் வயங்குமோ டையினிற்
பரிவுடன் அணுக உருப்பசி மடந்தை
　　பரிபுரம் புலம்பிட வந்தாள். (31)

மங்கையர் திலகி உருப்பசி வரனும்
மனமகிழ் புரூரவா அவள்தன்
கொங்கைதன் உரத்திற் குழைவுறக் கமழும்
குங்குமக் கலவைகள் கொட்டித்
தங்கமெல் லணையில் இருவரோ ருடல்போல்
தழுவியே சுரதநூற் கலவி
பொங்கிட அமுத வாயினீர் அளித்துப்
புரவலன் மயங்கிடப் போனன். (32)

இலவிதழ் அமிர்த ஊறலைப் பருகி
இணைமுலை இறுகுறத் தழுவிக்
கலவியை விளைத்துப் புளகமெய் அரும்பக்
களிப்புடன் போகமுற் றுயர்ந்தே
உலர்பயிர் எழிலி பொழிந்திடத் தழைத்த
தொத்துளம் வியந்திடும் அரசன்
மலரணை மிசையின் உருப்பசி அணங்கைக்
காண்கிலான் மாழ்கலுற் றயர்ந்தான். (33)

மங்கையங் கொருவ அலரியின் வெயிலால்
வாடியே உலர்ந்தபா தவங்கள்
அங்கிவந் தடர்ப்ப எரிந்திடு செயல்போல்
அரசன்மெய் அனங்கசா யகத்தால்
வெங்கனல் மடுப்ப விரகவே தனையுள்
வெதுப்பவே ஞெருசெயல் அறியான்
சிங்கலில் முனிவர் திரளிருப் பிடத்தைச்
சேர்ந்தடி பணிந்திவை அறைவான். (34)

அருப்பநுண் இடையாள் உருப்பசி எனையே
அணைந்துயர் விசும்பினை அடைய
நெருப்புறு விரக வேதனை உளத்தை
நிறைத்திட நகரினை நீங்கிப்
பொருப்பினை புயத்தின் வலியெலாம் பொன்றிப்
புவியைஆள் திறமெலாம் அழிந்தேன்
கருப்புரக் கலவை கமழ்குயத் தவளைக்
கலந்திட அருளுவீர் என்ருன். (35)

நிருபனீ துரைப்ப நெடுந்தவ முனிவர்
நிறைமதி முகமடந் தையர்மேல்
விரகமுற் றவர்க்கீண் டறநெறி உரைத்து
விலக்கினும் தவிர்கிலார் பயத்துட்
டீரமமிழ்ந் திடவே உறுபவர் தம்மைத்
தீயினுற் சுடவொணு ததுபோற்
பரமனை நினையா துருப்பசி செயலைப்
பற்றினை என்றுற நகைத்தார். (36)

முறுவல்செய் முனிவர் அரசனை நோக்கி
மொழிகுவார் இத்தலை யோடு
நிறையநின் னுட்டில் இரந்திட வலையேல்
நிகரிலா உருப்பசி நின்தோள்
உறுவளென் றுரைப்பப் புரூரவா உவந்தே
உயர்ந்திடும் கபாலத்தை ஏந்தி
அறனுறத் தானுள் அவனியின் இரப்ப
அடைந்தனன் மயலினுல் அலைந்தே. (37)

அரிவைதன் மயலால் அறிவழிந் தரசன்
அடவியை ஒருவியோர் கரத்தின்
விரிவுறு கபாலம் ஏந்தியே தானுள்
வளாகத்திற் சென்றவன் வெள்கி
வரையுயர் பழுவத் தெய்தியத் தலையோ
டுடைத்துருப் பசிமயல் தன்னுள்
அரியதீச் செய்வ தறிகிலான் அயர்ந்தே
அருந்தவர் பாற்சென்ற தறைவான். (38)

தவர்கள்நீர் உரைத்த மொழியினுல் அவனிற்
சுட்டிய தலையினே டேந்திப்
பவமிலா திலங்கு நாட்டினிற் சென்று
பலியென வெள்கியே விரைவின்
உவமையில் பழுவத் தெய்தியத் தலையோ
டுடைத்துருப் பசிமயல் ஒருவா
திவணின்வந் தனன்யான் எனலுமா முனிவர்
நகைத்திவை விளம்பலுற் றனரால். (39)

நீ அவண் உடைத்த கபாலம்ஓர் மரமாய்
நிவந்திடும் அதனினைக் கடையப்
பாய்உதா சனனை எம்முனிற் கொடுவா
என்றவர் பகர்ந்திடப் பாறி
வேய்உயர் பழுவத் துடைத்திடுங் கடிஞை
பிசுமந்த மாகியே விளங்கத்
தீயுற அவ்வதைக் கடைந்துதே யுவினை
முனிவர்பாற் சென்றுசுட் டினனால். (40)

முனிவர்மன் கொணர்ந்த கனலினால் மறையை
மொழிந்துகா மியமகம் முடிப்பக்
கனமணி இலங்கு விமானமேற் கவரி
அசைந்திடக் கலனெலாம் இலங்க
அனமென நடைகொள் உருப்பசி புரூர
வாவினை அங்கையின் அணைத்துத்
தினகரன் நவிரைச் செயித்தொளி திகழும்
. தேவர்தம் பதியினைச் சேர்ந்தாள். (41)

உருப்பசி யுடனும் விருப்பமுற் றுயர்ந்த
உம்பர்கோன் நகருறை நிருபன்
திருப்பொலி உரத்தன் அழிவிலாப் பதத்திற்
சேர்வனென் றருந்தவர் செப்ப
அருப்பநுண் இடையாள் கலவியை ஒருவி
அவனியின் இழிந்துநன் மதியாற்
பொருப்பினில் தவஞ்செய் தரியமர் பதத்திற்
புகுந்தனன் உலகெலாம் புகழ. (42)

## பிற நூல்கள்!

விஷ்ணு புராணத்திலும் புரூரவ சக்கரவர்த்தியின் கதை வருகிறது. அங்குள்ள வரலாறு பெரும்பாலும் ஐயங்கார் பாகவதத்தில் உள்ளதைப் போன்றதே. பத்ம புராணத்திலும் மச்ச புராணத்திலும் இம் மன்னன் கதை உண்டு. மச்சபுராணத்தில் உள்ள வரலாற்றில் கேசி என்னும் அசுரன் ஊர்வசியையும் அவள் தோழியாகிய சித்திரலேகையையும் எடுத்துச் செல்ல, அவனை எதிர்த்து வாயவாஸ்திரத்தை எய்து கொன்று அந்த இரண்டு அணங்கு

களையும் புரூரவன் விடுவித்தான் என்ற செய்தி வருகிறது. ஹரிவம்சத்திலும் புரூரவனைப்பற்றிய செய்திகள் உண்டு.

கதாசரித் சாகரத்தில், புரூரவன் ஊர்வசியை அடைந்து பின் தும்புருவின் சாபத்தால் அவளைப் பிரிந்து வருந்தி, திருமாலை நோக்கித் தவம் புரிந்து அவரருளால் மீட்டும் அவளை அடைந்த தாக ஒரு வரலாறு வருகிறது.

வடமொழி மகாகவியாகிய காளிதாசன் இயற்றிய நாடகங் களுள் "விக்கிரமோர்வசீயம்" என்பது ஒன்று. அது புரூரவ மன் னனைக் கதாநாயகனாகவும் ஊர்வசியைக் கதாநாயகியாகவும் உடை யது. ஊர்வசியை எடுத்துச் சென்ற அசுரனை வென்று அவளைப் புரூரவன் மீட்கிறான். இருவருக்கும் காதல் முகிழ்க்கிறது. ஊர்வசி வானுலகு சென்றவள் பரத முனிவருடைய சாபத்தால் பூவுலகு வந்து புரூரவமன்னனுடன் வாழ்கிறாள். இடையில் அவனைப் பிரிந்து கொடியுருவாக நிற்கிறாள். அப்பால் மீட்டும் தன் உருவை அடைந்து புரூரவனுடன் இன்புற்று வாழ்கிறாள். இவ்வரலாற்றை நாடகச் சுவை மலியக் காளிதாசன் நாடக மாக்கியிருக்கிறான்.

திருக்குறளுக்குப் பரிப்பெருமாள் என்னும் புலவர் எழுதிய உரையில் ஓரிடத்தில் புரூரவனை உதாரணமாக அவ்வுரையாசிரியர் காட்டுகிறார். குற்றம் கடிதல் என்னும் அதிகாரத்தில்,

> "செயற் பால செய்யா திவறியான் செல்வம்
> உயற்பால தன்றிக் கெடும்"

என்பதன் விசேஷ வுரையில், 'இது பிறர் பொருளை விரும்பினால் வரும் குற்றம் கூறிற்று; இதனாற் கெட்டான் புரூரவா என்றவாறு' என்று எழுதுகிறார்.

இதுவரையில் எடுத்துக் காட்டிய நூல்களிலுள்ள புரூரவ சக்கரவர்த்தியின் வரலாற்றுப் பகுதிகள் யாவும் அம்மன்னனுக் கும் ஊர்வசிக்கும் அமைந்த காதலைப்பற்றியே சொல்கின்றன. இந்தப் புரூரவ நாடகத்தில் ஊர்வசியை ஓர் அசுரன் எடுத்துச் செல்ல, அப்போது அவளுடைய கூக்குரலைக் கேட்டு, புரூ ரவன் அவ்வசுரனோடு போர் செய்து கொன்றான் என்ற செய்தி மாத்திரம் வருகிறது. அவ்விருவருக்கும் காதல் உண்டான செய்தி இதில் இல்லை. ஊர்வசியை அசுரன் கைப்பற்ற அவனோடு புரூரவன்

பொருது அவளை மீட்ட செய்தி, விஷ்ணுபுராணம், மச்ச புராணம், விக்கிரமோர்வசீயம் என்பவற்றில் காணப்பெறும். பின் இரண்டு நூல்களும் அவ்வசுரன் பெயர் கேசி என்று கூறுகின்றன.

இந்த நாடகத்திற் பெரும்பகுதியும் புரூரவன் சித்திரசேனை என்பவளை மணந்து மக்களைப் பெற்று, சனிபகவானுடைய ஆட்சிக்குட்பட்டுத் துன்புறும் வரலாறாகவே இருக்கின்றது. இதிற் கூறியுள்ள வரலாற்றை வடமொழி நூல் எதிலும் காணவில்லை. தமிழில் புரூரவ சரிதையைத் தனியே கூறும் நூல்கள் இரண்டு உண்டு. ஒன்று **புரூரவா சரிதை** என்ற காவியம். மற்றொன்று **புரூரவச் சக்கரவர்த்தி கதை** என்ற வசன நூல். இவ்விரண்டிலும் புரூரவச் சக்கரவர்த்தி சனியின் ஆட்சியிற் பட்டுத் துயருற்ற கதை விரிவாக அமைந்திருக்கிறது.

## புரூரவா சரிதை

புரூரவா சரிதையென்பது அச்சாகவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் ஏட்டுப்பிரதியாக இருந்ததென்று தெரியவருகிறது. இந்த நூலைப் பற்றிய கட்டுரை ஒன்று ஸ்ரீ மு. இராகவையங்கார் அவர்கள் எழுதியிருக்கிறார்கள்; அது 'செந்தமிழ்' ஆறாந் தொகுதி 81-89-ஆம் பக்கங்களிற் காணப்பெறுகிறது.

புரூரவா சரிதையை இயற்றியவர் தென்காசியை ஆண்ட வரராம பாண்டியனது வாயிற் பெரும் புலவரான சிவந்த கவிராயர் மருகர் ஐயம் பெருமாள் சிவந்த கவிராயர் என்பவர். 350 ஆண்டுகளுக்கு முன் இந்நூல் இயற்றப்பெற்றது.

இந்த நூல் 27 படலங்களும் 920 செய்யுட்களும் கொண்டது. இதிற் காணும் வரலாற்றுச் சுருக்கத்தை ஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள் தந்திருக்கிறார்கள். அது வருமாறு:

"சந்திரன் பேரனும் புதனுடைய புத்திரனும் ஆகிய புரூரவ சக்கரவர்த்தி உலகமுழுவதும் ஒரு குடைக்கீழ் ஆண்டு, தேவ கணிகையாகிய உருப்பசிபோகமும் பெற்றுப் பரம சுகியாய் வாழ்ந்து வருங் காலத்தில், சனி பகவான் அவனைத் தொடர, அதனாலே, அரக்கரால் நாடிழந்து மனைவி மக்களோடும் காடுற்றுப் பெரும்பிடியால் வருந்தி முடிவில் ஒரு வணிகனிடம் கூலி வேலை

செய்து தன் குடும்பத்துடன் வசிக்கும் நாளிலே, அவ்வணிகன் அவன் மனைவியைக் காமுற்றுப் புரூரவன் அறியாதே அவளை வங்கத் தேற்றிக் கொண்டு போக அதனால் மனமுடைந்து, தன் மக்கள் இருவருடன் வேற்று நாடு நோக்கிச் செல்கையில் ஓர் ஆற்றுவெள்ளம் சக்கரவர்த்தியை இழுத்துக் கொண்டு செல்லத் தன் அருமை மக்களையும் பிரிந்து, வேற்று நாடடைந்து அந்நாட்டரசனால் திருடனென்று கருதப் பெற்று மாறு கை மாறு கால் வாங்கப்பட்டு முடவனாகி, பின் சக்கரவர்த்தியின் சங்கீதத்தைக் கேட்க நேர்ந்த அந் நாட்டு வேந்தன் மகள் அவனைக் காமுறப் பெருங் குழப்பத்தினிடையே அவனை மணம் புணர்ந்து களித்து வருங்காலத்தில், அந்நாட்டரசன் தன் மருமகன் சக்கவர்த்தி யென்பதைத் தேவதைகளால் அறிந்து மகிழ்ந்து மத்திர நாட்டுக்கு அவனை அதிபதியாக்கப் புரூரவா தன் மனைவியுடன் அந்நாட்டை ஆண்டு வந்தனன். சக்கரவர்த்தியால் ஆற்றோரத்தில் விடப்பட்ட மக்கள் இருவரையும் வழிச்சென்ற இடையன் ஒருவன் கொண்டு சென்று அன்புடன் வளர்த்துவர, தக்க பருவம் அடைந்ததும் அவ் விருவரும் அச்சக்கரவர்த்தியிடமே, இன்னாரென்பது தெரியாது வேலையில் அமர்ந்து அபிமானம் பெற்றிருந்தனர். இங்ஙனம் இருக்க, வணிகன் காமுற்றுக் கவர்ந்த புரூரவன் மனைவியின் சிறைக்கூடமாக நடுக்கடலில் வைக்கப்பட்டிருந்த மரக்கலம் ஒரு பெருஞ்சுழல் காற்றால் அலைப்புண்டு முடிவில் அவன் ஆண்டுவரும் நகரியின் பக்கத்தே ஒதுங்க, அச்செய்தியை ஒற்றர்கள் அரசனுக்கு அறிவித்ததும், அரசன் தன்பால் உள்ள இடைச்சிறுவர்களை மிக்க பொருளுடன் வந்த அம் மரக்கலத்தைக் காவல் செய்யும்படி அனுப்ப, அவர்கள் இரவு முழுதும் உறக்கமின்றிக் காத்து வரும் போது, இளையவன் மூத்தவனை நோக்கிக் கூறுவதும், பிற சம்பவங்களும் அடியில் வரும் பகுதியிற் கூறப்படுகின்றன..........''

இதன்பின் ஐயங்காரவர்கள் 44 பாடல்களை எடுத்துக் காட்டியுள்ளார்கள். அவை வருமாறு:

அன்ன காலையில் இளவல்மற் றவன்றனை நோக்கிக்
கன்னல் பாதியும் கழிந்தன நின்றஇக் கங்குல்
இன்ன லாகிய துயில்புரிந் திடாவகை இருப்பான்
மூன்னு காதைகள் உண்டெனில் மொழியென மொழிந்தான். (1)

கேட்ட முன்னவன் இளநகை முதுநிலாக் கிளர
வாட்ட மின்றியே மைந்தகேள் உவரிசூழ் வளாக
நாட்டி னிற்கதை கேட்டனை நம்மில்நாம் பட்ட
ஏட்டி னுக்கடங் காக்கதை கேட்டிலை இளையோய். (2)

ஐய அக்கதை யாயினும் உரைத்திளன் றறைய
வெய்து யிர்த்துமெய்ம் மெலிவுற உளம்நனி விம்மக்
கொய்து ணர்க்குழல் அன்னைதன் செவித்துளை குறுக
எய்தி றற்சிலை இளவலுக் கிசைத்தனன் இதனை. (3)

மைந்த கேட்டியால் மதிதிரு மரபினை வளர்த்தோன்
புந்தி தன்வயிற் றோன்றிய பொருவருந் திறலான்
உந்து தெண்டிரை உலகெலாம் ஒருதனிக் குடைக்கீழ்
இந்த மாநகர் இருந்தர சியற்றிய இறைவன். (4)

ஓவம் ஒத்தசீர் வாசவ தத்தையென் றுரைக்கும்
பூவை பொற்குவட் டெழில்நலத் திளமுலை புணர்ந்தோன்
மாவி ரித்தகட் டிருமுகத் துருப்பசி மயல்தீர்த்
தாவ லுற்றிடப் புரந்தரன் கொடுத்திவண் அடைந்தோன். (5)

தன்ம னத்திடை வேதமூன் றுதித்திடத் தந்தோன்
நன்மை யிற்பயன் மூன்றிலொன் றினைத்துணை நயந்தோன்
தொன்மை யப்பெருங் கோட்களின் மண்டலந் தொடர்ந்து
விண்ம லைக்குமேல் விண்ணுல கினுஞ்செலும் வீரன். (6)

ஆழி மாநிலம் புரந்திடும் நாளில்அங் கொருநாள்
ஏழி சைத்திரு முனிவரன் அவ்வயின் எய்தித்
தாழ்வு றும்படி சவரிஉன் பால்வரச் சமைந்தான்
வாழி மன்னவ எனஉரைத் தகறலும் மற்றோன். (7)

முதும கன்றனை நோக்கிநின் றருந்தவம் முயலக்
கதுமெ னப்புகுந் துரைத்தனன் தன்அதி காரம்
விதும கன்மகன் ஒருமுறை வருகென விளம்ப
எதுகொல் நுங்கருத் திளமையோ முதுமையோ எய்தல். (8)

எனவி னுவலும் மனைவிபால் இத்திறம் இயம்ப
வனைம லர்க்குழல் இளமையே வலிதென வழங்கக்
கனைக ழற்பொலி கருங்கழல் மன்னவன் காரி
முனமெ திர்ந்திவை மொழிந்திட முதுமகன் அகன்றான். (9)

காரி போயபின் வசந்தமாம் காலம்வந் தணுக
வேரி யந்தொடை யான்மலர்ப் பொழில்விர வுதலும்
பார டங்கலும் நடுக்குபோர் அரக்கனப் பதியின்
ஊர டங்கலும் தன்னதாய்க் கவர்ந்துகொண் டுறலும். (10)

கேட்ட மன்னவன் அமர்க்கென எழுதலும் கெண்டை
வாட்ட டங்கணாள் சனிசெயல் இதுவென மற்றோர்
நாட்டின் எய்துதல் நன்றெனப் போதலும் நடுவே
ஈட்டு வெம்பசி யால்இரு தனையரும் இரங்க. (11)

அருமை மைந்தர்கள் ஏற்கஉண் அமுதுநல் குதுமென்
றொருது கிற்றலை கட்டிய சோறவிழ்த் துதவப்
புரிகு முற்றிரு நோக்சலும் புழுக்களாய் நெளியத்
தருமமன்னனும் விழிவழித் தந்தனன் தாரை. (12)

தனையர் வெம்பசி காண்டலும் தரிக்கல ராகித்
துணையி னிற்சென்று சந்திர கிரிப்பதி துன்னி
நினையு மாத்திரத் தொருவணி கேசன்நோர்ந் திடலும்
அனைய வன்தனி மனைக்கணின் அமர்தரு நாளில். (13)

துன்னும் இந்தனம் எடுக்கவும் மன்னவன் துணைவி
செந்நெல் குற்றவும் ஆயினர் அதில்ஒரு தினத்தில்
பொன்ன னப்பெறும் மைந்தரும் பிதாவொடும் போத
மன்னு மாக்கலத் தேற்றினன் திருவைஅவ் வணிகன். (14)

மீண்டு மன்னவன் மனைவியை எவணென வினவ
ஆண்டு நின்றவர் புகன்றிட ஆற்றல னாகி
ஈண்டி ருப்பதே பழுதென மகாரொடும் ஏகிக்
கூண்ட நீர்ப்பெருக் காறுகண் டதன்கரை குறுகி. (15)

ஐயன் மீர்இவண் நின்மின்யான் அளவறிந் திடஎன்
றெய்து காலையில் இருவருந் தொடர்ந்திட இறைவன்
வெய்தி னங்கொரு மதலையைத் தருவொடும் வீக்கிக்
கையின் ஓர்மக வேந்தியவ் வாற்றினைக் கடந்து. (16)

திரிந்து போதஅச் சேய்தொடர்ந் திடலுமச் சேயை
வரிந்த னன்பெரு மரத்தொடும் பின்னையம் மன்னன்
முரிந்த தெண்டிரை ஆற்றிடை இறங்கலும் மூரிக்
கருங்கடக்களி றென்னஅவ் வாற்றொடுங் கழிந்தான். (17)

தந்தை யாகவோர் ஆயன்அங் கெய்திஅத் தனையர்
சிந்தை நோயறத் தன்பதி சேர்த்தியே வளர்த்தான்
அந்த மன்னவன் செய்தியும் அன்னையாள் திறனும்
எந்த வாறெனத் தெளிவுறக் கேட்டிலேன் இன்னும். (18)

ஆய மன்னவர் ஆரெனிற் புரூரவா ஆமால்
போய மங்கையும் புண்டரீ கக்கொடி என்பாள்
தீய வெந்துயர்க் கடல்விழு மக்களைத் தெரிக்கில்
வாயி னூற்சொலு மியாமென உணர்தியால் மைந்தா. (19)

இந்த மாக்கதை நம்பெருங் கதைஎன இளைய
மைந்த னார்க்குரைத் துள்ளம்நெக் கழிதலும் மாதர்
சந்த மாமுலைப் பால்பிதிர்ந் தொழுகமெய் தளர்வுற்
றந்த மாக்கலந் தகத்திருந் தாகுலித் தழுதாள். (20)

இன்னுயிராம் மக்காள் நும் ஐயன் எவண்அடைந்தான்
அன்னவனும் நும்மை மறந்தும் அகன்றானே
பின்னி மரத்திற் பிணிப்புறவும் பெற்றீரோ
துன்னும் இடையர்குலத் தோன்றலும்நீர் ஆனீரோ? (21)

தேமாங் கனியிற் றெவிட்டாத தீங்குதலை
ஏமாங் கதனே கனகாங்க தானனலும்
கோமான் கருணைக் குரிசில் இருவோரும்
தாமாங் கெழுந்து மணிக்கதவைத் தள்ளினார். (22)

ஆங்குற்றார் உற்ற அருமைமகா ரைத்தழுவி
ஏங்குற்றாள் ஆவி இறந்தாள் பிறந்தாளால்
வீங்குற்றாள் மேனி வெதுப்புற்றாள் வெய்துயிர்த்தாள்
கோங்குற்ற கொங்கையிற்பால் கொண்டுபுனல் ஆட்டினாள். (23)

அம்மையும் மக்களுமாய் ஆங்கழுத பேரோதை
செம்மை யிலிதன் செவித்துளையிற் கேட்டலுமே
வெம்மை யுடன்எய்தி விலக்கிஇவை யாவெனலும்
எம்மை அளித்தஎம்மோய் என்றார் இணையில்லார். (24)

ஊரேழ் அறிய உலகறியத் தொண்டுபுரி
தாரேறு கூந்தலைத்தம் அன்னைஎனச் சாற்றினார்
ஆரே புகல்வார் அநியாய மோஇதனைப்
போரேறு மன்னவன்முன் சொல்வேன் எனப்புகன்றான். (25)

அன்னதே ஆகஎன அன்னவரும் அன்னை திரு
முன்னரே காப்ப முறைமைஅறி யான் இரவு
கன்னல்போங் காறும் இருந்தான் கதிரோனும்
இன்னதோர் தன்மையினைக் காண்பன் எனஎழுந்தான். (26)

உயர்பெ ருந்திறன் எய்திடக் காலம்ஓர்ந் தவரின்
வெயிலெ ழுஞ்சுடர் கங்குலைத் துரந்துமே வுதலும்
அயலி லோர்துணை இன்றியே அமர்க்களத் திடும்போர்ச்
செயல மிழ்ந்தவர் எனப்பொலி வகன்றது திங்கள். (27)

வைக றைத்துயில் நீங்கியே மன்னவர் மன்னன்
செய்யும் நித்திய கருமங்கள் யாவையுந் திருத்திப்
பொய்யி லாநெடும் புண்ணியர் பதமலர் போற்றித்
தையல் பாகனுர் பதயுகத் தாமரை தாழ்ந்து. (28)

ஒற்றை வால்வளை முழங்கிடச் சாமரை உலவக்
கொற்ற வெண்குடை நிழல்தர அந்தணர் குழுமக்
கற்றை வார்குழற் கதிர்முலைத் துவரிதழ்க் கனிவாய்ப்
பொற்ற தாமரைப் பொன்னனுர் மங்கலம் புகல. (29)

தானை வேந்தர்கள் மந்திரச் சூழ்ச்சியிற் றக்கோர்
வானை யும்மளந் தறிந்திடும் கணிதநூல் வல்லோர்
ஏனை மன்னவர் முதியவர் கடகளி றெனும்போர்
போன வென்றிவேற் பொருநரும் மருங்கினிற் பொற்ப. (30)

தடங்க டற்படு வாலசூ ரியரெனத் தயங்கி
விடுஞ்சு டர்பொலி மணிபல குயிற்றிவாய் விரிந்த
மடங்க லின்பிடர் தாங்கிய பீடத்தின் மதர்த்த
குடங்கை யிற்படர் கண்ணியோ டிருந்தனன் கொலுவில். (31)

இமைய வர்க்கிறை இவன்என இருந்தஅவ் வேலை
கமையில் நெஞ்சொடும் வணிகன்வந் தவன்கடை காப்போர்க்
கமைய ஓதிட அன்னவர் மன்னனுக் கறையச்
சமையும் வேலினுன் தருதிரால் இவணெனச் சாற்ற. (32)

வேத்த வைக்குழாத் துய்த்தனர் வணிகன்அவ் வேந்தன்
பூத்த தாமரைப் பொலங்கழல் நிலம்பட வணங்கப்
பார்த்த மன்னன்நீ யாரென நென்னலிற் பரவை
சேர்த்த கப்பலின் செட்டியான் என்றிவை தெரித்தான். (33)

அருங்க லத்தினிற் பொருளெலாங் கணக்கர்வந் தாய்ந்தார்
மருங்கில் ஓரறை திறந்திலேன் உனக்கென வைத்த
பெருங்க லத்தினுக் கணிமுழு மணியெனப் பிறந்த
கருங்கண் வெண்ணகைச் செய்யவாய்ப் பைந்தொடிக் கன்னி. (34)

அவ்வ ணங்கினை நென்னலிற் காவல்வந் தவர்கள்
மெய்வ ருந்திடப் பெற்றதாய் என்றுபொய் விளம்பி
எவ்வம் உற்றுளம் களிப்பின ராகியே என்னை
நொவ்வு றும்படி தள்ளினர் உள்ளது நோக்கார். (35)

அந்த வாணுதல் ஆரெனக் கேட்டியேல் அடியேன்
தந்தை தாதைதன் அடிமையின் வழிவந்த தையல்
மைந்த ராமெனில் அவருமென் வகையென லாமால்
எந்த வாறெனக் கேட்டருள் என்றிறைஞ் சினனால். (36)

இதிலொரு பொருள்உள தென்ன எண்ணியே
மதிகுல மன்னவன் மற்றை வீரரைக்
கதுமெனத் தருகெனக் கடற்று றைக்கணே
புதுமணிக் கலமிசை ஒருவன் போயினன். (37)

சென்றான் அரசன் திருவாணை செப்புதலும்
நன்றாக வென்றிளைய நம்பி தனைமுதல்வன்
என்றான் வரினும் இவண்நீங்கல் என்றியம்பி
வன்றாட் சிலையேந்தி மன்னவன்றன் முன்னானான். (38)

வந்தவனை இந்த வணிகன் பெருஞ்சிறையைத்
தந்தவள்என் றேஉரைத்த தன்மைஉனக் குத்தகுமோ
எந்தவகை சொல்லென் றிறையோன் வினவஅவன்
முந்த உரைக்கில் மொழிந்திடுவன் பின்என்றான். (39)

என்றியம்ப மற்றவனும் எந்தைதனை ஈன்றபிதா
மன்றறியக் கொண்ட வழிவழியே வந்தசிறை
அன்றியும்அந் நாள்எழுதும் ஆவணமும் உண்டுசும்மா
பொன்றுமருந் துண்பாரும் உண்டோ எனப்புகன்றான். (40)

அதுபொழு தரசனும் அன்ன தாகுக
எதுபெயர் எதுபதி இயம்பு வாயென
நிதிபதி எனும்பெயர் நீங்க நின்றுளான்
விதுகிரி விச்சுவ குத்தன் பேரென. (41)

தாயெனும் மைந்தனை நோக்கித் தாயென
நீயுரைத் திடும்வகை நிகழ்த்து வாயென
நாயக சொலவரு நாள்கள் வேண்டுமே
ஆயினும் ஒருவழி அறையக் கேட்டியால். (42)

நெடுங்கடல் உலக மெல்லாம்
ஒருகுடை நிழலில் வைக
மடங்கலா சனத்தின் வைகும்
மணிமுடி வேந்தர் வேந்தன்
ஒடுங்கலில் புகழான் புந்தி
உதவிய புரூர வாவென்
றடங்கலர்ச் செருக்கும் வைவேல்
ஆழியொன் றுடைய வீரன். (43)

சனிசெய லதனால் ஆளும்
தரணிபோய் வனம்போய்ச் சார்ந்து
கனிமொழி மனைபோய்த் தானும்
ஆற்றொடுங் கழிந்து போனான்
அனையவன் மைந்தர் யாங்கள்
என்றுமற் றனைத்துங் கூறப்
புனல்விழி பொழிய விம்மிப்
பொருமினன் புல்லி னானே. (44)

## புரூரவச் சக்கரவர்த்தி கதை

வசன உருவத்தில் கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டாக வழங்குவது புரூரவச் சக்கரவர்த்தி கதை என்பது. விக்கிரமாதித்தன் கதை, மயில் இராவணன் கதை என்பவற்றைப் போல இதுவும் 'புகழேந்திப் புலவர் இயற்றிய'தாக அச்சிடப் பட்டுள்ளது இப்போது கிடைக்கும் பதிப்பு எழுத்துப் பிழைகள் மலிந்ததாக *

புரூரவச் சக்கரவர்த்தி கதையை வியாச முனிவர் பாண்டவர்களுக்குக் கூறியதாக முதலில் பாயிரம் சொல்கிறது. ஸ்ரீ மகா பாரதத்தில் ஆரண்யபர்வத்தில், காமிய வனத்தில் இருந்த பாண்டவர்களுக்கு வியாசர் கூறியதாக உள்ளதென்று அப் பாயிரத்திற்

* பி. இரத்தின நாயகர் ஸன்ஸ் பதிப்பைக் காண்க.

காணப்படுகிறது. அதன் பின் விரிவாகப் புரூரவச் சக்கரவர்த்தி கதை அமைந்துள்ளது. அதன் சுருக்கம் வருமாறு :

வைவஸ்தவமனு அதிகாரம் செலுத்தி வந்த காலத்தில் அவருக்கு மகப்பேறு இல்லாமல் இருந்தமையால் வசிஷ்ட முனிவருடைய அறிவுரையின்படி மைத்திரா வருண யாகஞ் செய்தார். அவருடைய மனைவி தனக்குப் பெண்குழந்தை பிறக்கவேண்டுமென்ற விருப்பத்தால், அதற் கேற்றபடி மந்திரம் ஜபிக்க வேண்டுமென்று வேள்வி நடத்தும் அந்தணரிடம் ரகசியமாகச் சொல்ல, அவரும் அப்படியே செய்தார். அதன் பயனாக இளாதேவி என்ற பெண் குழந்தை அந்த வேள்வியில் உதித்தாள். அந்தக் குழந்தையைக், கண்டு திருப்தி பெறாத மனு மீட்டும் வசிஷ்டமுனிவரிடம் வந்து செய்தியைக் கூற, அவர் உண்மை உணர்ந்து அப் பெண் குழந்தையை ஆணாக மாறும்படி செய்தார். மனு மிக மனங் களித்து அந்தக் குழந்தைக்குச் சுத்தியும்னன் என்று பெயர்சூட்டி வளர்த்து வந்தான். எல்லாவிதக் கலைகளையும் கற்பித்துத் தக்க பிராயம் வந்தவுடன் பிரதிஷ்டானபுரம் என்ற நகரத்துக்கு அரசனாக முடிசூட்டினான்.

சுத்தியும்ன மன்னன் பிரதிஷ்டானபுரத்தில் அறநெறி தவறாமல் அரசாண்டு வந்தபோது, ஒரு நாள் வேட்டைமேற் சென்றவன் குமாரவனம் என்ற வனத்தை அடைந்தான். அது அம்பிகையின் ஆட்சிக்கு அடங்கிய வனமாதலின் அங்கே வேட்டையின் பொருட்டுப் புகுந்த அரசனும் அவனுடன் வந்தவர்களும் அம்பிகையின் சாபத்தால் பெண்ணுருவாயினர். இந்தக் கூட்டத்தில் சேராதவர்கள் இந்த அதிசய நிகழ்ச்சியை அறிந்து நகரத்துக்குச் சென்று அரசனுடைய மனைவிமார் முதலியோருக்குத் தெரிவித்தனர்.

சுத்தியும்னன், இளையாக மாறினவன், பெண்ணுரு வெடுத்த அமைச்சரைத் தோழியராகக்கொண்டு அவ் வனத்தில் திரிந்து, புதன் தங்கியிருந்த பர்ணசாலையை அடைந்தான். புதன் இளையுடன் கந்தருவ மணம் புரிந்து புரூரவன் என்னும் புத்திரனைப் பெற்றான். அவனுக்கு வேண்டிய கலைகளையெல்லாம் கற்பித்துப் பிறகு புதன் பிரிந்து சென்றான். இளை தன் மகனுடன் வசிஷ்ட முனிவர் ஆசிரமத்தை அடைந்து தங்களுக்கு நேர்ந்தவற்றைச் சொன்னாள்.

அப்போது வைவஸ்வத மனுவும் சுத்தியும்ன ராஜனுடைய மனைவி மாரும் அங்கே வந்து, இளையையும் பிறரையும் பார்த்து வருந்தினர். அப்பால் வசிஷ்ட முனிவர் சிவபிரான் திருவருளால் இளை முதலியவர்களைப் பழையபடியே ஆணுருவம் பெறும்படியாகச் செய்தார். "உமாதேவியின் சாபம் பெற்ற வனத்திற் புகுந்தபடியால் இந்த நிலை வந்தது. அதை முற்றும் மாற்ற முடியாது. இளை ஆணுருவம் பெற்றாலும் மாதத்தில் மூன்றுநாள் பெண்ணுருவத்தோடிருப்பாள்" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தான். பின்பு சுத்தியும்னன் பிரதிஷ்டானபுரம் வந்து மனைவிமாருடன் வாழ்ந்து மூன்று புத்திரர்களைப் பெற்றெடுத்தான். அந்த மூவருக்கும் தன் நாட்டிற் பங்கு கொடுத்துவிட்டு, பெண் உருவமாக இருக்கையில் புதனோடு சேர்ந்து பெற்ற புரூரவசுக்குப் பிரதிஷ்டானபுரத்தை அளித்து முடி சூட்டிவிட்டுத் தவம் செய்யும் பொருட்டு வனத்துக்கு ஏகினான். புரூரவன் 'தனது சௌந்தரிய புஜபல பராக்கிரமத்தாலும் சுத்த வீர தரும குணங்களாலும் மகா ராஜ சுபலட்சணமும் கம்பீரமும் சத்தியமும் தருமமும் ராஜநீதியும் ஆகிய குணங்களினாலும் தான் சக்கரவர்த்தியாய்ச் சகல வைபவங்களையும் பெற்று ஒரு தனிக்குடை நிழலில் செங்கோல் நடாத்தித் திக்குவிஜயங்கள் செய்து, மகாராஜாதி ராஜாக்களெல்லாம் தனக்குக் கப்பங்கள் செலுத்தித் தன் ஆக்கினையில் இருக்கும்படி இசைவித்து, விஜயசாலியாய் ராஜபோகங்களை அநுபவித்துக் கொண்டு மகா கீர்த்தியுடன்' வாழ்ந்து வந்தான்.

ஒரு சமயம் இந்திரனது அவையில் மித்திராவருணர் என்ற தேவதைகள் வந்தபோது ஊர்வசி அவர்களை வணங்காமல் இருந்ததனால், "நீ பூவுலகில் சென்று சிலகாலம் தங்குவாயாக!" என்று சாபம் வழங்கினர். அப்போது நாரத முனிவர் அங்கே வந்து பூவுலகில் அரசாட்சி செய்துவரும் புரூரவ மன்னனின் சிறப்பை எடுத்துரைத்தார். அதைக் கேட்ட ஊர்வசி அம் மன்னனுடைய நினைவாகவே பூவுலகத்துக்கு வந்து சரஸ்வதி நதிக்கரையில் காத்திருந்தாள். புரூரவ சக்கரவர்த்தி அங்கே வந்து ஊர்வசியைக் கண்டு தன்னை மணக்கும்படி விரும்பினான். ஊர்வசி தன் வரலாற்றைச் சொல்லிவிட்டு, "என்று உம்மை ஆடையின்றி நான் பார்க்கிறேனோ அன்று உம்மைவிட்டு விலகுவேன்" என்று கூறி அவனோடு சுகித்திருந்தாள். ஒருநாள் அரசனை ஆடையின்றிப் பார்க்க நேர்ந்தமை

யால் அவள் பிரிந்து செல்லலானாள். அப்போது புரூரவன் மிக வருந்தவே, "இன்னும் ஓராண்டு கழித்து உம்மிடம் வருவேன்" என்று சொல்லிப்போயினள். அப்படியே ஓராண்டு கழித்து வந்து புரூரவனுடன் இருந்து சில புத்திரர்களை ஈன்றாள். பிறகு தேவலோகத்துக்குச் செல்ல விரும்பியபோது மீண்டும் புரூரவன் அவள்பிரிவை யாற்றாமல் வருந்தினான். அப்போது ஊர்வசி சில கந்தருவர்களைத் தியானிக்கச் செய்து, அவர்கள் மூலம் தன்னை அடையலாம் என்று சொல்லிப் போயினள். அப்படியே மன்னன் அக்கந்தருவரைத் தியானிக்க அவர்கள் ஓர் அக்கினி ஸ்தாலியை அவனிடம் கொடுத்து, இதனால் ஊர்வசியை அடையலாம் எனக் கூறி மறைந்தனர். புரூரவன் அந்த அக்கினி ஸ்தாலியைப் பெற்று வனத்தில் திரிந்து கொண்டிருந்தான். ஊர்வசி வாராமற் போகவே அதனை ஓர் இடத்தில் பாதுகாப்பாக வைத்து விட்டுப் பிரதிஷ்டான நகரம் அடைந்து தன் மைந்தர்களுடன் கூடி வாழலானான்.

விசால நகரம் என்ற நகரத்தின் அரசனாகிய சோமதத்தனுக்குத் தவஞ் செய்து பெற்ற சுபதீஞ்சன் என்ற மகனும், ஜயப்பிரதை என்ற மகளும் இருந்தனர். ஜயப்பிரதை புரூரவமன்னனுடைய அழகையும் வீரத்தையும் கேள்வியுற்று அவனையே மணக்க வேண்டுமென்ற வேட்கையுடையவளாக இருந்தாள். அவளுக்கு மணப்பருவம் எய்தியதை அறிந்த சோமதத்தன் சுயம்வரத்துக்கு ஏற்பாடு செய்தான். அதற்குப் பல தேசத்து மன்னர்களும் வந்திருந்தார்கள். புரூரவ சக்கரவர்த்தியும் வந்தான். அப்போது ஜயப்பிரதையின் சகோதரனாகிய சுபதீஞ்சன் என்னும் இளவரசன் அங்கிருந்த அரசர்களைப் பார்த்து, "நான் சொல்லும் இலக்கணங்களை உடைய மன்னர் யாரோ அவருக்கே என் தங்கை மாலையிடுவாள்" என்று சொன்னான். "என்ன இலக்கணங்கள்?" என்று மன்னர்கள் கேட்க அவன் சொல்லலானான். "ஓ அரசர்களே, இவ்வுலகத்தில் மகாநுபாவர்களாகிய தாய் தந்தைகளின் மனோபீஷ்ட மந்திர பேதங்களினால் ஆண் பெண்ணுருவமாகச் சனித்து, பெண்ணே ஆணாகிப் பெண்ணாகி, ஆணும் பெண்ணுமாய் விளங்கி வம்ச விருத்திகளைச் செய்து, மகத்தான கீர்த்திகளை அடைந்த அவ்வாணே பெண்ணாகிய கருப்பத்திற் பிறந்து, விருத்தியடைந்து, சத்திய தருமாதி சகல சாஸ்திர விதிப்படி நடந்து, மகா சுத்த வீரப் பிரதாப சாலியாகச் சகல திக்கு விஜயங்களையும்

செய்து, மண்டலாதிபதியாய்ப் பெண்ணையே வேண்டித் தவங்கள் செய்து, இராஜ்யாதிகாரங்களையும் செய்து சகல இராஜ்யாதிபதி களுக்கும் இருதயாதிபதியான சுத்த வீரனாகிய சூரன் எவனோ அப்படிக் கொத்த வீரத்தையுடைய அரசனை என் சகோதரி மாலை யிடுவாள்" என்று கூற அரசர் அனைவரும் மௌனமாக இருந்தனர்.

புரூரவச் சக்கரவர்த்தி அப்போது எழுந்து தன் வரலாற்றைக் கூறவே, ஜயப்பிரதை அவனுக்கு மாலையிட்டாள். இருவருக்கும் மிக விமரிசையாக மணம் நடைபெற்றது. பின்பு புரூரவன் ஜயப் பிரதையுடன் தன் நகரம் வந்து இன்பமாக வாழ்ந்து வந்தான்.

ஒரு நாள் சனி பகவான் பிராமண வேடம் தாங்கி வந்து தம்மை இன்னாரென்று அறிவித்து, "நான் சகல ஜயமும் கொண்ட வன். அநேகங் கீர்த்தியுள்ளவன். என்னை உத்தமரான பெரி யோர்கள் மிகவும் கொண்டாடுவார்கள். ஆனபடியினாலே உம் மண்டைக்கு வந்தேன். உம்மிடத்தில் வருகிறதற்கு இளமை நல் லதோ, முதுமை நல்லதோ? உமக்குச் சம்மதியான காலத்தைச் சொல்லும்" என்று கேட்டார். மன்னன் இளமைக் காலத்தி லேயே வரவேண்டுமென்று கூற, சனி பகவான் மறைந்தார்.

புரூரவனுக்கு ஜயப்பிரதையிடமாக இரண்டு புதல்வர்கள் பிறந்தார்கள். ஒரு சமயம் நாட்டிலுள்ள மக்கள் தங்கள் பயிர் களைக் காட்டுவிலங்குகள் அழிப்பதாக வந்து முறையிட்டார்கள். அதுகாறும் ஜீவஹிம்சை செய்தறியாத மன்னன் முதலில் வேட் டைக்காரர்களைக் கொண்டு விலங்குகளை அழிக்கச் செய்தான். அவர்களால் எல்லாவற்றையும் அழிக்க முடியவில்லை. அதனால் தானே போய் வேட்டையாடி விலங்குகளைக் கொன்று குடி மக்க ளின் அச்சத்தைப் போக்கினான். அவன் உயிர்க்கொலை புரிந்ததே வியாஜமாகச் சனிபகவான் தம் ஆட்சியைக் காட்ட ஆரம்பித் தார். அவருடைய மாயையால் வேற்றுநாட்டு அரசர்களெல்லாம் புரூரவ மன்னன் நகரத்தை முற்றுகையிட்டனர். மன்னன் மந் திரியை அழைத்து, ராணுவங்களுக்கெல்லாம் முன் சம்பளம் கொடுத்து விட்டுச் சிறையில் இருக்கப்பட்டவர்களுக்கும் பொக் கிஷத்தைத் திறந்து கொடுக்கும்படி கட்டளையிட, அப்படியே மந்திரியானவர் சக்கரவர்த்தியுடைய கட்டளைப்பிரகாரம் சகல ஜனங்களுக்கும் கொடுத்ததுமல்லாமல், பறையறைவித்து வந்து

கேட்டபேருக்கு அபரிமிதமாய் அளித்து ஓர் குறைவில்லாமல் நடத்திவந்தான். இந்தச் சமாசாரத்தைக் கேட்டுப் பகை மன்னர்களெல்லாம், "இவ்வளவு நல்ல மன்னனை நம்மால் வெல்ல இயலாது. இவனுடன் சமாதானம் செய்து கொள்ள வேண்டும்" என்று எண்ணிக் கொண்டிருந்தனர்.

அன்று இரவு புரூரவ மன்னன், "இதுகாறும் நமக்கு அடங்கியிருந்த மன்னர்கள் இப்போது நகரை முற்றுகையிட்டிருக்கின்றனர். இது பண்டை விதியின் பயன். இப்போது நாம் நாட்டை விட்டுச் செல்வதே நல்லது. நாடு நமக்குக் கிடைக்கும் காலம் வரும்போது தானே வந்து சேரும்" என்று தன் மனைவியிடம் சொல்லி ஆடையாபரணங்களைக் கழற்றி வைத்து ஏழைகளைப் போலக் கந்தைகளை உடுத்து மனைவி மக்களுடன் நகரை விட்டுப் புறப்பட்டுவிட்டான். குழந்தைகளைத் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு போகும்போது சனீச்சர பகவான் ஒரு பிராமணனாக வந்து ஒரு குழந்தையைத் தாம் வாங்கிக் கொண்டு நடந்தார். இரவும் முழுவதும் துணையாக வந்து, விடியும்போது ஒரு நகரத்தைக் காட்டி விட்டுப் போய்விட்டார்.

அவர்கள் அதை நோக்கி நடக்கையில் இடைவழியில் வயல்கள் நிறைந்திருந்த இடத்தில் நண்பகலாய்விட்டது. மேலே நடக்கவொட்டாமல் அங்கே களைத்து விழுந்தனர். அங்கே வயல்களில் அறுவடை நடந்து கொண்டிருந்தது. வேலை செய்து கொண்டிருந்த கூலியாட்களின் தலைவனான ஆனந்தன் என்பவன் அவர்களைப் பார்த்து இரங்கித் தங்களுக்கு வந்த உணவில் ஒரு பகுதியைக் கொடுத்துப் பசி தீர்த்தான். பிறகு, "நீங்கள் யார்?" என்று கேட்டபோது, "புரூரவச் சக்கரவர்த்தியின் நகரத்தில் கணக்கெழுதிக் கொண்டிருந்தேன். அங்கே கலகமானபடியால் எல்லாவற்றையும் பறி கொடுத்துவிட்டு இப்படி வந்துவிட்டேன்" என்றான் மன்னன். கேட்டு இரங்கிய தொழிலாளர் தலைவன், "நீங்கள் எங்களுடனே இருந்து கணக்கெழுதலாம். எங்களால் ஆன உதவியைச் செய்வோம்" என்று சொல்லி அவர்களை அழைத்துக் கொண்டு சென்று ஒரு வீடு கட்டிக் கொடுத்து அதில் வாழும் படி ஏற்பாடு செய்தான். புரூரவ மன்னன் மனைவி மக்களுடன் கணக்குப் பிள்ளையாக அங்கே வாழ்ந்து வந்தான்.

சோமபுரி என்னும் நகரில் சோமேசன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அந்த நகரில் இருந்த பெருஞ் செல்வராகிய நவகோடி நாராயண செட்டியாரென்பவர் முப்பத்திரண்டு தர்மங்களையும் செய்துவந்தார். ஒரு பெரிய திருக்குளம் வெட்ட வேண்டுமென்று எண்ணிய செட்டியார் முன்னே சொன்ன ஆனந்தன் என்ற தொழிலாளர் தலைவனைக் கூப்பிட்டு அவனிடம் அவ் வேலையை ஒப்பித்தார். அவன் வேலை செய்பவர்களுக்கு ஒவ்வொரு பங்கு கூலி பேசி அதேமாதிரி ஒரு பங்கைக் கணக்குப் பிள்ளைக்கும் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தான்.

குளம் வெட்டும் வேலை நடந்துகொண்டிருந்தது. சனி பகவான் நவகோடி நாராயணசாமி செட்டியார் மனத்துள் புகுந்து ஆட்டினார். செட்டியார் கூலியாட்களைப் பார்த்து, "இனிமேல் நீங்கள் கூலி வாங்க வரவேண்டாம். உங்கள் மனைவிமாரை வந்து வாங்கிக்கொண்டு போகச் சொல்லுங்கள்" என்று உத்தரவிட்டார். அந்த மகளிர் வந்து கூலிவாங்கியபோது, "கணக்குப்பிள்ளை மனைவி யார்?" என்று கேட்க, அவர்கள் ஐயப்பிரதையைக் காட்டினார்கள். அவளைக் கண்ட செட்டியாருக்கு அவள்பால் ஆசை உண்டாயிற்று. அடுத்த நாள் அவள் கூலிவாங்க வந்தபோது, உள்ளே கூலித்தானியம் இருக்கிறதென்றும், எடுத்துக் கொள்ளும்படி செட்டியார் சொன்னாரென்றும் சொல்லச் செய்து, அவளை ஓர் அறையில் அடைக்க ஏற்பாடு பண்ணினார். அப்படியே காரியஸ்தர்கள் செய்ய ஐயப்பிரதை தனியே அகப்பட்டுக் கொண்டாள். தன் நிலைமையை உணர்ந்து கொண்ட அவள் சுற்று முற்றும் பார்த்தாள். அங்கே ஒரு பெட்டி இருப்பதைக் கண்டு அதற்குள்ளே புகுந்து, "நான் உண்மையான பத்தினியாக இருந்தால் இந்தப் பெட்டி யாராலும் திறக்க முடியாமல் இருக்கவேண்டும். என் கணவர் தீண்டினால் திறக்க வேண்டுமேயன்றி, நீரிலே போட்டாலும் ஆயுதங்களால் வெட்டினாலும் கெடாமல் இருக்கவேண்டும். என் கணவரைக் காணும் மட்டும் எனக்குப் பசிதாகம் இருக்கக் கூடாது" என்று சபதஞ் செய்து அதை மூடிக் கொண்டாள்.

பிறகு செட்டியார் அறையைத் திறந்து பார்க்கையில் ஐயப்பிரதையைக் காணவில்லை. திறந்துகிடந்த பெட்டி மூடியிருந்ததைப் பார்த்துத் திறக்கையில் அது திறக்கவில்லை. கோடரி கொண்டு

வெட்டிப்பார்த்தும் பெட்டிக்கு எவ்விதமான பின்னமும் நேர வில்லை. செட்டியார் தம் வீட்டைத் தாமே கொளுத்திவிட்டு, "கணக்குப் பிள்ளை மனைவி கூடையை எடுத்துக் கொள்ள வீட்டுக் குள் போனாள். வீடு தீப்பற்ற அவள் அகப்பட்டுச் சாம்பலானாள்" என்ற வதந்தியைப் பரப்பினார். வீடெல்லாம் வெந்து சாம்பரான பிறகு பார்க்கையில் அந்தப் பெட்டி சிறிதும் அழிவின்றி முன்னை யிலும் பளபளப்பாக இருந்தது. இந்தச் செய்தி அரசன் காதில் விழுந்தால் தமக்குத் தண்டனை கிடைக்குமென்று அஞ்சிய செட்டி யார், அந்தப் பேழையை எடுத்துக்கொண்டு அந்தமான் தீவுக்குப் போகிற கப்பலில் ஏறினார். நடுக்கடலில் கப்பலில் போகும்போது, பெட்டியைக் கடலில் எறிந்துவிடலாமென்று அதை எடுக்கையில் உள்ளே இருந்த ஐயப்பிரதை பேசலானாள்: "ஓ ஓ செட்டியாரே ! ஏன் சமுத்திரத்திலே போடுகிறீர்? போட்டால் உம்மை விடப் போகிறதில்லை. எனக்கு ஒரு நோன்புண்டு. அது முடிவதற்கு ஏழரை வருஷம் செல்லும். அது தெரியாமல் பொல்லாத நினைப்பு நினைத்தீர். நோன்பு முடிகிற வரையில் ஒருவர் முகம் பார்க்க வொண்ணாதாகையால் இப்படிப் பிரதிக்ஞை செய்துகொண்டேன். நோன்பு முடிந்த காலத்திலே பேழை தானே திறக்கும்" என் றாள். அதைக் கேட்ட செட்டியார் பேழையைக் கடலில் தள்ளா மல் அந்தமான் தீவுக்கே கொண்டுபோய், அங்கே வீடுகட்டி அதில் பேழையை வைத்துவிட்டு அங்கும் வியாபாரம் செய்துகொண்டு வாழ்ந்தார். தினந்தோறும் பேழையில் காது வைத்து மூச்சு இருக்கிறதா இல்லையா என்று பார்த்து வந்தார்.

கணக்குப் பிள்ளையாக இருந்த புரூரவச் சக்கரவர்த்தி நெடுநேரமாகியும் தன் மனைவி வீட்டுக்கு வராததை அறிந்து விசா ரிக்கையில், "கூலித் தானியத்தை எடுத்துக்கொள்ளப் போனவள் தீயில் வெந்து இறந்தாள். வீடு சாம்பலாகிவிட்ட துக்கத்தால் செட்டியார் அந்தமான் தீவுக்குப் போய்விட்டார்" என்று கேள்வி யுற்றான். தன் விதியை நொந்தபடி இரண்டு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு ஒரு காட்டின் வழியே போகையில் சனி யினது ஏவலால் அதிக மழை பெய்து இடையிலிருந்த காட்டாற் றில் வெள்ளம் பெருகியது. குழந்தைகளை நடத்தி அழைத்துப் போக முடியாதென்றெண்ணி ஒரு குழந்தையை அங்கிருந்த செடி ஒன்றில் கட்டிவிட்டு மற்றொரு குழந்தையை எடுத்துக்

கொண்டு ஆற்றைத் தாண்டி அக்கரைக்குப் போனான். அங்கே ஒரு செடியில் தான் கொண்டுவந்த குழந்தையைக் கட்டிவிட்டு, மறுபடியும் இக்கரை வந்து கட்டியிருந்த குழந்தையை எடுத்து வரலாமென்று ஆற்றில் இறங்கி வருகையில் திடீரென்று வெள்ளம் அதிகமாகி அவனை அடித்துக்கொண்டு போயிற்று. இவ்வாறு சனிபகவான் மன்னனுடைய மனைவியையும் மக்களையும் தனித் தனியே பிரித்துவிட்டார்.

கடவுளை நினைந்து புலம்பியபடியே ஆற்றில் அடித்துக் கொண்டு போகப்பட்டான் புரூரவச் சக்கரவர்த்தி. செய்தவபுரம் என்ற நகரத்துக் கருகே போகிறபோது அங்கே கரையில் இருந்த இடையர்கள் அவனைக் கண்டு கரை யேற்றி விட்டார்கள். "நீ யார்"? என்று அவர்கள் கேட்க, "நான் ஒரு கோனாரிடம் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தேன். ஆட்டுக்குட்டி பிரிந்து போகவே தேடிவந்து வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டேன்" என்றான். அவர்கள், தங்களோடு இருந்து ஆட்டுக் குட்டிகளை மேய்த்துப் பட்டியில் கொண்டுவந்து அடைத்துக் காவலாகப் படுத்துக்கொள்ள வேண்டுமென்று திட்டம் செய்து அரசனுக்கு வேண்டிய உணவை உதவி வந்தார்கள்.

ஆற்றின் இரண்டு கரையிலும் தனித் தனியே கட்டியிருந்த குழந்தைகள் இருவரையும் ஓர் ஆய்ச்சி கண்டெடுத்து வளர்த்து வந்தாள். ஐந்து வயசான பிறகு கையில் கோலைக் கொடுத்து ஆடு மேய்க்கச் சொன்னபோது அந்த இரண்டு பிள்ளைகளும், அந் தக் கோலை வைத்துக் கொண்டு வில்லென்றும் அம்பென்றும் பாவித்து விளையாடலானார்கள். அதைக் கண்ட ஆய்மகள் இவர் கள் அரசகுமாரர்களாக இருக்க வேண்டுமென்று எண்ணி, அவர்க ளுக்குச் சிலம்பம் கற்றுக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தாள். அவர்கள். அந்த வித்தையோடு படைக்கலப் பயிற்சியும் பெற்றார்கள்.

செய்தவபுரமென்ற நகரத்தில் செய்தவன் என்ற அரசன் ஆண்டுவந்தான். ஒருநாள் சனிபகவான் ஏவலால் சில திருடர்கள் அந்த அரசன் அரண்மனையில் கன்னமிட்டு அரசியினுடைய ஆபர ணப் பெட்டியைத் திருடிக் கொண்டு சென்றனர். திருடினவர்கள் ஆபரணங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு பெட்டியை மாத்திரம்

ஆட்டுக் குட்டிகளுக்குக் காவலாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த புரூரவனிடம் போட்டுவிட்டுச் சென்றனர். மறுநாள் அரசனுடைய ஏவலர் திருடர்களைத் தேடிவந்து புரூரவன் அருகில் ஆபரணப் பேழையைக் கண்டு அவனையே திருடனென்று இழுத்துச் சென்றனர். அரசன் முதலில் அவன் திருடியிருக்கமாட்டானென்று ஐயுற்றாலும் கையும் பேழையுமாக அகப்பட்டமையால் அவனே திருடனென்று நிச்சயம் செய்து ஒரு கையையும் காலையும் வாங்கும்படி கட்டளையிட்டான். அயல் நாட்டாருக்கு உதவி செய்யும் பரதேசிகாவற் செட்டியார் என்பவர் அந்த நகரத்தில் இருந்தார். அவர் அன்று ஊரில் இல்லை. தம்முடைய கப்பல் ஒன்று அயல் நாட்டிலிருந்து வந்து கரையிறங்கி யிருந்ததனால், அதைப் பார்க்கப் போயிருந்தார். அவர் இருந்திருந்தால் எப்படியாவது புரூரவனைக் காப்பாற்றி யிருப்பார். ஆனால் சனிபகவானுடைய வேலை செட்டியாரைச் சமயத்திற்குப் பயன்படாமல் செய்துவிட்டது. புரூரவ மன்னன் ஒரு கையையும் காலையும் இழந்து துன்புற்றான்.

வேதனை தாங்கமாட்டாமல் சிவபெருமானை நினைந்து புலம்பிப் பஞ்சாட்சரத்தை ஜபித்தபிறகு கலைமகளை மன்னன் நினைத்தான். கலைமகள் ஒரு மூக்கறைச்சியைப்போல அங்கேவந்து அரசனுடைய காயத்துக்கு மருந்து போட்டுவிட்டு, மிகவும் சுவையுள்ள உணவையும் அருத்தினாள். வந்தவள் கலைமகள் என்பதைக் குறிப்பால் அறிந்த புரூரவன் அவளைத் துதிசெய்ய, "எப்பொழுது நினைத்தாலும் உதவ வருவேன்; அஞ்சாதே" என்று சொல்லி மறைந்தாள். அவன் கையிலும் காலிலும் இருந்த ரணம் ஆறியது; வலியே தெரியவில்லை.

மறுநாள் பரதேசி காவற் செட்டியார் தம் ஊருக்கு வந்து முதல் நாள் நிகழ்ந்த செய்தியைக் கேட்டுப் புரூரவன் இருக்கிற இடம் வந்து அவனைத் தண்டிகையில் ஏற்றித் தம் மாளிகைக்குக் கொண்டுபோய் நல்ல மஞ்சத்தில் கிடக்கச் செய்தார். "நீர் யார்?" என்று செட்டியார் கேட்கப் புரூரவன், "சில காலம் கழித்துத் தெரியவரும்" என்று சொன்னான். கலைமகள் அங்கும் வந்து புரூரவனுக்கு அமுதருத்தி வந்தாள். செட்டியார் அந்த உணவில் ஒரு பகுதியை வாங்கி உண்டு அதன் சுவை மிகுதியை அறிந்து வியப்படைந்தார்.

ஒருநாள் உபரிஷி என்னும் முனிவர் அங்கே வந்து பேசிக் கொண்டிருந்தபோது கலைமகள் வழக்கம்போல் புரூரவனுக்கு உணவு கொண்டுவந்தாள். அவளை இன்னாரென்று தெரிந்த உபரிஷி எழுந்து வணங்கித் துதித்தார். அப்போது, மூடவனாகிய சக்கரவர்த்தியும் செட்டியாரும் புளகாங்கிதமாய் ஆனந்த பரவசராய்த் தேவியைத் தோத்திரஞ் செய்து கூத்தாடி இரண்டு கைகளையும் சிரசின்பேரில் வைத்துக்கொண்டு நின்றார்கள். கலைமகள் புரூரவனுக்கு உணவு அளித்துவிட்டு மறைந்தாள். பரதேசி காவற் செட்டியார் உபரிஷியை வணங்கி, "இந்தப் பெரியார் யார்?" என்று புரூரவனைப்பற்றிக் கேட்க, "இன்னும் மூன்று ஆண்டுகள் கழித்து உண்மை தெரியவரும். இவர் மனைவியும் மக்களும் அப்போது வந்து கூடுவார்கள். சங்கீதத்தில் இவருக்கு ஒப்பானவர் யாரும் இல்லை" என்று சொல்லிவிட்டு முனிவர் சென்றார்.

இங்கிருந்து சென்ற உபரிஷி யென்னும் முனிவர், புரூரவனுடைய குமாரர்கள் இருவரும் வளரும் ஆய்மகள் வீட்டுக்குப் போய் அவளிடம் அவர்கள் இருவரும் அரச குமாரர்கள் என்று தெரிவித்து, அவர்களுக்கு உபநயனம் செய்து பல கலைகளையும் கற்பித்தார். அப்பால் அந்தமான் தீவுக்குச் சென்று நவகோடி நாராயண செட்டியாரைக் கண்டார். செட்டியார் அவரை உபசரித்து இருக்கச் செய்து பேசிக் கொண்டிருந்தார். "நீங்கள் சென்றவிடங்களில் ஏதேனும் புதுமை உண்டோ?" என்று செட்டியார் கேட்க, உபரிஷி புரூரவச் சக்கரவர்த்தியின் வரலாற்றைச் சொல்லி, செய்தவபுர மென்னும் நகரத்தில் அவன் இருப்பதையும் சொல்லிப் பின்பு விடைபெற்றுப் போய்விட்டார்.

அருகில் பேழையில் இருந்த ஜயப்பிரதை தன் நாயகர் வரலாற்றைக் கேட்டு மிகவும் துயருற்றாலும் உயிருடன் இருக்கிறாரென்பதில் ஆறுதல் பெற்றாள். செட்டியாரும் இனி நம் ஊருக்குப் போவோமென்று சொத்துக்களுடன் புறப்பட்டார். நடுவில் கப்பல் திசை தப்பி ஒரு தீவிலே விட அங்கே இறங்கி அவ்விடத்தில் மாளிகை கட்டிக் கொண்டு அங்கேயே வியாபாரம் செய்து வந்தார்.

செய்தவபுரத்து அரசனாகிய செய்தவன் தவஞ் செய்து ஒரே பெண்ணைப் பெற்றான். அவளுக்குப் புஷ்ப பாஞ்சாலி யென்று

பெயர். அவள் எல்லாக் கலைகளிலும் வல்லவளாகிச் சங்கீதத்தில் ஒப்பற்றவளாக விளங்கினாள். அவளுக்கு அழகிலும் சங்கீதத் திறமையிலும் சிறந்த ஒருவனே மணவாளனாக வரவேண்டும் என்று அரசன் விரும்பினான். 'அப் பெண்ணை ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் விரும்பிக் கேட்ட காலத்தில் செய்தவ புரத்தை ஆளுகின்ற செய்தவன் என்கிற ராஜா யாதாமொருவர் சங்கீதத்தினாலே பட்ட மரம் தளிர்க்கவும் கல் உருகி விழவும் அந்தரப்படல் வரவும் பாடுகிறாரோ அப்படிப் பாடின பேருக்கு என் குமாரத்தியாகிய புஷ்பபாஞ்சாலி மாலையிடுவாள்' என்று சொல்லி விட்டான். அப்படிப் பாடுபவர்கள் யாரும் இல்லாமையால் தன் மகளுக்கு ஒரு கன்னிமாடம் கட்டிவைத்து அவளை அதில் வாழச் செய்தான்.

ஒரு நாள் பரதேசிகாவற் செட்டியார் வீட்டில் இருந்த புரூரவச் சக்கரவர்த்தி மாலையில் சிவபூஜையை முடித்துக்கொண்டு கையில் வீணையை எடுத்துக் கடவுளைத் துதித்துப் பாடினான். அந்தப் பாட்டு, கன்னிமாடத்தின் உப்பரிகையில் படுத்திருந்த புஷ்ப பாஞ்சாலியின் காதில் விழுந்தது. அப்போது அவள் அணிந்திருந்த பச்சைக் கல் உருகியது. அதைக் கண்டு வியப்பெய்திய அரசகுமாரிக்குத் தனக்குத் தக்க நாயகன் கிடைத்துவிடுவான் என்ற நம்பிக்கையும் காமவிகாரமும் உண்டாயின. பிறகு அந்தப் பாட்டைப் பாடினவர் யாரென்று தோழியை அனுப்பி விசாரித்து வரச் செய்தாள். திருடனென்று குற்றம் சாற்றப்பெற்றுக் கையையும் காலையும் இழந்தவனே பாடுகிறானென்று அறிந்தாள். முன்பே அவனைக் குற்றவாளியாகக் கொண்டுவந்து நிறுத்தின காலத்தில் அவனுடைய பேரழகைப் பார்த்திருந்தாளாகையால், அவனையே மணப்பதென்று இப்போது நிச்சயம் செய்துகொண்டாள். அது முதல் அவளுக்குக் காமவிகாரம் மிகுதியாயிற்று. அவளுடைய தாய் இதை அறிந்து அரசனுக்குத் தெரிவிக்க, அவன் சுயம்வரத்துக்கு ஏற்பாடு செய்தான். பல தேச மன்னர்கள் சுயம்வர மண்டபத்திற்கு வந்திருந்தனர். பரதேசிகாவற் செட்டியாரும் வேடிக்கை பார்ப்பதற்காகப் புரூரவனையும் அழைத்துக் கொண்டு ஓர் ஓரத்தில் வந்து அமர்ந்திருந்தார். புஷ்பபாஞ்சாலி சிவபெருமானைத் தியானித்துக் கொண்டு, "என் விருப்பம் நிறைவேற வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கையிலிருந்த மாலையை வீசி எறிந்தாள்.

அது மூலையில் உட்கார்ந்திருந்த புரூரவச் சக்கரவர்த்தியின் கழுத்தில் விழுந்தது. திருடிக் கால் கையறுப்புண்டவன் கழுத்தில் மாலை விழுந்ததைக் கண்டு யாவரும் பல விதமாகப் பேசினர். செய்தவ ராஜனும் அவன் மனைவியும் மூர்ச்சையாகி விழுந்து விட்டனர். புஷ்பபாஞ்சாலிமட்டும் தன் கருத்துப்படியே நிகழ்ந்தது பற்றிச் சந்தோஷம் அடைந்தாள்.

அரசன் அவமானம் தாங்கமாட்டாமல் தற்கொலை செய்து கொள்ளப் போனான். அவனுடைய குலகுரு அவனைத் தடுத்து, "விதியை யாரால் வெல்ல முடியும்? அவர்களைக் காட்டில் விட்டு விடு" என்று கூறினார். யார் என்ன சொல்லியும் கேளாமல் புஷ்ப பாஞ்சாலி தன் கணவனுடன் காட்டுக்குப் போவதாக உறுதியுடன் கூறினாள். பரதேசிகாவற் செட்டியார் அவ்விருவரையும் காட்டிற் கொண்டு போய் விட்டுவந்தார்.

காட்டில் புரூரவ சக்கரவர்த்திக்கு வழக்கம்போல் உணவு அருத்தக் கலைமகள் வந்தாள். அவள் விசுவகருமனை அழைத்து அங்கே மாளிகையும் கூடமும் கோபுரமும் அமைக்கச் செய்தாள். அதில் புரூரவச் சக்கரவர்த்தியும் புஷ்பபாஞ்சாலியும் வாழலானார்கள். சனீச்சர பகவான் பற்றியிருக்கும் காலம் முடிவடைந்தது. அப்போது சனிபகவான் அங்கே வந்து அரசனுக்கு அருள் புரிந்தார். மும்மூர்த்திகளும் காட்சி கொடுத்துப் புரூரவனுக்குக் கைகால் வளரச் செய்து, முன்பினும் அதிகமான மேனியழகையும் காந்தியையும் கொடுத்தருளி மறைந்தார்கள். கலைமகள் வழக்கம் போல் அமுத மூட்டி வந்தாள்.

இப்படியிருக்க, கைகால் இல்லாதவர்களும் கூன் குருடாயிருப்பவர்களும் அந்த மாளிகைக்குள் சென்று தங்கள் குறை தீர்ந்து வெளி வந்தார்கள். காட்டிலுள்ள கோவிலில் தெய்விகம் விளங்குகிற தென்ற செய்தி எங்கும் பரவியது. செய்தவராஜன், தன் மகளும் அவள் கணவனும் என்ன ஆனார்களோ என்ற துயரத்தோடிருந்தவன், இந்தச் செய்திகேட்டுத் தன் அமைச்சருடனும் மனைவியுடனும் அங்கே சென்றான். முதலில் தன் மகளையும் மருமகனையும் அடையாளம் கண்டு பிடிக்கவில்லை. அப்பால் தெரிந்து ஆனந்தக் கடலில் மூழ்கினான். பரதேசி காவற் செட்டியாரும்

அங்கே வந்து புரூரவன் கால் கை வளர்ந்திருப்பதைக் கண்டு இன் புற்றார். அப்பால் செய்தவராசன் தன் ஏவலாட்களைக் கொண்டு அங்கே ஒரு பெரிய பட்டணம் உண்டாக்கி அதற்குத் தன் மரு மகனையே அரசனாக முடியணிந்து அவனுக்குத் தெய்விக ராஜன் என்று பெயர் சூட்டினான். அந்தப் புதிய நகரத்துக்குத் தெய்விக புரம் என்ற பெயர் வழங்கியது. பல நாடுகளிலும் அந்த நகரத்தின் பெருமை பரவியது. தெய்விக ராஜனுக்கும் புஷ்பபாஞ்சலிக்கும் குணபத்திரன் என்ற மகன் பிறந்தான்.

முன்பு பிரதிஷ்டான நகரத்தில் இருந்த போது புரூரவ சக்கர வர்த்தியினிடம் இருந்த பழைய மந்திரி தெய்விகபுரத்தில் தெய்விகம் விளங்குவதைக் கேள்வியுற்று, தம் அரசனாகத்தான் இருக்கவேண்டுமென்றெண்ணி வந்து கண்டு மகிழ்ந்தான். ஆய்மக ளிடம் வளர்ந்து வந்த பிள்ளைகள் இருவரும் தெய்விக புரத்தில் தெய்விக அரசன் படையில் வீரர்களைச் சேர்ப்பதாகக் கேள்வியுற்று அங்கே வந்து சேர்ந்தனர். நவ கோடி நாராயண செட்டியார் இந்த அதிசய நகரத்துக்குப் போனால் பேழை திறக்கு மென்று வந்தார். வந்து தெய்விக ராஜனை வணங்கித் தம் தவறான முயற்சியைச் சொல்லி, பேழையில் இருக்கும் பெண் நோன்பு ஆனதும் வெளிப்படுவதாகச் சொன்னதைச் சொன்னார். கடைசி யில் கலைமகள் எல்லாவற்றையும் வெளிப்படுத்தினள். அத் தேவி யின் கட்டளைப்படியே தெய்விக ராஜன், அந்தப் பேழையைத் தொட்டவுடன் அது திறந்து கொள்ளவே ஐயப்பிரதை வெளியே வந்தாள். படைவீரர்களாக இருந்த இருவரும் தம் குமாரர் என்பதைக் கலைமகளால் உணர்ந்த தாய் தந்தையர் மனமகிழ்ந் தனர். பிரதிஷ்டானபுரத்தை முன்பு கைப்பற்றிய பகையரசர்கள் அங்கே வந்து சக்கரவர்த்தியைப் பணிந்து மீட்டும் நாட்டை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வேண்டினர்.

புரூரவச் சக்கரவர்த்தி தன் மூத்த புதல்வனாகிய சத்திய தரனைப் பிரதிஷ்டானபுரத்திற்கு அரசனாகவும், இரண்டாம் புதல் வனாகிய தருமசீலனைத் தெய்விகபுரத்திற்கு அரசனாகவும், புஷ்ப பாஞ்சாலியின் குமாரனாகிய குணபத்திரனைத் தன் மாமனார் நகர மாகிய செய்தவபுரத்துக்கு அரசனாகவும் முடி சூட்டி விட்டுத் தன் மனைவிமாருடன் சுகமாக வாழ்ந்தான்.

அப்பால் வனம் சென்று ஊர்வசியைத் தியானித்து முன் வைத்திருந்த அக்கினிஸ்தாலியைப் பார்க்க, அங்கே ஓர் அரசமரம் முளைத்திருந்ததைக் கண்டான். அதிலிருந்து அரணிகளை எடுத்துக் கடைந்து அக்கினியை உண்டாக்கி வேள்விகளைச் செய்து, ஊர்வசி வாழும் தேவலோகத்தை அடைந்தான்.

## ஒற்றுமை வேற்றுமைகள்

இந்த நாடகத்தின் கதாநாயகனாகிய மன்னனைப் புரூரவச் சக்கரவர்த்தி, புரூரவராசன், புரூர்வன், பூர்வமகிபதி, பூர்வசக்ரவர்த்தி, பூர்வ இராசன் என்று ஆசிரியர் கூறுகிறார். சக்கரவர்த்தி ராசன், பூலோக சக்கரவர்த்தி மகாராஜா, சக்கரவர்த்தி என்றும் கூறுவர். புரூரவஸ், புரூரவா என்றும் பிற நூல்களில் இவ்வரசன் பெயர் வழங்குகிறது. மனு நீதியில் வல்லவனாக இருந்தமையால் இவனை மனு விஞ்ஞானன் என்றும் வழங்குவர் (18-வசனம், 39); இப் பெயரைப் புரூரவச் சக்கரவர்த்தி கதையிலும் காணலாம்.* புரூரவ மன்னன் ஆண்ட நகரம் பிரதிஷ்டானபுரம் என்றே எல்லா நூல்களும் கூறும். இந்த நாடகம் இந்திரபுரி என்று கூறும். இவ்விரண்டு பெயர்களையும் புரூரவச் சக்கரவர்த்தி கதையில் காணலாம். பிரதிஷ்டான புரத்திற்கே இந்திரபுரி என்ற பெயர் ஒன்று உண்டுபோலும்.

புரூரவனுடைய மனைவியின் பெயர் வாசவதத்தை என்று புரூரவா சரிதை என்னும் காவியம் கூறும். புரூரவச் சக்கரவர்த்தி கதை விசாலநகரத்து அரசனாகிய சோமதத்தனுடைய குமாரி ஜயப்பிரதை என்றுரைக்கும். இந்த நாடகத்திலோ விதர்ப்ப தேசத்து அரசனாகிய சந்திரலோசனன் மகள் சிற்பிரபை என்று சொல்லும். சந்திரலோசனன் என்பது செய்யுளோசையின் பொருட்டுச் சந்திரலோசன் என்றும் இந் நூலில் வரும்.

புரூரவ மன்னன் தேவர்களுடைய பகையைப் போக்கி உதவி செய்தவன் என்பதைச் சில நூல்கள் கூறும். இந்நூலிலும், "அமரர்குறை அகல அருள்கின்றவன்" (3) என்று வருவதைக் காணலாம்.

---

* புரூரவச் சக்கரவர்த்தி கதை, ப. 98.

புரூரவ மன்னன், புதனுக்கும் ஆண் பெண்ணாக மாறிய இளை என்பவளுக்கும் பிறந்தவன் என்பதை எல்லா நூல்களும் தெரிவிக்கின்றன. இந்நூல் அவ்வாறு சொல்லவில்லை. சிவபெருமானுடைய குமாரன் என்று கூறுகிறது; "சிவை அன்புகூர்ந் தீன்றருள் கின்ற பாலன்" (3), "உமையவள் பங்கன் அருளிய மங்களாகர செங்கமல முக எங்கள் புரூரவ துங்கன்" (6), "இங்கித சங்கரன் சந்ததி" (37), "அத்தியை உரித்தவர் புத்திரனாகிய சத்திய வாக்கியம் பெற்றருளும் பரிசுத்தனெனுஞ் சக்ரவர்த்தி" (44) என்பவற்றைக் காண்க.

ஊர்வசி சிவபிரானைப் பூசித்தாள் என்ற செய்தி இந்த நாடகத்தில்தான் வருகிறது. அவள் பூசித்த தலம் இந்திரன் பூசை செய்த சோமனூர் கோயில் என்று இந் நாடகம் சொல்கிறது. சோமநாத புரம் என்ற தலம் ஒன்று சௌராஷ்டிர ராஜ்யத்தில் உண்டு. அதைப்பற்றிக் கேள்வியுற்ற ஆசிரியர் அதனையே இதில் குறித்திருத்தலும் கூடும். ஊர்வசியை அரசனிடத்திலிருந்து மீட்ட செய்தி சில நூல்களில் வருகின்றது. அவளைப்பற்றிச் சென்றவன் கேசி என்ற அசுரன் என்பது சில நூல்களில் உள்ளது.

ஊர்வசிக்கும் புரூரவனுக்கும் காதல் அரும்பியதும் அவ்விருவரும் ஒன்றி வாழ்ந்து பிரிந்ததுமாகிய வரலாற்றை இந்நாடக ஆசிரியர் அடியோடு விட்டுவிட்டார். தமிழில் உள்ள புரூரவா சரிதை, புரூரவ சக்கரவர்த்தி கதை என்ற இரண்டைத்தவிரப் பிற நூல்கள் யாவும் இந்த வரலாற்றையே விரித்துரைக்கின்றன. தமிழிலுள்ள காவியமும் வசன நூலும் வரலாற்றின் ஆரம்பத்தில் புரூரவன் ஊர்வசியைக் காதலித்ததைச் சொல்கின்றன.

சிற்பிரபை திருமணத்தில் சமுசகூறுவது வசனநூலிலும் இந்த நாடகத்திலும் இருக்கிறது. ஆனால் வசன நூலில் புரூரவன் பிறப்பைக் குறிக்கும் சமுசு கூறப்படுகிறது. இந்த நாடகத்திலோ நான்கு வேறு சமுசுகள் வருகின்றன.

புரூரவனுடைய மந்திரி பெயர் மதிதீரன் என்று கதை கூற, இந்நாடகம் மதிதரன் என்று கூறும்.

சிற்பிரபைக்குச் சத்தியதரன், தருமசீலன் என்ற இரண்டு குமாரர்கள் பிறந்த செய்தி கதைக்கும் நாடகத்துக்கும் பொது

வாக அமைந்தது. காவியத்தில் ஏமாங்கதன், கனகாங்கதன் என்பன அப் புதல்வர்களின் பெயர்களென்று காணப்படுகின்றது.

புரூரவ மன்னனிடம் சனிபகவான் வருவதை உபரிசனர் என்ற முனிவர் முன்பே வந்து கூறினர் என்று இந்நாடகம் கூறும்; நாரதர் உரைத்தார் என்று காவியம் சொல்லும். வசன கதையில் பிற்பகுதியில் உபரிஷி என்பவர் வருகிறார். சனி பகவான் மன்னனிடம் வந்து அவன் விருப்பத்தை அறியும் செய்தி வசன கதையிலும் நாடகத்திலும் காணப்படுகிறது. இப்படியே சனியின் பீடிதத்தால் நாட்டில் வனவிலங்குகள் பயிரை அழித்ததும், அரசன் வேட்டைக்குச் சென்றதும், பகைமன்னர் சூழ்ந்ததும், பொக்கிஷப் பொருளைப் பலருக்கும் வழங்க மன்னன் கட்டளையிட்டதும், இரவில் புல்காரரோடு மனைவி மக்களுடன் புறப்பட்டதும், சனி பகவான் துணையாக வந்ததும், மக்கள் பசியால் நொந்ததும் ஆகிய செய்திகள் இந்நாடகத்தில் இருப்பதைப் போலவே வசன கதையிலும் உள்ளன. ஓர் அரக்கன் நகரை வந்து அழித்ததனால் மன்னன் நாட்டைவிட்டு அகன்றானென்று காவியம் சொல்லும்.

இவ்வாறுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நோக்கும்போது, இந்நாடகத்தின் ஆசிரியர் வசன உருவில் வழங்கும் புரூரவச் சக்கரவர்த்தி கதையையே பெரும்பாலும் பின்பற்றி இதனை இயற்றியிருக்கவேண்டுமென்று தோற்றுகிறது. பிற்பகுதியும் கிடைத்திருந்தால் இன்னும் தெளிவாக இதனைத் தெரிந்து கொண்டிருக்கலாம்.

## புரூரவன் இயல்பு

**வே**று சில நூல்கள் புரூரவ மன்னனை விஷ்ணுபக்தன் என்று கூறும். தமிழில் உள்ள வசன கதை அவனைச் சிவபக்தனென்று சொல்லும். இவ்வாசிரியரோ அவனைச் சிவபிரானுடைய புதல்வனாகவே வைத்துவிட்டார். அவனுடைய சிவபக்தியைப் பலவகையில் எடுத்துக் காட்டுகிறார்.

"புத்தி அருளிய நித்தியன் பதமதில்
பத்தி யுடனேஅருச் சித்துப் பதம்பெற
எத்திசை யும்புகழ வெற்றி பெறும்பரி
சுத்தன் சக்கர வர்த்தி" (6)

என்பது மன்னன் இயல்பைக் கூறுகின்றது. அவன் தன மனைவி மக்களுடன் நாட்டை விட்டுப் புறப்பட்டுப் போகும்போது,

"சிவனே தீன ரக்ஷகனே – உமையனே
சிவனே தயாபரனே" (67)

என்று உரைத்துக் கொண்டே போனான். அவன் மனைவியாகிய சிற்பிரபையும் சிவபக்தி உடையவளே. தன் மக்கள் பசியால் வாடும்போது அவள் கூறும் வார்த்தைகள் இதை விளக்கும்.

"ஆதரவு சிவன் அல்லால் ஒருவருண்டோ"
"ஆதிசிவன் கற்பனைக் காரென்ன செய்வார்"
"கோலிவந் திருப்பார் ஆலம் உண்டவர்க் கொரு
கோலமோ." (70)

இந் நூலாசிரியர் ஊர்வசியையும் உபரிசனரையுங்கூடச் சைவத் திருக்கோலத்துடன் நமக்குக் காட்டுகிறார். ஊர்வசி சிவபூசை செய்யும்போது திருநீற்றையும் ருத்திராட்சத்தையும் அணிந்து பஞ்சாட்சரத்தைச் செபிக்கிறாள் (10); சிவபெருமானைத் தேவாரம் பாடித் துதிக்கிறாள் (11-13.) உபரிசனர், "மெய்யில் திருநீறு கையில் கமண்டலம்" (34) உடையவராகி வருகிறார்.

சிவபக்தனாகிய புரூரவன் பெருவீரன்; திக்கு விஜயம் செய்து (3,4), ஐம்பத்தாறு தேச மன்னர்களும் தன்னைத் தொழ வாழ்பவன் (4,15); பிறர் துன்புறும் போது உபகாரம் செய்யும் இயல்புடையவன் (8); ஆராய்ச்சி மணிகட்டி (58,62), நீதி தவறாமல் செங்கோல் ஓச்சி வருகிறவன் (41,62); சொன்ன வாக்குத் தவறாத சத்தியசீலன் (32,44,46); அறிவிற் சிறந்தவன் (20); ஈகையிலே உயர்ந்தவன் (53); எல்லாம் விதியின்படி நடக்கும் என்ற எண்ணம் உடையவன் (42,61); எந்தத் துன்பம் வந்தாலும் கலங்காதவன் (42.)

புலவர்களிடத்தில் புரூரவனுக்கு அபிமானம் அதிகம். அவன் அரசவைக்கு வரும்போது, "முதன்மையான கவியுசிதரும்" (4) உடன் வருகிறார்கள். அவன் சபையில், 'ஆசு கவி வல்லவர் சேசே' (6) என்று சொல்கின்றனர். அவனுடைய மனைவியாகிய சிற்பிரபைக்குப் புலவர்களிடம் உள்ள மதிப்பு, அவள் தமக்கு வந்த துன்பங்களை நினைந்து புலம்பும்போது, "பாடும் புலவர் மனம் நோகப் புன்சொல் சொன்னேனோ" (62) என்று கூறுவதனாற் புலப்படும்.

## குறளும் தேவாரமும்

இவ்வாசிரியர் இரண்டிடங்களில் திருக்குறளை எடுத்து ஆள்கிறார். ' அருந்ததிக்கு இணையான பெண்ணுடனே கூடி, துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் உதவி வாழ்ந்திருப்பான்' (ப.70) என்று வசனப்பகுதியிலும், "எண்ணியே துணிக பின்னே எண்ணுவ திழுக்கே என்று, கண்ணலே மனத்தே செய்து" (65) என்று செய்யுளிலும் இரண்டு குறட்பாக்களைப் பதித்து வைத்திருக்கிறார். ஊர்வசி தோத்திரம் செய்வதாகச் சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரப் பாடல் மூன்றை இணைத்திருக்கிறார்.

## ஆசிரியர்

இந்த நாடகத்தை இயற்றியவர் சென்ற நூற்றாண்டில் தஞ்சையில் இருந்த மராட்டிய அரசனாகிய சிவாஜியின் ஆதரவு பெற்றவரென்று தோற்றுகிறது. இதற்கு முன் உள்ள நாடகங்களின் நடையையே இதிலும் காணுகிறோம். தஞ்சை மராட்டிய மன்னர்களுக்குச் சத்திரபதி என்ற பட்டம் உண்டு. அந்த நினைவிலே தான் இவ்வாசிரியர் புரூரவனிடம் குடிகள் முறையிடும் போது,

"சத்திரபதியே மிருகம் வருவது கணக்கே இல்லை" (50)

என்று சொல்வதாக அமைத்தார்போலும். ஆசிரியர் இந்த நாடகத்தை இயற்றும்போது தம்முடைய காலத்தை மறக்கவில்லை என்றே தோற்றுகிறது. புரூரவனிடம் வந்து முறையிடும் குடிமக்கள் சிலருடைய பெயர்களைக் கூறுகிறார்;

> "சரவணப் பிள்ளை ராம
> சந்திரப் பிள்ளை தாமோ
> தரம்பிள்ளை" (50)

முதலோர் வந்ததாகச் சொல்லியிருக்கிறார். இந்தப் பிள்ளைமார்கள் பரீட்சித்து வாழ்ந்த புராணகாலத்திலா வாழ்ந்திருப்பார்கள்? புலவர் தாம் பழகிய பிள்ளைமார்களை நினைந்தே இப்படிப் பாடியிருக்கிறாரென்று தோற்றுகிறது.

## யாப்பு

இந்த நாடகத்தில் 18 தருக்களும், கண்ணிகள் அடங்கிய பாடல் ஒன்றும் (70), 54 விருத்தங்களும், 40 வசனப் பகுதிகளும் இப்போதுள்ள பகுதியில் உள்ளன. பெரும்பாலும் முன்

னுள்ள பாட்டின் பொருளே பின் உள்ள வசனப் பகுதிகளில் காணப்பெறுகிறது.

## வழக்கு மொழிகள் முதலியன

இந் நாடகத்தில் வழக்கு மொழிகளும், பிற பாஷைச் சொற்களும், சிதைந்த சொற்களும் பல அங்கங்கே காணப்படும்.

வழக்கில் உள்ள சொற்கள் : எப்பேர்ப்பட்ட, ஏற்படும், ஒய்யாரம், கண்ணுழச்சியிடுதல், கெட்டி, கோட்டி, சதிர், சமுசு, சரூர், சவாரி, சொகுசு, சோடு, சோலி, தாட்டிகம், திராணி, துரிசு, துஷ்டிகள், தோதகம், பாக்கிசாக்கி, பேட்டி, பொருதுவார், மவுசு, மெத்த, மேட்டிமை, ரூட்டி, வக்கணை, வயணம்.

சிதைந்த சொற்கள்: அடைக்குது, அழிக்குது, ஆகுது, ஆச்சுது, கிழிக்குது, கேட்குது, சாயுது, செய்யுது, துசமரம், துடிக்குது, பாயுது, புரளுது, பூந்து, மிரளுது, முழிக்குது, வாங்குது.

பல இடங்களில் ஒருமை பன்மை மயங்கி வருகின்றன (31, 40, 49, 50, 52, 53, 62); ஓசை குறையும் சில பகுதிகள் செய்யுட்களில் உண்டு (32, 55, 65.)

இவற்றையெல்லாம் ஆராயும்பொழுது, இதனை இயற்றிய புலவர் பெரிய நூல்களை இயற்றும் இலக்கண இலக்கியப் புலமையும் கவித் திறமையும் பெறாதவராயினும், பாமர மக்கள் உவக்கும் இசைப் பாடல்களையும் விருத்தங்களையும் இயற்றும் இயல்புடையவர் என்பதும், தமிழ் நாட்டில் காவியமாகவும் கதையாகவும் வழங்கும் புரூரவாவின் வரலாற்றை நாடகமாக எழுதத் துணிந்ததற்கு இவருடைய ஆர்வமே காரணம் என்பதும் தெரிய வருகின்றன.

# மதனசுந்தரப் பிரசாத

# சந்தான விலாசம்



அருணாசலகவி

# மதனசுந்தரப் பிரசாத சந்தான விலாசம்

## 1

### காப்பு

(விருத்தம்)

சீர்மேவு மதனசுந்த ரேச்வ ரர்தம்
[திருவுள்ளக்] கிருபையினால் செயப்ர தாபன்
தார்மேவு கீர்த்திவான் சோழ ராஜன்
சந்தான பாக்கியங்கள் தழைத்தே ஓங்கும்
ஏர்மேவும் சரித்திரத்துக் கன்ப தாக
எந்நாளும் அருள்செயுமீச் வரியாள் பெற்ற
கார்மேவும் மும்மதஞ்சேர் நாத னான
கணபதியும் பட்சமுடன் காப்புத் தானே.

## 2

### கதா சங்கிரகம்

(அகவல்)

சீரணிந் தோங்கித் தாரணி புகழும்
செங்கோல் செலுத்தும் மங்கள கரமுள
சோழமகா ராஜன் தோகைநால் வருடன்
வாழ்ந்திடத் தயவாய் மதனசுந் தரராம்
5 கர்த்தனார் அருளால் கனமுடன் நான்கு

1. செயப்ரதாபன் - வெற்றியினால் உண்டான புகழை உடையவன்.

2: 3. தோகை நால்வர்-நான்கு மனைவிமார். 5. கனம்-மதிப்பு.

புத்திரர் உதித்துப் புவியினில் வளர்ந்து
பாலலீ லைகளாம் பலவிளை யாட்டின்
கோலங்கள் கண்டுளம் குளிர்ந்தின்ப மாகி
மதனசுந் தரர்தமை மனமதிற் பத்தியாய்
10 இதமுடன் தியானித் திறைஞ்சிய போது
காமசுந் தரியுடன் கனமதன சுந்தரர்
பூமியிற் காட்சி பொருந்தத் தந்தே
அரசனே உனக்கிங் கானநல் வரங்கள்
தருவோம் கேள்ளனச் சாருவ பூமன்
15 மணிமுடி வணங்கி மலர்க்கரங் குவித்துப்
பணிந்தெழுந் தென்றன் பாலர்கட் கெல்லாம்
தீர்க்கமாம் ஆயுசும் திடமான தேகமும்
பார்புகழ் தேயசும் பலர்மெச்சும் அமுத
குணமும்நல் வித்தையும் குபேரபாக் கியங்களும்
20 மங்கள கரமாய் மணஞ்செய்கல் யாணமும்
எங்கள்பா ரம்பரியம் எந்நாளும் விருத்தியும்
சகலசாம் ராஜ்யமும் தாரணி தன்னில்
சுகவை பவங்களும் சுபசோ பனங்களும்
பாலராய் உமக்குப் பத்தி புரிந்த
25 செல்வராம் இவர்க்குச் சிறந்தராஜ் யங்களும்
நிரந்தர மாக நிறைந்துவாழ்ந் திருக்க
வரந்தரு வாயென வணங்கிய போது
மதனசுந்த ரேச்வரர் மகிழ்ந்திந்த வரங்கள்
இதமுடன் அருளிய இன்பவிஸ் தரிப்பை
30 மன்னவர் மன்னன் மணிமுடி தரித்தோன்
போசல குலத்தில் புகழுடன் உதித்த

---

18. தேயசு-தேஜஸ். 31. போசல குலம்: "உன்னுபோ சலகுலத்துக் குயர்தெய்வ மாகி" (சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம், 2); போஸ்லே என்பது மாறி இவ்வாறு வழங்கும்.

ராஜசர பேந்திரன் ரமணீய பாலன்
சித்தம் மகிழ்ந்த சிவாஜிரா ஜேந்திரன்
உத்தர வுப்படி உலகில் ஓங்கிட
35 அருணு சலகவி அன்புடன் இசைத்த
திருவளர் நாடகம் செழிக்கவே வாழி.

# 3

## கட்டியக்காரன் வருகை

(விருத்தம்)

சந்தமிகு மலரணிந்த புயஉல் லாசன்
சகலரும்மெச் சப்பேசும் சமர்த்தன் யோகன்
சுந்தரஞ்சேர் மணிமாலை அணிந்த மார்பன்
சோபிதமாய் ஒயிலாக நடக்கும் வாகன்
தந்திரங்கள் மிகஅறிந்தே கீர்த்தி பெற்றோன்
தகுந்தவெள்ளிப் பிரம்பேந்தி வருசல் லாபன்
தந்திமுகச் செல்வவிநா யகர்தம் வாசல்
சதிர்பெறுகட் டியக்காரன் வருகின் றானே.

# 4

(சிந்து)

[ராகம் : கல்யாணி - தாளம் : ஆதி]

பல்லவி

வந்தான் இதோகட்டியக் காரன்
—செல்வ விநாயகர்
வாசல் வளம்பெருகு தீரன்.

---

2 : 32. சரபேந்திரன்-சரபோஜி மன்னர்.
3. சோபிதமாய் - விளக்கமாய். வாகன்-அழகுடையவன்

அநுபல்லவி

சந்தோஷ மாய்மகிழச்
சகலரு மேபுகழச்
சந்திரன் நுதலினில்
என்னத் திலகம்மின்ன (வந்தான்)

சரணம்

கெண்டைத் துகிலுடுத்துக் கொண்டு சமர்த்துடனே
கெடியான வார்த்தைகள்பு கன்று
கண்ட சரம்பதக்கம் பூண்டு சிரசுதனில்
கனகமுண் டாசுவைத்துக் கொண்டு
எண்டிசை யோரும்போற்றும் இன்ப விநாயகரைத்
தெண்டனிட் டுப்பக்தி செய்து ஜயத்துடனே (வந்)

## 5

விநாயகர் வருகை

(விருத்தம்)

கனகரத்ன முத்துநகை காந்திதர வேசிறந்த
கருணை மேவி
அனவரதம் அன்பருக்கு வரம்உதவும் கிருபாநேத்
திரம்விளங்கப்
புனைமலர்க்கற் பகமாலை பரிமளிக்க ஆனந்தம்
பொருந்த நாளும்
இனியபத்ம பதமிலங்கச் செல்வவிநா யகமூர்த்தி
இதோவந் தாரே.

---

4. கெண்டைத் துகில் - கெண்டைக் கரையுள்ள வேட்டி. கெடியான - அதட்டலையுடைய.

5. காந்தி - ஒளி. அனவரதம் - எப்பொழுதும்.

## 6

(சிந்து)

[ராகம் : இந்துஸ்தானி கமாசு—தாளம் : ஆதி]

பல்லவி

ஐங்கரர் வந்தாரே

அநுபல்லவி

சங்கரி கிருபாகரி தவத்தினால் பெற்றெடுத்த
சச்சிதா னந்தமய நித்யகல் யாணகுண (ஐங்கரர்)

சரணம்

தருணம அறிந்தனபாகருக
கருணை பொழிந்திடவே
சல்லாப மாய்நடந்து
உல்லாச மாய்மகிழ்ந்து (ஐங்கரர்)

## 7

## சோமேந்திர மகாராஜா வருகை

(விருத்தம்)

சுந்தரமி குந்தநவ ரத்தினம் இழைத்திட்ட
சொர்ணமகு டம்மின்னவே
கந்தமண மாலைக ளணிந்தமார் பினில்ரத்ன
கனகபூ ஷணம்மின்னவே
சந்த்ரமுக மனைவிமார் சல்லாப மாகவரச்
சற்புத்ரர் நால்வருடனே
இந்த்ரனென வைபோக மாகச்சோ மேந்த்ரதுரை
இனியசபை எய்தி னரே.

## 8

### (சிந்து)

[ராகம் : தோடி—தாளம் : ஆதி]

### பல்லவி

சோழரா ஜேந்திரன்வந் தானே
—தேவேந்திரனென்னச்
சோழரா ஜேந்திரன்வந் தானே.

### அநுபல்லவி

ஏழுலோ கமுங்கொண்டாட
இன்பமங் களம்பாட
வாழிளங் நாளுங்கூட
வளமைசம் பிரமம்நாடச் (சோழ)

### சரணம்

பாண்டிய ராஜன்
மயிலும்—சேரன்பெற்ற
பட்சமாம் இன்பக் குயிலும்
வேண்டுங்கொங் கேந்த்ரன்
அன்னமும்—கேரளதேச
வேந்தன் மகளாம் சொன்னமும்
ஈண்டி ஆனந்தமாக
இரண்டுபக் கமும்வரவே
எழில்மைந்தர் நால்வருடன்
இசையோங்கிக் கீர்த்திமேவச் (சோழ)

---

8. கொங்கேந்திரன்-கொங்கு நாட்டரசன். ஈண்டி-கூடி.

## 9

### கழற்சிக்காய்

(சிந்து)

[ராகம் : நாதநாமக்கிரியை]

பல்லவி

விளையாடு வோம்வாரும்—தம்பிமாரே
விளையாடு வோம்வாரும்.

அநுபல்லவி

வளமை மிகுங்கழற்சிக்
காய்கள்கை யில்கொண்டு
மகிழ்ந்தொன் று இரண்டென் று
மனதுசந் தோஷமாய் (விளை)

சரணம்

ஒன்றே தெய்வமதாம் இரண்டு சக்தி சிவமாம்
மூன்றேழும் மூர்த்திகளாம் நான்கென் பதுவேதமாம்
அஞ்சேபஞ் சவர்ணமாம் ஆறென் பதுசாஸ்திரம்
மைந்தரே ஏழென்பது வளம்பெறு ரத்னாகரம்
எட்டென்பது அஷ்டகஜம் ஒன்பது நவரத்னம்
பத்தும் திசைகளாகும் பவித்தது நானே ராஜா (விளை)

## 10

### கழற்சிக்காய் ஊசல்

(சிந்து)

[ராகம் : மோகனம்]

பல்லவி

கெழற்சிக்காய் கோட்டில்வைத் தாடுவோம்—நல்ல
கீர்த்தி யுடனே இன்பம் கூடுவோம்.

9. ரத்னாகரம் - கடல்.
10. கெழற்சிக்காய் : பேச்சு வழக்கு.

அநுபல்லவி

தழைத்தசோ ழேந்திரன்
தனைப்பணி யார்கள்போலத்
தனித்தனி காய்களோடத்
தனியொரு காயால்எற்றிக் (கழற்சிக்)

சரணம்

நாலுபே ரும்காய்களை
நடுவேகோட் டுக்குள்வைத்து
நாலுதிசை யோரும்மெச்ச
நலமாய் விஜயம்பெற்றுக் (கழற்சிக்)

## 11

### ஆனைப்பந்து குதிரைப்பந்து

(சிந்து)

[ராகம் : பந்துவராளி – தாளம் ; மிச்ரம்]

பல்லவி

ஆனைப்பந்து குதிரைப்பந்து விளையாடும்
அதிசய மதுபாருமே.

அநுபல்லவி

தானதர் மப்பிரபு சோழரா ஜன்மைந்தர்
சகல குணசம்பன்னர் சல்லாப மாகவே (ஆனைப்)

சரணம்

ஒருவர்க் கொருவர்எதிர்
உற்சாக மாய்மகிழ்ந்து
ஒருவர் எறிந்தபந்தை
ஒருவர்கை யால்பிடித்து

சரிசம மாய்ஜயம்
தங்களுக்குள் ளேதரித்துச்
சதுராக விளையாடிச்
சந்தோஷம் பூரித்து (ஆனைப்)

## 12

### கிட்டிப் பந்து

(சிந்து)

[ராகம் ; சௌராஷ்டிரம்]

பல்லவி

பேர்கொண்ட சோழேந்திரன் புத்திர ருக்குள்மூத்த
பிள்ளைபந் தடிப்பது பாரும்.

அநுபல்லவி

ஏர்கொண்ட பந்துதன்னை
எடுத்துக்கிட் டியால்வீசி
இளையபிள் ளைகள்தாவித்
தடுக்கும் படியாய்ப்பேசிப் (பேர்)

சரணம்

மன்னவர் பணிந்திடும்
மலர்ப்பதச் சோழேந்திரன்
மனது மகிழ்ந்தே இன்பம்
ஆகிப்பூ ரிக்கவே (பேர்)

11. சதுராக - சாதுரியத்தோடு.
12. கிட்டி - பந்தை அடிக்கும் கோல.

## 13

### சில்லு

(சிந்து)

[ராகம்: மத்தியமாவதி - தாளம்: சாபு]

பல்லவி

சுந்தர மானசில்லைத் தொட்டுக்கோட் டிலெறிந்து
சுகமாய் விளையாடுவோம் வாரும்.

அநுபல்லவி

விந்தை யுள்ளவிளை
யாட்டிது தம்பிமாரே
விளையாட விளையாட
வெகுபிரி யங்கொடுக்கும் (சுந்தர)

சரணம்

ஒண்ணுணில் சில்லெறிந்து
ஓடிக்கா லால்எற்றி
உசிதமாய் ரெண்டான்மூணன்
நாலான் வரைக்குமாடி
வண்ணச் சிறுகோட்டில்
வகையாய்ச்சில் லையெறிந்து
(வாய்ந்தொரு காலால்நின்று) (சுந்தர)
செட்டிரெண் டுங்கடந்து
சீராய்ச் சமுத்திரத்தில்
ஓட்டிச்சில் லையெறிந்து
ஓங்கும் மலையுந்தாண்டிக்

13. சில்லு: இந்த விளையாட்டைப் பாண்டி என்றும் சொல்வர். ஒண்ணன் - முதலாவது: வழக்குச் சொல். ரெண்டான், இரண்டான், மூணன்: வழக்குச் சொற்கள். செட்டி, சமுத்திரம், மலை இவை பாண்டியில் உள்ள கட்ட விசேஷங்கள்.

கெட்டியா கின்று
　　கேளுங்கள் ஐயங்கொள்ள
சட்டமாய் மொச்சிகட்டிச்
　　சந்தோஷம் பெறுவோம் (சுந்தர)

## 14

## உப்புக் கோடு

(சிந்து)

[ராகம் : மாஞ்சி - தாளம் : சாபு]

**பல்லவி**

செல்வரே உப்புக்கோ டாடுவோமே

**அநுபல்லவி**

நல்வினை யாட்டிது
　　நாமெல்லாம் ஆடுவோம்
சல்லாப மாகவே
　　சந்தோஷங் கூடவே (செல்)

**சரணம்**

தடுக்காத வண்ணமே
　　தாண்டியே முன்னமே
எடுத்துப்புத் தன்னையே
　　இசைகொள்ள நன்மையே (செல்)

## 15

## நாலுமூலைத் தாச்சி

(சிந்து)

[ராகம்: ஆனந்த பைரவி]

**பல்லவி**

நாலுமூ லைத்தாச்சி நாம்இப்போ தாடுவோம்
நன்மைகள் உண்டாகவே.

மொச்சி - ஜயித்தவர் சில்லால் வரைந்துகொள்ளும் ஓரிடம்.

அநுபல்லவி

பாலுந்தே னும் இனிய
　　பழரச மும்போலப்
பழகிய மழலைச்சொற்
　　பாலக　　　　　　　　　　　　(நாலு)

சரணம்

ஒருமூலை யைவிட்டு
　　ஒருமூலை யில்பாய்ந்து
ஒருவர்க் கொருவர்முந்தி
　　உல்லாச மாகவே
திருவருள் நிரம்பிய
　　செல்வரே நாம்இப்போது
சேர்ந்து விளையாடுவோம்
　　செகமெல்லாம் புகழ　　　　　　(நாலு)

## 16

### கண்ணாமூச்சி

(சிந்து)

[ராகம் : புன்னாகவராளி - தாளம் : மிசிரம்]

பல்லவி

கண்ணா மூச்சிவிளை யாடுவோம்—நல்ல
கனமான சுபங்கள்கை கூடுவோம்.

அநுபல்லவி

அண்ணா நாமொரு
　　தாச்சியை நேமித்து
அவருத் தரவுப்படி
　　அங்கங்கே சோதித்துக்　　　　　　(கண்ணா)

16. தாச்சி - நடு நிலையில் இருப்பவர் (umpire). சோதித்து-தேடி.

**சரணம்**

கையில் அகப்படாமல்
கரந்திருப் பவர்தம்மைக்
கண்டு பிடித்தவர்க்குக்
கன்றுழைச் சிபொத்தி
மெய்யாக வேகொட்டுத்
தாச்சியின் முன்பாக
மிருந்தஉற் சாகமாய்
மேன்மை பொருந்திடக் (கண்ணு)

## 17

### கோப்பி

கொண்டா டிக்கொண் டாடுவமே புகழ்
பாடுவ மேசுபம் கூடுவமே.

பொன்னணி மார்பன் சுகரூபன்-பக்தர்
பூரிக்க இன்பம் புகட்டிவைத்து
நன்னயஞ் செய்யும் மதனசுந் தரரை
நாடிச் சதானந்தம் நீடுவமே (கொண்டா)

மங்கள கல்யாண வைபவ ராகிய
மதன சுந்தர ஈசுவரரைப்
பங்கயச் செங்கைகள் கூடிப் பணிந்திடப்
பலன்க ளெல்லாங்கை கூடிடுமே (கொண்டா)

ஆனந்தம் பாலிக்கும் மதன சுந்தர
ஆண்டவ னைத்துதி செய்திடவே
வேண வரங்கள் அருள்புரி வாரின்று
மேன்மையும் கீர்த்தியு மேதருவார் (கொண்டா)

கரந்திருப்பவர்-மறைந்திருப்பவர்.

17. கொப்பி - கும்மி. வேண : வேண்டுமான என்பதன் சிதைவு.

சுந்தர மூர்த்தியாம் மதன சுந்தர
சுவாமியைப் பூசை புரிந்திடவே
இந்திர வைபவ மாகிய வாழ்வுகள்
எல்லாந் தந்துரட் சிப்பாரே (கொண்டா)

## 18

## சோழேந்திரன் மதனசுந்தரேசுவரரைத் தியானித்தல்

(விருத்தம்)

சுந்தரஞ்சேர் மதனசுந்த ரேச்வரரே எங்களுக்குச்
சுகமுண் டாகச்
சந்ததிகள் அருள்செய்தீர் இவர்பால லீலைகளின்
சம்ப்ர மான
விந்தைகள்கண் டேமகிழ்ந்தே ஆனந்த மாயினேம்
மேன்மை யெல்லாம்
இந்த இளம் பாலருக்குக் கிருபைசெய்ய வேணுமென்றே
இச்சித் தேனே.

## 19

## மதன சுந்தரேசுவரர் வருகை

(விருத்தம்)

பத்தனும் சோழேந்த்ரன் இதயமதில் தியானித்த
பட்சங் கொண்டு
சித்தசுத்தி உள்ளநல்ல அன்பன் இவன் எனக்கிருபை
செய்து காக்கச்

18. சம்ப்ரமான - சம்பிரமமான ; நிறைந்த.

சத்தியெனுங் காமசுந்த ரேசுவரி சமேதராய்த்
தரணி மீதில்
நித்தியமாம் வரங்கள்தரக் காட்சிதந்தார் இன்பமது
நிலைக்கத் தானே.

## 20

(சிந்து)

[ராகம் : பியாகடா- தாளம் : சாபு]

பல்லவி

மங்கள கரமுள்ள மதனசுந்த ரேசுவரர்
வந்தாரே தயவாகவே.

அநுபல்லவி

பங்கய முககாம சுந்தரி சமேதராய்ப்
பட்சம்வைத் திரட்சிக்கவே (மங்கள)

சரணம்

சோழேந்த்ர பூமனும் சுமுகன்பக் திலயமெச்சிச்
சுபமெல்லாம் அருள்செய்யவே (மங்கள)

## 21

## சோழேந்திர மகாராஜன் மதனசுந்தரேசுவரரைத் தோத்திரம் செய்தல்

(சிந்து)

[ராகம் ; ஸகானு - தாளம் : ஆதி]

பல்லவி

பக்த தயாபரனே- அடியவரைப்
பட்சமாய் ஆள்பவனே.

அநுபல்லவி

உத்தம மாயெனக்
குதவிசெய் யுந்தேவனே
நித்திய மாகும் இன்பம்
நிறைந்த சதாசிவனே (பக்த)

**சரணம்**

சாமி உமதுதயவால்- தரணிமெச்சும்
சற்புத்ர பாக்யம் பெற்றேனே
பூமி இந்தப் பாலகர்கள்- தீர்க்காயுசாகப்
புத்திரபௌத் திரருடனே
காமித்த தெல்லாம்எய்திக்
கனயோக வான்களாகச்
சோமசே கராவரம்
சுபமாய் அருளவேணும் (பக்த)

**(வசனம்)**

ஸ்ரீமதன சுந்தரேசுவரராகிய என்னுடைய கர்த்தரே! நீர் கிருபை செய்து கொடுத்த வரத்தினாலே சற்புத்திர பாக்கியங்கள் பெற்றேன். இந்தக் குழந்தைகள் நால்வரும் விளையாடுகிற பால லீலைகளைப் பார்த்து ஆனந்தமானேன். இவர்கள் தீர்க்காயுசும் திடகாத்திரமும் அபீஷ்டங்களும் பெற்றுப் புத்திர பௌத்திர பாரம்பரியம் வாழும்படியாய் வரந்தர வேணும், சுவாமியே!

## 22

## ராஜபுத்திரர் நால்வரும் காமசுந்தரேசுவரியைத் தோத்திரம் செய்தல்

**(கோச்சகம்)**

காசினிக்குத் தாயான காமசுந்த ரேச்வரியே
தேசுபெறு கீர்த்தியும் தீர்க்காயு சுந்திடமும் [மூறப்
வாசவன்போல் வைபவமும் வன்மைமிகும் செயமு
பூசைசெய்த எங்களுக்குப் பூர்ண அருள் செய்வீரே.

21. காமித்ததெல்லாம் - விரும்பியதெல்லாம்.
22. வாசவன் - இந்திரன்.

(வசனம்)

லோக மாதாவாகிய காம சுந்தரேசுவரித் தாயே! அதி பக்தியுடனே பூசை செய்த எங்களுக்குக் கீர்த்தியும் தீர்க் காயுசும் திடமும் வைபமும் ஜயமும் தந்து எங்கள் மனோ பீஷ்டப் பிரகாரம் சகல வரங்களும் அருள் செய்ய வேணும் தாயே!

## 23

## காம சுந்தரேசுவரி வாக்கியம்

(சிந்து)

[ராகம் : கமாசு — தாளம் : ஆதி]

பல்லவி

சார்வ பூமனுக்கும் சற்புத்திரர் நால்வருக்கும்
சகல வரந்தருவீர் காந்தனே.

அநுபல்லவி

சீரும் செயமும்மிகு செல்வமும் சித்தியும்
திடகாத் திரமும்தீர்க் காயுசும் கீர்த்தியும் (சார்வ)

சரணம்

நித்திய மங்களமும்
நிறைந்தசாம் ராஜ்யமும்
நெஞ்சம் மகிழ்ச்சிபெறு
நீர்மையும் பாக்கியமும்
வித்தையும் புத்தியும்
வேண்டிய சுபங்களும்
மேன்மை பெறஅருள
வேணும் தயாபரனே (சார்வ)

(வசனம்)

அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகராகியும், பக்த தயாபரராகியும் விளங்கா நின்ற சுவாமியே! இந்தச் சோழேந்திர சார்வபூமனுக்கும் இவன் புத்திரராகிய இந்த நால்வருக்கும் சீரும், ஜயமும், செல்வமும், சித்தியும், திடகாத்திரமும், தீர்க்காயுசும், கீர்த்தியும், நித்திய மங்களமும், சாம்ராஜ்யமும், மகிழ்ச்சியும், பாக்கியமும், வித்தையும், புத்தியும், சுபசோபனங்களும் எந்நாளும் பெருகும்படியாய் வரம் தந்து ரட்சிக்க வேணும்.

## 24

### சுவாமி வாக்கியம்

(சிந்து)

[ராகம் : செஞ்சுருட்டி—தாளம் : ஆதி]

பல்லவி

சார்வபூ மேந்திரனே -- நித்யானந்தமாய்ச்
சந்ததம் சுகம்பெறு வீர்களே.

அநுபல்லவி

பார்மீதி னில்நீங்கள்
பண்ணும்பக் திக்குகந்தோம்
பட்சமா கவரங்கள்
பாலித் தருள்புரிந்தோம் (சார்வ)

சரணம்

நீயும்உன் புத்திரரும்
நிறைந்ததீர்க் காயுசுடன்
நினைத்த சித்திகளெல்லாம்
பலித்துவாழ்ந் திருப்பீர்கள் (சார்வ)

24. சந்ததம் - எப்பொழுதும்.

மங்கள முஞ்ஜயமும்
மகிழ்ச்சியும் கீர்த்தியும்
வளமை மிகப்பெருகி
வாழ்வீர்எந் நாளுமே (சார்வ)

மங்கள மாகும்கல்யா
ணங்களும் சுபங்களும்
உங்கள்பா ரம்பரிய
குலமும் விருத்தியாகிச் (சார்வ)

நோயற்ற வாழ்வும்
குறைவற்ற செல்வமுமாய்த்
தேயமெல் லாம்புகழ்
செங்கோல் நடத்திவைத்துச் (சார்வ)

சகலசாம் ராஜ்யமும்
ராஜ்யாதி பத்யங்களும்
மிகமிக வேபெருகி
மேன்மை தழைத்திடவே (சார்வ)

(வசனம்)

நீ செய்த பக்திக்கு உகந்து சகல வரங்களும் அருள் புரிந்தோம். நீயும் உன் மனைவியரும் உன் புத்திரரும் நித்தியானந்தமாய்ச் சந்ததம் சுகத்துடனே தீர்க்காயு சாய்ச் சித்திகளெல்லாம் பலித்து, மங்களமும் ஜயமும் மகிழ்ச்சியும் கீர்த்தியும் கல்யாண சுபங்களும் குல விருத்தியும் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுமாய்ச் செங்கோல் நடத்தி வைத்து, சகல சாம்ராஜ்யமும் ராஜ்யாதி பத்தியங்களும் பெற்று, 'ஒன்னலர் பணியும் படியாய் சந்தோஷத்துடனே வாழ்வீர்களாக!

சுபம்.

---

**வசனம் :** ஒன்னலர் - பகைவர்.

# பாண்டிய கேளீவிலாச நாடகம்

## 1

### கதா சங்கிரகம்

(அகவல்)

திருவளர்ந் தோங்கிச் செழித்துமே மலர்கள்
நறுமணங் கமழும் நல்லஉத் தியான
வனமதில் வாச மலர்எடுத் தொயிலாய்ப்
புனைவதற் காகப் பொன்னணி மார்பன்
5 சிங்கார லோலன் செல்வ மகிபதி
திங்கள்போ லேமுகம் சிறந்தஉல் லாசன்
மங்கையர் மயலாய் மயங்கியே தொடர
மங்கள ரூப மதனெனும் பாண்டியனும்
கேரள தேசத்துச் சுகுமாரி யாளும்
10 சேர்வை செய்யும் மைந்தரும் மங்கையும்
வந்துபூங் காவை வரிசையாய்ப் பார்த்துச்
சந்தோஷ மாகித் தையலே இந்தப்
பூங்கா வனத்தின் புதுமைகள் பாரெனப்
பாங்கான கேரள பார்த்திவன் மகளும்
15 கண்டு மகிழ்ந்து காதலாய் இன்பம்
கொண்டுவண் டினங்குயில் மயிலினம் மான்கள்
கொஞ்சியே ஆணும் பெண்ணுங் கூடிட
நெஞ்சம் மகிழ்ந்து நெருங்கியே அந்த
மன்னனுக் கந்த மாதுகாட் டப்பின்
20 நன்னய மாய்மலர் நாடி எடுத்தே

1 : 8. மதன் - மன்மதன்.
10. சேர்வை - கைங்கரியம்; சேவையென்பதன் திரிபு.

ஒருத்தருக் கொருத்தர் உகந்துமே அணிந்தே
இருவரும் இன்பம் எய்திடும் போது
சேவை இருவரும் சிங்கார மாக
மகிபதி எதிரே வார்த்தைகள் பேசிடச்
25 செட்டி இருவர் சிறக்கவே வந்து
சட்டமாய் அடுத்துச் சரங்களும் வனைந்த
பச்சைமா மணிகளும் பத்மரா கங்களும்
உச்சித நகைகளும் உயர்ந்தநற் பொருள்களும்
பாண்டியன் முன்பாய்ப் பட்சமாய் வைத்து
30 வேண்டிய பொருளுக்கு விலைசொல்லும் போது
வணிகர் இருவரும் வர்த்தகத் தொழிலில்
துணிவுடன் பேசத் தொடங்கிய காலை
வேந்தன் மனத்தில் வேண்டிய நகைகளும்
காந்திரத் தினங்களும் கைக்கொண்ட பின்பு
35 நினைத்த குறிகள் நிஜஞ்சொல்லி நன்மை
அனைத்தும் பலிக்க அருளும்பூ சாரி
வந்தெதிர் தோன்றி மன்னவன் றனக்குச்
சந்தோ ஷம்பெறச் சகுனம் உரைத்திடப்
பாண்டிய ராஜன் பட்சமாய் இன்பம்
40 பூண்டுவாழ்ந் தேமகிழ் பொங்குமிச் சரித்திரம்
ஆழிசூழ்ந் திலகும் அவனியிற் சிறந்த
சோழநா டதனைச் சுகமுடன் புரக்கும்
சத்திர பதியாஞ் சாருவ பூமன்
எத்திசை யோரும் இசைத்திடுங் கீர்த்தியான்
45 போசல குலமது புகழுடன் விளங்க
வாசவ வைபவன் மன்னர் சிகாமணி

24. மகிபதி - அரசன்.
26. சரங்கள் - மாலைகள்.
34. காந்தி - ஒளி.
46. வாசவ வைபவன் - இந்திரனைப்போன்ற புகழுடையவன்.

சித்தஜன் எனவே சேயிழை மாதர்
நத்தியே தொடரும் நன்மையார் அழகன்
சிந்தா மணியும் தேவகற் பகமும்
50 புந்தியில் நாணப் புலவர்கட் கெல்லாம்
பொன்னும் மணியும் பொருந்தக் கொடுத்தே
எந்நாளும் விஜயம் எய்திடும் தீரன்
செந்திரு மார்பன் சீவாஜிந்த்ர பூபதி
இந்நல் விலாசம் இயம்புவீர் என்னப்
55 பிள்ளைசொல் மழலையைப் பெற்றவர் கேட்டே
உள்ளத்தில் இன்பம் உற்றிடல் போலப்
இத்தமிழ்க் கவிதை இயம்பிடக் கேட்டுச்
சித்தம் மகிழ்வர் சிருள்ள கவிகள்
என்பதால் நாரா யணகவி இயம்பியது
60 அன்புடன் அனைவரும் ஆனந்த முறவே.

## 2

## கட்டியக்காரன் வருகை

(விருத்தம்)

வாசனைசேர் தேன்துளிக்கும் மாலை மார்பன்
மன்னவர்மெச் சப்பேசும் செயப்ர தாபன்
தேசுபெறு மணியணிகள் அணிந்த யோகன்
திங்கள்முகத் தினில்திலகம் திகழும் மோகன்
தேசமெங்கும் புகழ்படைத்தோன் ஆச்யம் உள்ளோன்
திகழ்வெள்ளிப் பிரம்பேந்தி வருஞ்சல் லாபன்
பூசிதஞ்சேர் இன்பவிநா யகருக் கன்பு
புரிந்திடுங்கட் டியக்காரன் வருகின் றானே.

47. சித்தஜன் - காமன்.
48. நத்தி - விரும்பி.
50. புந்தி - புத்தி.
52. விஜயம் - வெற்றி.
2. ஆச்யம் - ஹாஸ்யம்.

## 3

(சிந்து)

பல்லவி

கட்டியக் காரனும் வந்தானே—உல்லாசமாகக்
கட்டியக் காரனும் வந்தானே.

அநுபல்லவி

அஷ்ட திக்குள்ளோர் புகழும்
ஐங்கரர் பக்தி திகழும்
சிஷ்டன் என்றிடப் புகழும்
சேர்ந் தொழிலதாய் மகிழும் (கட்டியக்)

சரணம்

நல்ல வஸ்திரம் அணிந்து—ஆசியம் உண்டாக
நகைத்துப் பேசி மகிழ்ந்து—சொர்ணமிதென்னச்
சொல்லும் முண்டாசு புனைந்து—நவரத்னங்கள்
தொகுத்த நகைகள் வனைந்து—கனமிகுந்த

செல்வனென் றேமதிக்கச்
சிறந்து புத்தியில்மிக்க
வல்லவ ருந்துதிக்க
வாசம் பரிமளிக்கக் (கட்டியக்)

## 4

விநாயகர் வருகை

(விருத்தம்)

மகுடரத்னப் பிரபைசொலிக்க மருமலர்த்தார் பரிமளிக்க
மதியின் மிக்குத்
திகழுமுத்துக் கதிர்விளக்கச் செழுமலர்க்கண்
க்ருபைதழைக்கச் செல்வம் தேக்க

---

3. ஐங்கரர் - விநாயகர்.
4. பிரபை - ஒளி. மரு - நறுமணம்.

வெகுமகிழ்ச்சி யதுநிறைக்க அனைவருக்கும் உவந்தளிக்க
மிகவே காக்கச்
சுகமிகுத்த வரங்கொடுக்க இன்பவிநா யகமூர்த்தி
சோபித் தாரே.

5

(சிந்து)

[ராகம் : சாவேரி—தாளம் ; ஆதி]

பல்லவி

இன்பவிநா யகமூர்த்தி இதோவந்தார்
—ஆனந்தம் பாலிக்கும்
இன்பவிநா யகமூர்த்தி இதோவந்தார்.

அநுபல்லவி

அன்பருக் கின்றன்பு செய்குவே னென்று
அனவரதமும் கருணையே கொண்டு (இன்ப)

சரணம்

நன்மை சுகந்தரு மெய்யன்—புது
நளின மென்றிடு கையன்—வேத
நான்கி னுட்பொருள் ஓங்கு மற்புதன்
தேங்கு நற்க்ருபை தாங்கு மெய்ப்பொருள்
செயமங்கள முடனின்புற நயமுந்துற (இன்ப)

6

பாண்டிய ராஜன் வருகை

(விருத்தம்)

மதனனினும் அழகுதனில் அதிகனிவன் எனச்சரச
வனிதையர்கள் மயல்பெருகவும்
நிதிமிகுதி வளமைபெறு தனதனிவ னெனநிபுட
நிருபர்முத லவர்புகழவும்

6. தனதன் - குபேரன். நிபுடம் - தொகுதி.

சுதையமுத வசனநய கோமளேந் திரன்புதல்வி
சேவைசெய் வோர்சகிதமாய்
இதசுகுண சரசநய பாண்டியமே சாதிபதி
இன்பசபை எய்தினனே.

## 7

(சிந்து)

பல்லவி

பாண்டிய ராஜனும் வந்தானே
—லீலாவிலாசப்
பாண்டிய ராஜனும் வந்தானே.

அநுபல்லவி

வேண்டிய மங்கையர்கள்
மிகமோகித் துத்தொடர
விஜய சிரோமணியாய்
விளங்கும்மங் களாகர (பாண்டிய)

சரணம்

சுற்றும் அங்கி தரித்துச் சமுதாடு
சோபித மாக இறுக்கி
நெற்றியில் விபூதி பூசி—அதில்கஸ்தூரி
நிறக்கவே திலகம் இட்டு
விஸ்தாரம் மிக்கமேனி
விழையவி பூதிபூசிச்
சுத்தசவ் வாதணிந்து
சொகுசாக வேநடந்து (பா-ய)

சுதை அமுதம் - சுதையாகிய அமிர்தம்.
7. சமுதாடு -வாள்.

தங்க உருமால் இலங்க— அதில்விஜயத்
 தாம வாசனை விளங்கத்
துங்க முத்தாரம் துலங்க—ரத்ன நகைகள்
 சுந்தர மாகக் குலுங்க
சிங்கார மானகேர
 ளேந்திரன் செல்விமகிழ்
மங்கை யுடனேசேவைக்
 காரன்பக் கத்திற்சூழப் (பாண்டிய)

## 8

### ராஜா நாயகியைப் பார்த்துச் சொல்லுதல்

(கொச்சகம்)

முத்து நகைநகைக்கும் மோகனமின் னேஎனது
சித்தத்தி னிற்கிசைந்த தேனே சுவைக்கரும்பே
தித்திக்கும் நல்வசனத் தெள்ளமுதே இம்மலர்ப்பூங்
கொத்துவிரி சோலைவளங் கூறமனம் கொள்வாயே.

(வசனம்)

முத்துவரிசைபோலத் தந்த பந்திகள் சோபிக்கும் படியாய், மந்தகாசம் செய்து எனக்கு மோகனம் செய்யா நின்ற என் பிரிய நாயகியே! கொத்துக் கொத்துக்களாய் மலர்ந்து அலங்காரமாய் இருக்கின்ற இந்தப் பூஞ்சோலையைப் பார்த்து ஆனந்தம் கொள்வாய், பெண்ணே!

## 9

### ராஜா வாக்கியம்

(சிந்து)

[ராகம் : நாதநாமக்கிரியை]

பல்லவி

மங்கை சிரோமணியே—பூஞ்சோலையின்
வளமைபார் கண்மணியே.

7. விஜயத்தாமம் - வெற்றிமாலை.
 வசனம் : தந்தபந்திகள் - பல்வரிசைகள்.

அநுபல்லவி

சிங்கார மாகவே
சேர்ந்த பலதருவின்
கொங்காரும் புஷ்பத்தின்
கொத்துக்கள் மலர்வதும் (மங்கை)

சரணம்

முல்லை அரும்புமாதர்
முகிழ்நகைக் கொப்பாகவே
மெல்ல மலர்ந்திலகும்
விநோதவே டிக்கைகண்டு
செல்வரைப் போலவே
சிறந்த சண்பகங்கள்
நல்ல மலர்நிறைந்து
நடுவில் விளங்குமிது (மங்கை)

தையலே உன்னுடைய—அழகு
தன்னைக்கா ணுவோம் என்று
மெய்யெல்லாம் கண்ணாகி—மயில்பார்க்கும்
விசித்திரம் பார்அன்னங்கள்
செய்ய நடைநடந்து
சிறந்து உலாவுவதுன்
துய்ய நடைஒயிலின்
சோபிதம் காட்டுதுபார் (மங்கை)

(வசனம்)

ஸ்திரீகளுக்கெல்லாம் சிரோரத்தினமே! ஸ்திரீகளுடைய மந்தகாசத்தைக் கண்டு ஆனந்தங் கொள்ளாநின்ற பிரபுக்களைப்போல, முல்லையரும்பு மலர்கிறதைப் பார்த்து,புஷ்பங்களால் பூரித்துவிளங்குகிற சண்பகங்களைப்

9. கொங்கு - வாசனை. முகிழ்நகை - தோற்றும் சிரிப்பு.

பார்த்தாயா? உன்னுடைய அழகான து காணுகிற இரண்டு கண்ணுக்கு அடங்காதென்று தேகமுழுதும் கண்ணாய் மயில்கள் உன்னைப் பார்க்கிறதைப் பார்த்தாயா? உன் நடையைக் கற்றுக்கொண்டு அன்னங்கள் நடக்கிறதைப் பார்த்தாயா பெண்ணே ?

## 10

### நாயகி வாக்கியம்

(வெண்பா)

வேந்தரெல்லாம் கொண்டாடும் வேந்தரே இச்சோலை
பூந்தருக்கள் வாசமலர் பூத்தினிதாய்ச்—சேர்ந்திருக்கும்
சிங்கார மானதின்பச் சித்தசனார் தன்கொலுவின்
பொங்கமதைக் காட்டுமிப் போது.

## 11

(சிந்து)

[ராகம் : சுருட்டி]

பல்லவி

ராஜவுல் லாசனே வெகுசொகு சானது
ரமணிய வனம் இதுவே.

அநுபல்லவி

ஆசை விளைக்கும்மதன்
அரசு நடத்துதற்குத்
தேசு பெறஅமைத்த
சிறந்த கொலுஎன்னவே (ராஜ)

10. சித்தசனார் - மன்மதன். பொங்கம் - அழகு.

சரணம்

கோகில மானது
கூடிக் கானம்பாடுது
தோகை மயிலாடுது
சுதிவண்டு கள்போடுது (ராஜ)

மந்தாரை கோங்குமுதல்
மலர்ந்த கொத்துநிறைந்து
மன்மதன் கொலுவினில்
வந்திருப் பவரென்ன (ராஜ)

(வசனம்)

ராஜ உல்லாசரே! இந்த உத்தியான வனமானது மன்மதன் கொலுவில் இராநின்ற சபைபோல், குயில்கள் பாட, வண்டுகள் சுருதிகூட்ட, மயில்களானவை நர்த்தனம் செய்ய, மந்தாரை கோங்கு முதலானவை மன்மத ராஜன் பேட்டிக்குக்காத்திராநின்ற உத்தியோகஸ்தர்களைப்போல அழகு சோபிக்க, விளங்குவதைப் பாரும், என் நாதனே !

## 12

(கலித்துறை)

புன்னை மலரினிற் பூந்தாது கிண்டிப்
பொறிவண்டுபெண்
தன்னையும் விட்டுத்தான் காத்திருக் கின்றதுச்
சம்ப்ரமமும்
வன்னக் குயிலினம் கூடிக் குலாவி
மருவுமது
தன்னையுங் கண்டு சுகந்தர வேணும்
தனபதியே.

11. கோகிலம் - குயில். சுதி - சுருதி. வண்டுகள் போடுது: ஒருமை பன்மை மயக்கம்.
12. பொறிவண்டு - புள்ளிகளையுடைய வண்டு. வன்னம் - அழகு. தனபதி - குபேரனைப் போன்றவன்.

13

(சிந்து)

[ராகம் : பிலகரி]

### பல்லவி

விந்தை இதைக் காணுமே
—பூஞ்சோலையின்
விந்தை இதைக் காணுமே.

### அநுபல்லவி

சந்ததம் மனோரம்யச்
சரசசல் லாபமாய்
மந்தகா சஞ்செய்து
மருவும்என் நாதனே (விந்தை)

### சரணம்

நண்ணியே புன்னைமலர்
நற்றேனை ஆண்வண்டுகள்
பெண்வண்டு களுக்கூட்டிப்
பிரியாமல் காத்திருக்கும் (விந்தை)

கோகிலம் பெண்குயிற்குக்
கோதிநற் கனிகளைப்
பாக முடன்கொடுத்துப்
பட்சமாய்க் கொஞ்சுகிற (விந்தை)

மங்கையர் பேசுகிற
வார்த்தை களைப்பயின்று
தங்கள் கணவர்மெச்சத்
தான்பெண் சுகம்பேசுது (விந்தை)

13. பாகம் - பக்குவம். சுகம் - கிளி.

(வசனம்)

எனக்கு மனோரம்யமாய் ஆனந்தத்தைத் தராநின்ற நாதனே! இந்தப் புன்னைப் பூங் கொத்துக்களில் அரும்புகளை மலரச்செய்து, தன் பெண் வண்டைத் தேன் சாப்பிடச்செய்து, இதர வண்டுகள் வராமல் காவல் காக்கின்ற ஆண் வண்டின் பிரியத்தைப் பாருங்கள். ஆண் குயிலானது நல்ல பழங்களைக் கோதி, அந்த ரசத்தைப் பெண் குயிலுக்கு ஊட்டிச் சந்தோஷப்படுகிறதையும், பெண் சுகங்கள் ஸ்திரீகளிடத்திலே கற்றுக்கொண்ட சாதுர்யமான வார்த்தைகளைத் தம் நாயகர் கேட்டு மெச்சும்படியாய்ப் பேசுகிறதையும் பார்க்கவேணும் சுவாமி!

## 14

### ராஜா வாக்கியம்

(சிந்து)

[ராகம் ; சங்கராபரணம் - தாளம் : ஆதி]

பல்லவி

பாராய்நீ சுகபாஷிணி—ரத்ன பூஷணி
பாராய்நீ சுகபாஷிணி.

சரணம்

நேராக மாதுளையின்
நிறைந்தபுஷ்ப பங்கள்ரசம்
நிரம்பும்உன் அதரத்தின்
நிறம்ஒவ்வா ததனாலே
கூரான மூக்கினால்
கோதுஞ் சுகங்கள்மிகக்
கொஞ்சியுன் வார்த்தைகள்போல்
குளிரப் பேசும்இதனைப் (பாரா)

14. சுகபாஷிணி - கிளிபோன்ற சொற்களை உடையாய். அதரத்தின் உதட்டின்.

(வசனம்)

திவ்ய மாதுர்ய வசனமுள்ள பெண்ணே! இந்த மாதுளம் புஷ்பங்கள் ரசபரிதமான உன்னுடைய அதரத்துக்குச் சமானமாகாததனுல், சுகங்கள் மூக்கினுலே கோதி உன் வார்த்தைகளைப்போல் கொஞ்சிப் பேசுகிறதைப் பார்த்தாயா?

## 15

### நாயகி வாக்கியம்

(சிந்து)

[ராகம் : ஆகிரி—தாளம்: ஆதி]

பல்லவி

காமுக சிங்காரனே—நயகுண
காமுக சிங்காரனே.

சரணம்

தேமாந் தளிருக்குள்
செங்கனி தென்றலால்
சீருடன் அசைவது
செல்வச் சோலையாம்பெண்

பூமா உனைக்காணப்
பொன் தட்டி னிற்கனியைப்
பொங்கமாய் வைத்தது
போன்றில குதுபாரும் (காமுக)

15. தே மா - இனிப்பான கனிகளையுடைய மாமரம்.

(வசனம்)

காமுக சிங்காரனே! என் நாதனே! இந்த மாமரத்தில் கனிகளானவை தளிருக்கு நடுவிருந்து தென்றலால் அசைவது, இந்தச் சோலையாகிய பெண், மாங்கனியைத் தங்கத் தட்டில் வைத்து உமக்குக் காணிக்கை தருகிறதுபோல் விளங்குகிறது.

## 16

### ராஜா வாக்கியம்

(சிந்து)

[ராகம் : பூரி கல்யாணி]

பல்லவி

பூங்கரும் பே அன்னமே—சிங்காரப்
பூங்கரும் பே அன்னமே.

சரணம்

கோங்கரும் பின் நுனியில்
கூடிவண் டிருப்பது
ஈங்கேஉன் றன் தனங்கள்
போலவே காணுது (பூங்)

(வசனம்)

என்னுடைய ஆசைக்குகந்த மேன்மையான கரும்பே! அன்னமே! இந்தக் கோங்கரும்பின் நுனியில் வண்டு இருக்கின்றது, உன்னுடைய ஸ்தனபாரங்கள் போலவே சோபிப்பது, பார்த்தாயா?

## 17

## நாயகி வாக்கியம்

(சிந்து)

[ராகம்: யதுகுல காம்போதி]

### பல்லவி

தக்கஎன் நாயகனே—லீலைதனில்
தக்கஎன் நாயகனே.

### சரணம்

உச்சிதக் கர்ணனும்
மெச்சும் உமைக்கண்டே
உவந்துவந் தனஞ்செய்து
வணங்குமா தர்போலே
இச்சோலை யின்லதைகள்
பூங்கொத்தா லேவணங்கும்
இந்தவே டிக்கைபாரும்
என்றனக் கிதந்தாரும் (தக்க)

(வசனம்)

தாத்ருத்துவத்திலே கர்ணனும் மெச்சும்படியான என் நாதனே! ஸ்திரீகள் மோகித்து வணங்கி உமக்கு வந்தனஞ் செய்கிறதுபோல, இந்தப் பூங்கொடிகளானவை புஷ்பக் கொத்துகளைத் தாங்கித் தலைவணங்கி நிற்கிறதைப் பாரும்.

17. லதைகள் - கொடிகள்.
**வசனம்:** தாத்ருத்துவம் - கொடுக்கும் இயல்பு.

## 18

### ராஜா வாக்கியம்

(சிந்து)

[ராகம்: மாஞ்சி]

பல்லவி

பூவையே ஆனந்தம்கொள்வாய்
—புஷ்பம் புனைந்து
பூவையே ஆனந்தம்கொள்வாய்.

அநுபல்லவி

நாவலர் கள்கொண்டாடும்
நல்ல மலர்எடுத்து
ஆவ லுடனே தர
அன்புட னே அணிந்து (பூவை)

சரணம்

சண்பக புஷ்பமிதுன்—தேககாந்தி
தன்னையும் வாசனையும்
பண்புட னே தருவதால்— இதனைவெகு
பக்ஷமுட னே அணிவாய்
நண்புட னேபன்னீராம்
நல்ல மலர்தனைப்
பெண்கள் சிரோமணியே
பிரியமா கப்புனைவாய் (பூவை)

முல்லை அரும்பிது—வாசனையால்
மோக மதைஉண்டாக்குது
செல்வமின்னாளே இதனைக்—கூந்தலில்சூடிச்
சிங்கார மாகமகிழ்வாய்

18. வல்லியே - பூங்கொடி போன்றவளே.

சல்லாப மாகவே இந்தச்
சாதி மலரைவனைந்து
வல்லியே சுபசோபன
மங்களங்கொள் வாய்உகந்து (பூவை)

(வசனம்)

பூவையே! பெண்கள் சிகாமணியே! நான் எடுத்துத் தருகிற புஷ்பங்களில் இந்தச் சண்பகப் புஷ்பமானது, உன்னுடைய தேக காந்திக்கும் உன்னுடைய தேக வாசனைக்கும் சமானமாய் விளங்குகிறபடியால், இது நீயே தரித்துக்கொள்ளத் தகுந்தது. இந்தப் பன்னீர்ப் புஷ்பமும் சாதிப் புஷ்பமும் முல்லைப் புஷ்பமும் மிகுந்த வாசனையினாலே மோகிக்கச் செய்கின்றன. இவைகளையும் அணிந்து சுபசோபன சந்தோஷத்தைப் பெறுவாய், பெண்ணே.

## 19

## வணிகர் வருகை

(வெண்பா)

மாணிக்கம் பச்சை வயிடூரியமணிகள்
ஆணித் தராமுத் தநேகநகை—பேணியே
கொண்டுவிற்குஞ் செட்டிகள்தாம் கோலமணிப் பொ
கொண்டுவந்தார் இன்பமது கூர்ந்து. [ன்நகைகள்

## 20

(சிந்து)

[ராகம் : நாதநாமக்கிரியை]

பல்லவி

வகைதொகை கள்தெரிந்து
வர்த்தகஞ் செய்யநல்ல
வணிகர் இருவர்கள்வந் தார்.

19. ஆணித்தராமுத்து மற்ற முத்துக்களின் தரத்தைச் சோதிக்க உதவும் நாயக முத்து

அநுபல்லவி

மிகவிலை கள்மிகுந்த
மேன்மை யானரத்ன
நகைகளும் முத்துமுதல்
நற்பவ ளமுங்கொண்டு (வகை)

சரணம்

நல்லவஸ்திரங்களும்—நாலுதேசத்து
நாகரிக மான பொருள்களும்
செல்வம் மிகுந்த பாண்டியன்-முன்பினில்வைத்
தீர்மான விலைகள் பேசியும் [துத்

வலலமை யினாலே
வாதொரு வர்க்கொருவர்
சொல்லித்தங் கள்செட்டித்
தொழில்நாண யமாக (வகை

## 21

## குறி சொல்லுகிற பூசாரி வருகை

(கோச்சகம்)

தூசுடுத்து நல்லுருமால் சுங்குவிட்டு மேபுனைந்து
தேசமெல்லாம் மெச்சியிடச் சிற்றுடுக்கை கையேந்திப்
பூசையுட னேகுறிகள் போற்றிநித மும்உரைக்கும்
பூசா ரிகள்இருவர் பொங்கமுடன் வந்தாரே.

21. தூசு - ஆடை. சுங்கு - தொங்கும் குஞ்சம்.

## 22

(சிந்து)

[ராகம் ; சாவேரி]

பல்லவி

பூசாரி இதோவந்தார்—சகுனம் சொல்லும்
பூசாரி இதோவந்தார்.

அநுபல்லவி

தேசமன் னருக்கெல்லாம்
தேர்ந்து குறிகள்சொல்லி
பூசித மதுபெற்றுப்
பூரிப்ப தாகவே (பூசாரி)

சரணம்

உருமாலை சுங்குவிட்டுக்-கொண்டு
உடுக்கையும் தட்டிக்கொண்டு
திருநீறை யுந்தரித்துத்-தெய்வங்களைச்
சித்தத்தி னில்துதித்துத்
திரிகாலங் களையுந்
தேர்ந்து சகுனம் சொல்லும்
திடவான்பாண் டியனுக்கும்
கனவான்முன் பாகவே (பூசாரி)

## 23

பூசாரி கணபதியை வேண்டுதல்

(கண்ணிகள்)

ஆதி விநாயகனே ஐங்கரனே சித்திதரும்
சோதிப் பொருளான தும்பி முகத்தோனே
அம்பிகையாள் பெற்றெடுத்த அற்புதக் கற்பகமே
நம்பின பேர்களுக்கு நன்மை தருவோனே

22. பூசிதம் - சிறப்பு.

மந்திரத்துக் குள்ளே மகாமந் திரவுருவாய்த்
தந்திரமாய் அஷ்டசித்தி தான்தரவும் வல்லவனே
சந்ததமும் மங்களங்கள் தந்துரட் சிப்பவனே
கந்தனுக்கு மூத்த கணபதியே கற்பகமே.

## 24

### பூசாரி வாணியை வேண்டுதல்

(கண்ணி)

காணிக்கை வைத்துக் கரங்குவிப்பேன் இப்போது
வாணியே நற்சகுன வாக்கருள வேணுமம்மா.

## 25

### பூசாரி முருகனை வேண்டுதல்

(கண்ணி)

வள்ளிதெய் வானை மணவாள னேஎனது
உள்ளத்தில் நின்றே உறுதிசொல்ல வேணுமையா.

## 26

### பூசாரி மீனாட்சியை வேண்டுதல்

(கண்ணிகள்)

அம்பா பராசக்தியே மீனாட்சி—சக
தாதார மானவளே மீனாட்சி

இன்பச் சொரூபியான மீனாட்சி—எங்கள்
இஷ்டதெய்வம் ஆனவளே மீனாட்சி

சொக்கருக் கமுதமான மீனாட்சி—வந்து
சொல்லவேணும் நிஜமாக மீனாட்சி

சிற்றுடுக்கில் வந்துநின்று மீனாட்சி—தாயே
செயமாய் நிஜஞ்சொல்லம்மா மீனாட்சி

கையுடுக்கில் வந்துநின்று மீனாட்சி—நினைத்த
காரியத்தை நீசொல்லம்மா மீனாட்சி

உன்னடிமை நானல்லவோ மீனாட்சி—என்சொல்
உறுதி பலிக்கவேணும் மீனாட்சி
வள்ளியம்மை மாமியான மீனாட்சி—என்றன்
வாக்கில்நின்று காக்கவேணும் மீனாட்சி
அரசன் நினைத்தகுறி மீனாட்சி—எனக்கு
அற்புதமாய்த் தோன்றவேணும் மீனாட்சி
தாமசங்கள் இல்லாமல் மீனாட்சி—குறி
தான் விளங்க வேணுமம்மா மீனாட்சி
பாண்டியன் குமாரியே மீனாட்சி—சுபம்
பலிக்கவரம் தாருமம்மா மீனாட்சி.

## பூசாரி குறிபார்த்தல்

(வசனம்)

தாயே, மீனாட்சி! பாண்டிய மகாராஜன் நினைத்த காரியங்கள் எனக்குத் தோன்றும்படியாய் முத்தெடுத்துக் கொடுக்கவேணும் தாயே!

## 27

(கலித்துறை)

அம்புவி தன்னிலுன் அன்பர்க்கு
நித்திய ஆனந்தமும்
தெம்பும் கொடுத்திடும் மீனாட்சி
யேஉன் திருவடியை
நம்பும் அடியவன் முத்தெடுத்
தேகுறி நன்மைசொல்ல
அம்பா இப் போதில் அபயந்தந்
தாண்டே அருளுவையே.

27. தெம்பு - தைரியம்.

(வசனம்)

ராசிச்சக்கரத்தில் முத்துப்போட்டு, சிங்கத்திலே முத்து வந்தால் அடே, சிங்கமே சிங்கம். என் இஷ்டப் பிரகாரம் நிச்சயமாய் உத்தமமான குறி. தாயே, பரதேவதா மீனாட்சி! எங்கே இன்னொரு முத்தெடுத்துக் கொடுக்க வேணும்.

## 28

(கலித்துறை)

வாக்கில் துதித்து மனத்தில்
தியானித்து வந்திப்பவர்
பாக்கிய மாகிய மீனாட்சி
யேஉன் பதாம்புயத்தை
நோக்கிப் புகழ்ந்தே இரண்டா
வதுமுத்து நன்மையதாய்ச்
சீக்கிர சித்தியுண் டாகத்
தயவின்று செய்குவையே.

(வசனம்)

இப்போதும் சிங்கத்திலேதான் வந்தது முத்து. சர்வோத்தமம். எங்கே, தாயே! மூனாந்தரம் முக்காலும் முத்தெடுத்துக் கொடடியம்மா.

## 29

(கலித்துறை)

வையகத் தோரும்நற் றேவரும்
மன்னரும் வந்தர்ச்சனை
செய்யச் சுகந்தரு மீனாட்சி
யேஉன் திருவடியை

மெய்யாக நம்பினேன் மூன்றாந்
தரம்முத்து மேன்மையதாய்க்
கைமேல் பலனைப் பலிக்கச்செய்
வாய்இன்ப காரணியே.

(வசனம்)

இப்போதும் சிங்கத்திலேதான் வந்தது முத்து. ஜயந்தான், ஜயந்தான். எனக்குத் தோன்றச் செய்ததே நிச்சயம்.

## 30

### பூசாரி குறிசோல்லல்

(கலித்துறை)

மன்னவனே உமைக் கண்ட
வுடனே மனத்துதித்த
என்னுடை இஷ்டமா தெய்வங்கள்
சொல்வதிங் கென்னவென்றால்
தன்மை மிகுந்தநற் சற்புத்ர
பாக்யம் தழைத்தினிதாய்
எந்நாளும் நித்திய ஆனந்த
மானதிங் கெய்துமென்றே.

## 31

(அகவல்)

செல்வமும் ஜயமும் சிறந்தவை பவமும்
நல்ல அழகும் நானிலம் புகழும்
கீர்த்திப்ர தாபமும் கிளர்ச்சியும் பெற்றுப்
பார்த்திப னை பாண்டிய மகிபனே
5 சமுத்திரஞ் சூழ்ந்த தாரணி யதனில்
சமர்த்தாய் எங்கும் சஞ்சரித் திதமாய்

---

31: 3. கீர்த்தி - ஈகையினால் வரும் புகழ். பிரதாபம் - வீரத்தினால் வரும் புகழ்.

மன்னவர் தமக்கும் மற்றுமுள் ளோர்க்கும்
அன்ன நடைபயில் அரிவையர் தமக்கும்
நினைத்த குறிகள் நிலவர மாக
10 இனத்துடன் சொல்லி இனிதுடன் கீர்த்தி
ஓங்கிட வெகுமா னங்கள்உற் சாகமாய்
வாங்கிய பூசாரி வந்தேன் உம்மிடம்
உம்முடை முகத்தில் உகந்தநற் குறிகளும்
செம்மையாய் உமதிஷ்ட தெய்வஓத் தாசையும்
15 குலதெய்வம் பார்க்கும் குளிர்ந்தநற் பார்வையும்
பலவிதக் குறிகளும் பார்த்துநான் முத்தைக்
கைக்கொண் டெடுத்துக் கருத்துடன் பார்க்கையில்
மெய்யதாய்க் குறிகள் வெளியதாய்த் தோணுது
நாயனே உமக்கு நல்ல சுபங்களும்
20 நேயமாய்ப் பெண்கள் நிறைந்தகூட் டுறவும்
முகவசீ கரமும் மோகன சித்தியும்
சுகமும்தீர்க் காயுசும் சோபன சுபங்களும்
சற்புத்ர பௌத்ர பாரம் பரியமும்
அற்புத தேசாதி பத்யலா பங்களும்
25 சீக்கிர மாகவே சித்தித்து வாழ்வீர்
பாக்கியவா னேகுறி பலித்திடுந் தானே.

## 32

### வாழ்த்து

(சிந்து)

[ராகம்: கும்பகாம்போதி - தாளம்: சாபு]

பல்லவி

வாழி என அருள்வீர்—பிரகதீசரே
வாழி என அருள்வீர்.

---

19. நாயனே - தலைவனே.

32. பிரகதீசர் - தஞ்சை இராஜராஜேசுவரத்தில் எழுந்தருளியுள்ள பெருவுடையார்.

அநுபல்லவி

வாழி பிரகந்நாயகி மருவும் சிவசங்கரா (வாழி)

சரணம்

வாழிகா வேரிநதி வாழி சோழமண்டலம்
வாழிதஞ் சைமாநகர் வாழிபோ சலகுலம் (வாழி)

வாழி சிவாஜீந்திரன் வாழிசெங் கோல்நிதம்
வாழி விஜயத்வஜம் வாழி சுவேதசத்ரம் (வாழி)

வாழி சிவாஜீந்திரன் மகிழும்புத் திரபௌத்திரர்
வாழி மருகர்நிதம் வாழிபந்து வர்க்கங்கள் (வாழி)

வாழி மந்திரிதந்திரிகள் வாழிசே னாபதிகள்
வாழி பிறஜனங்கள் வாழி சதுரங்கங்கள் (வாழி)

வாழிதே சத்தெல்லோரும் வாழி பசுவர்க்கங்கள்
வாழி தனதானியம் வளமைசெல் வம்பெருக (வாழி)

வாழிநான் மறைகளும் வாழி கவிராஜர்கள்
வாழி மிகமிகவே வளரஎந் நாளுமே (வாழி)

சுபம்.

பிரகந்நாயகி - தஞ்சையில் எழுந்தருளியுள்ள அம்பிகை.
விஜயத்வஜம் - வெற்றிக்கொடி. சுவேதசத்ரம் - வெண்கொற்றக் குடை.

# புரூரவ நாடகம்

## 1

### பிள்ளையார் துதி

(தரு)

[ராகம்: துசாவந்தி]

பல்லவி

கணபதி யேசரணம்—செய மகா
கணபதி யேசரணம்

அநுபல்லவி

கணபதியே அடியார்
கதியே அமிர்த
குணபதியே வல்லபைக்கொரு
பதியாய் வந்தருள் (கணபதி)

சரணம்

வானவர் பணிவோனே—முகில்வண்ணன்
வனமாலி மருகோனே
தீன தயாபரனே
செவ்வேள் சகோதரனே
ஆனைமா முகத்தோனே
அஞ்ஞானந் தவிர்த்தோனே (கணபதி)

கோடது ஏடாக—அந்தக்
கொம்பெழுத் தாணியாக
நாடிவரையும் வானோர்
நாமம் புகழும் எந்த
நாடும் பணியும் உனை
நாடியே கஜமுக (கண)

1. முகில்வண்ணன் - திருமால். செவ்வேள் - முருகன். கோடது - கொம்பு. வரையும் - பாரதக் கதையை மேருமலையில் எழுதிய.

நல்ல வரமருள் மூர்த்தியே—சக்கரவர்
நாடகமதன் கீர்த்தியே
செல்வச்சுந் தரனருள்
செல்வனே அடியார்கள்
கல்விக் கொருவித்தாய் என்
கவிகளுமுன் வந்தருள் (கணபதி)

## 2

### பிள்ளையார் வருகை
(விருத்தம்)

தண்டைகள் சிலம்பு கொஞ்சத்
தாள்பரி புரங்கள் ஆர்ப்பக்
கண்டமீ தணிந்த ரத்ன
கண்டிஒண் பதக்கம் மின்னக்
கொண்டையிற் பணிகொள் ஈசன்
குணமுடன் ஈன்ற பாலன்
அண்டினோர் தம்மைக் காக்கும்
ஆனைமா முகவன் வந்தான்.

## 3

### சக்கரவர்த்தி வருகை
(விருத்தம்)

மேருலவு நிர்மலன் தேவியுடன் ஒருகணம்
மேவிஅவ ளோடும்உணர்வாய்
மேவியவ்வ் வேளைதனி லேஅமரர் கூட்டமது
வேவரவு கண்டுநீங்கி

2. பரிபுரங்கள் - சிலம்புகள். ஆர்ப்ப - ஒலிக்க. கண்டம் கழுத்து. பணி - பாம்பு.
3. மேருலவு - மேருவில் உலாவிய.

ஏருலவும் அம்பிகை இவ்வடவி தனில்வரும்
இவர்மகிழ் பிள்ளை இல்லா
திருப்பரென வேசபித் திட்டசிவை அன்புகூர்ந்
தீன்றருள் கின்றபாலன்
காருலவும் மகிஷிந்த்ர புரிநகர்க் கதிபதி
கருதலர்கள் மாய்வுறரண
களத்தில்உள அமரர்குறைஅகலவருள் கின்றவன்
கடிமணம் பெற்றவேரித்
தாருலவு புயன்சக்ர மதிக்குடை மாக்கருணை
தான்செயக் கீர்த்திபெற்றுத்
தரைதிக்கு விசயமது செய்யுநற் புரூரவச்
சக்ரவர்த் தியும்வந்தனன்.

## 4

(தரு)

[ராகம்: பந்துவராளி]

பல்லவி

சக்கரவர்த்தி ராசனும்வந் தான—புரூரவச
சக்கரவர்த்தி ராசனும்வந் தான்.

அநுபல்லவி

திக்குவிசயம் செய்தம்பத்தாறு
தேசமெல்லாம் ஒருகுடைக்கீழ்ப்
பக்குவமாய் அரசுசெய்து
பரநிருபர் எதிரில்லாத (சக்கர)

3. அடவி - காடு. சிவை - அம்பிகை. கருதலர்கள் - பகைவர்கள். ரணகளம்-போர்க்களம். கடிமணம் - மிக்கமணம். வேரி-தேன்.
4. பரநிருபர் - வேற்றரசர்.

சரணம்

ஆதித்தன் எனஒளி கண்டு—உலகுதனில்
ஆறில்ஒரு கடமையுங் கொண்டு
சோதி நவரத்னம் என்னத்
துலங்கு கிரீடங்கள் மின்ன
ஆதிமா மறைகள் நண்ண
அரிவையர் மங்களம் என்னச் (சக்கர)

அதிரதர் சமரதர்கள் சூழவே—பூலோகத்
தைம்பத்தாறு மன்னர்அடி தாழவே
விதம்விதமாய் அர்த்தரதரும்
மேன்மை மிகுந்த மகாரதர்களும்
முதன்மையான கவியுசிதரும்
மூத்தவர்களும் வரஅவருடன் (சக்கர)

செக்கர் மணி உபயவெண்
சாமரைகள் வீசவே—பாவங்கள்
செய்வதற் கெவர்களும்
அஞ்சிக் கூசவே—மதியெனும்ப்ரகாச
சக்கரவையம் அதிகாரம்
உக்கிர பதியெனு மலையில்
விக்ரம ப்ரக்யாதி முற்ற முக்கியச் (சக்கர)

## 5

### சக்கரவர்த்தி கூறுதல்

(விருத்தம்)

கற்பனை மிகுந்தி லங்கும்
கட்டியக் காரா கேளாய்
இப்புவி தனிலே என்றன்
இருதயம் அறிந்து நீதி

4. ஆதித்தன் - சூரியன். கடமை - வரி. அதிரதர், சமரதர், அர்த்தரர், மகாரதர் - நால்வகைத் தேர் வீரர்கள். கவியுசிதர் — சமயமறிந்து கவிபாடும் புலவோர். செக்கர்மணி - சிவந்த மாணிக்கம். உபயம் - இரண்டு. சக்கர வையம் - வட்டமாகிய பூமி. விக்ரம ப்ரக்யாதி- வெற்றியினால் புகழ்பெற்ற.

தப்பிலாப் படிநடத்தும்
சாந்தசற் குணமே உள்ள
அற்புத மிகுந்த மந்த்ரி
யவனைநீ அழைத்து வாராய்.

(வசனம்)

சக்கரவர்த்தி: அகோ, வாரும் பிள்ளாய், கட்டியக்காரா! நம்முடைய மனமறிந்து நடக்கிற மதிதர மந்திரியை நம்முடைய சமுகத்துக்கு அழைத்து வாரும் பிள்ளாய்.

கட்டியக்காரன் :

அப்படியே. மகாபாக்கியம். ஐயா ஸ்வாமி!

சரணம், சரணமையா! பூலோக சக்கரவர்த்தி மகாராஜா சமுகத்துக்கு அழைத்து வரச்சொன்னார், ஐயா ஸ்வாமி.

## 6

## மந்திரி வருகை

(தரு)

[ராகம்......]

### பல்லவி

மந்திரி வந்தனனே—மதிதர
மந்திரி வந்தனனே.

### அநுபல்லவி

மந்திரி வந்தனன்
தந்திர மிகுந்திடு
விந்தைய தாகிய
இந்திர புரிக்கு (மந்திரி)

**சரணம்**

புத்தி அருளிய
நித்தியன் பதமதில்
பத்தி யுடனே அருச்
சித்துப் பதம்பெற
எத்திசை யும்புகழ
வெற்றி பெறும்பரி
சுத்தன் சக்கர
வர்த்தி சபைதனில் (மந்திரி)

கங்கையும் தும்பையும்
திங்களும் அணிந்திடும்
சங்கரன் உமையவள்
பங்கன் அருளிய
மங்க ளாகர
செங்க மலமுக
எங்கள் புரூரவ
துங்கன் சபைதனில் (மந்திரி)

ஆசு கவிவல்லவர்
சேசே எனமுர
சோசைஜம் பத்தாறு
தேசம் நடுங்கிட
தாசர் தாசியர்உல்
லாச கவரிகள்
வீசப் புரூரவ
ராசன் சபைதனில் (மந்திரி)

6. ஆசுகவி - கொடுத்த செய்திகளை வைத்துக்கொண்டு உடனுக்குடன் பாடும் கவி. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால்வகையுள் ஒன்று.

## 7

## ஊர்வசி வருகை

(விருத்தம்)

வந்துநற் கொலுவில் பூர்வ
 மகிபதி இருந்த நாளில்
இந்திர சபையில் என்றும்
 இனிமையாய் நடனம் ஆடும்
சுந்தரி ரத்தி னத்தால்
 தொகையிலாப் பணிகள் பூண்டு
விந்தையாய்ப் பூமி தன்னில்
 மெல்லியூர் வசியும் வந்தாள்.

## 8

(தரு)

[ராகம்: ஆனந்த பைரவி]

பல்லவி

வந்தனள் ஊர்வசியும்
வந்தனள் வந்தனளே.

அநுபல்லவி

இந்திர னுறுசபை தனில்நட மாடிய
 இங்கித மதுமிகு மங்கள யோக்கிய
சுந்தரி என்னும் ஊர்வசி யானவள்
 சொகுசுட னேவெகு மவுச தாகவே (வந்த)

8. மவுசு - ஆடம்பரம்.

சரணம்

கருக்கு முகிலென இலகு குழலினள்
—பிறை நுதலினள்
காவி மலரெனும் விழியினள்

முருக் கிதழும்நற் பூங்கற்கண்டு
முகமுங் கமலம திணையெனக் கொண்டு
செருக்கு முலைகுட மல்லிகைச் செண்டு
சிவந்த கரமதற் கிணையெது உண்டு-என (வந்த)

அண்டர் மகிழவே நடனம் ஆடுவள்
—சங்கீதம் பாடுவள்
அந்த வர்ண ரசனையும் கூடுவள்
கண்ட கண்டவர் பார்த்தே இப்படிக்
காரி கையைநாம் கண்டதில் லையடி
எண்டிசை களிலும் இவளைப் போலடி
என்ன வாய்ப்பிர மன்படைத் தானடி-என (வந்த்)

## 9

### ஊர்வசி சிவபிரானைப் பூசை செய்தல்

(விருத்தம்)

பூமியில் இந்தி ரன்தான்
பூசைபண் ணினமா தேவச்
சாமியைப் பூசை பண்ணித்
தவம்செய வேணு மென்றே

8. முகில் - மேகம். காவி - நீலோற்பலம். முருக்கு இதழ் - முள்ளுமுருங்கைமலரைப் போன்ற உதடு. கமலமது இணை - தாமரைக்கு ஒப்பு. அண்டர் - தேவர். காரிகை - பெண்.

சோமனார் கோவில் தன்னில்
துரிதமாய் வந்து மெத்த
நேமமாய் அன்பு கூர்ந்து
நினைவுடன் பூசை செய்வாள்.

(வசனம்)

ஊர்வசியானவள் பூலோகத்திலே தேவேந்திரன் பூசை பண்ணிய சிவஸ்தலத்தில் வந்து பூசை செய்கிறாள்.

## 10

(தரு)

பல்லவி

[ராகம்: பைரவி]

சிவனைப் பூசை செய்தாளே—ஊர்வசியாளும்
சிவனைப் பூசை செய்தாளே.

சரணம்

நவதீர்த்தங் களைநினைந்து
நன்றாய்த் தியானங்கள் செய்து
நவமாந் துகிலுடுத்தி
நாடிருத்தி ராக்ஷம்பூண்டு (சிவனை)

ஓம்நமசி வாயவென்றே
உரைத்துவெண் ணீற்றையும்
[உறக்]குழைத் தங்கங்கே
உறுதியா கத்தரித்துச் (சிவனை)

அன்புடன் தேன்பால்முதல்
அபிஷேக மதுசெய்து
அழகான சந்தன
மதையணிந் தின்பமாய்ச் (சிவனை)

10. நவமாம் துகில் - புதிய ஆடை.

மல்லிகை முல்லை இரு
வாட்சிவில் வங்கள்கூட
மல்லிகை துளசியும்
வயணமா கவேகூட்டிச் (சிவனை)

தூபதீபனை வேத்யம்
சுந்தர மாகஞந்து
சோடச உபசாரம்
சொகுசாக வேசெய்து (சிவனை)

சங்கரா சரணம்என் றன்
தயாபர னேசரணம்
கங்கைவே ணியாசரணம்
கடவுளே சரணமென் று (சிவனை)

**11**

**தேவாரம்**

பித்தாபிறை சூடபெரு
மானே அரு ளாளா
எத்தான்மற வாதேநினைக்
கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூ ரருட் டுறையுள்
அத்தாஉனக் காளாயினி
அல்லேனென லாமே.

10. வயணமாக - பொருத்தமாக; வழக்கு. சோடச உப சாரம் — ஆசனம், சுவாகதம், பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஆசமனம், ஸ்நானம், ஆடை, ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், வந்தனம் என்ற பதினாறுவகை உபசாரங்கள்.

## 12

நாயேன்பல நாளும்நினைப்
பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற
லாகா அருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆயாஉனக் காளாயினி
அல்லேனென லாமே.

## 13

மன்னேமற வாதேநினைக்
கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி
ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அன்னேஉனக் காளாயினி
அல்லேனென லாமே.

## 14

### ஊர்வசி அபயமிடல்

(விருத்தம்)

ஊர்வசி பூசை செய்தே
உம்பர்கள் லோகத் துக்கே
ஆவலாய்ப் போகும் போதோர்
அசுரன்கண் டவளைத் தேரில்

11, 12, 13. சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய தேவாரப் பாசுரங்கள்.

தாவியே கட்டும் போது
தவித்தவள் மனுவிஞ் ஞானு
காவாயுன் அபய மென்று
கடுகவே முறையிட் டாளே.

## 15

### மந்திரி அரசனுக்கு அறிவித்தல்

(விருத்தம்)

ஐம்பத்தா றென்னும் தேசத்
ததிபதி யாக வந்து
வன்புடன் அரசாள் சக்ர
வர்த்தியைப் பார்த்து மந்த்ரி
அம்பரந் தன்னில் ஓர்பெண்
அபயமென் றலறு கின்ருள்
சம்பன்ளு என்று மந்த்ரி
சக்ரவர்த் திக்குச் சொன்னன்.

(வசனம்)

ஐம்பத்தாறு தேசத்துக்கும் சக்கரவர்த்தியாகிய ராஜேந்திரா! ஏதோ ஆகாசத்திலே ஒரு பெண் அபய மென்ற கூக்குரல் சத்தம் கேட்குதையா, சுவாமி.

## 16

### சக்கரவர்த்தி அசுரனோடு போர் செய்தல்

(விருத்தம்)

மந்திரி உரைத்த சேதி
மன்னவன் கேட்டுச் சிந்தை
நொந்தே அக் கணமா காசம்
நோக்கியே பறக்க டித்துச்

14. கடுக - விரைவில்.
15. வன்பு - வலிமை. அம்பரம் - ஆகாசம்.

சுந்தர மாந்தேர் ஏறித்
துரிசுடன் கோப மாக
அந்தரந் தன்னில் அந்த
அசுரனை யெதிர்த்திட் டானே.

(வசனம்)

மந்திரி சொன்னதைக் கேட்டு மகா கோபத்துடனே பல்லைக் கடித்து, ஆகாசத்திலே பறக்கும் தேரேறி அந்த அசுரனுடைய தேரை மறித்துச் சண்டை பண்ணுகிறார்.

## 17

(தரு)

[ராகம்: யதுகுல காம்போதி]

பல்லவி

அடடா நில்லடா அசுரா
ஆண்மைகள் செய்யாதே.

சரணம்

அந்த அரிவை தனையும்
விடடா விடடா எனவும் மெத்த
வீம்புகள் பேசாதே
உன்றன் வில்லைக் கையில்
எடடா எடடா வில்லையும் என்றாய்
எடுத்தேன் பார்நீயே
இந்தம் புக்கெதி ரம்புந்
தொடடா தொடடா எனப்பதி லுக்குத்
தொடத்தெரி யாமல்
சிரந்துணிந் தேபூ மியில்விழுந்தான். (அடடா)

16. துரிசுடன் - வேகத்தோடு; வழக்கு. அந்தரம் - ஆகாசம்.

## 18

## சக்கரவர்த்தி ஊர்வசியை இந்திரசபைக்குக் கொண்டுபோய் விடுதல்

(விருத்தம்)

* * * *

திறத்துடன் நிருபன் றானும்
செய்யுப காரந் தன்னை
மறக்கிலோம் என்று சொல்லி
வாசவன் மகிழ்ந்திட் டானே.

(வசனம்)

அசுரனைக் கொன்று ஊர்வசியைத் தேவேந்திர சபையிலே கொண்டுபோய் விட்டார். "மனுவிஞ்ஞான ராசனே, உம்முடைய உபகாரத்தை ஒருநாளும் மறவோம்" என்று தேவேந்திரன் முதலான தேவர்கள் வாழ்த்தினார்கள்.

## 19

## சிற்பிரபையின் நிபந்தனை

(விருத்தம்)

இமையவர் உலகம் விட்டே
இந்திர புரிந கர்க்கு
இமைப்புடன் வருமப் போது
விதர்ப்பதே சத்து ராசன்
வனப்புள புத்ரி யான
மாதுசித் ப்ரபையும் நாலு

18. வாசவன் - இந்திரன். இதன் முன் இரண்டடிகள் பிரதியில் இல்லை.
19. இமையவர் உலகம் - தேவலோகம். இமைப்பு - விளக்கம்.

சமுசுகள் சொல்லும் பேரைத்
தான்மணம் புணர்வேன் என்றாள்.

(வசனம்)

புரூரவ சக்கரவர்த்தி இந்திர லோகம் விட்டுப் பூலோகத்தில் இந்திரபுரிப் பட்டணத்துக்கு வருகிற பாதையில், விதர்ப்ப தேசாதிபதியான சந்திரலோசனன் தவத்திலே பிறந்த சித்ப்ரபை நாலு சமுசுகள் எழுதிக் கட்டி, சமுசு சொல்லுகிற ராசாவை மாலை சூட்டுவேன் என்றாள்.

## 20

### சிற்பிரபை வருகை

(விருத்தம்)

திருவென முகமதி ஒளிவிடப் புருவமும்
சிலையென விழிகடலாக்
கரமது முளரிநுண் ணிடையது ககனமின்
களமது வளையேதான்
பரிபுர பதமொலி யிசைகலிர் கலிரெனப்
பண்புள நிருபர்தாம்
வருசபை தனில்மலர் மகளென வும்சித்
ப்ரபையவள் வந்தனளே.

19. சமுசு - சமஸ்யை; ஒரு வினாவைக் கொடுத்து விடைகூறச் சொல்லுதல்.

20. சிலையென - வில்லைப்போல் விளங்க. முளரி - தாமரை. ககனமின் - வானத்தில் தோன்றும் மின்னல். களமது வளை - கழுத்து சங்குக்கு ஒப்பானது. பரிபுரபதம் - சிலம்பை அணிந்த பாதம். மலர் மகள் - திருமகள்.

## 21

(தரு)

[ராகம் : மத்தியமாவதி]

பல்லவி

அரிவைசித் ப்ரபையும்வந் தாள்
—சிங்காரமாக
அரிவைசித் ப்ரபையும்வந் தாள்.

அநுபல்லவி

திருவிளங் கியவிதர்ப்ப
தேசாதி ராசன்மகள் (அரிவை)

சரணம்

இரவிருள் ஓதி இடையிழை பாதி
பிரபல சோதி பதுமினி சாதி (அரிவை)
நலங்குயங் கோடு நடைஅன்னப் பேடு
இலெங்கும் சோடு ரதிஇவட் கீடு (அரிவை)
கலையினில் வாணி கன்னிகல் யாணி
இலகுமிந் திராணி யிலும்இவள் திராணி (அரிவை)
வனிதைசிங் காரி மதனுடைப் பாரி
மனிதரில் நாரி மாதெனக் கூறி (அரிவை)

## 22

சுயம்வரம்

(விருத்தம்)

மணம்புரிவேன் என்றுதந்தை யுடனே சொன்னள்
மன்னன்சுயம் வரமொன்று நாட்டி வைத்தி
க்ஷணமிந்தச் சமுசைஉரைத் தால்வி வாகம்
செய்விப்பேன் எனவும்ஐம்பத் தாறு தேசத்

21. இரவு இருள் ஓதி - கூந்தல் இரவில் உள்ள இருளுக்கு ஒப்பானது. இடை இழை பாதி - இடை நூலிழையின் பாதிக்கு ஒப்பானது. நலம் குயம் கோடு - அழகையுடைய தனம் யானைத்தந்தம். சோடு - ஒப்பு. ஈடு - ஒப்பு. திராணி - ஏற்றம்.

துணர்பெரிய மன்னரெல்லாம் சொல்லொணுத
துரைபூர்வ சக்ரவர்த்தி மனமகிழ்ந்து
மணவாளனுகஎண்ணிச் சமுசு சொல்ல
வந்திட்டான் அவருமனம் மகிழ்ந்திட்டாரே.

## சக்கரவர்த்தி சமுசுக்கு விடை கூறுதல்

(வசனம்)

சித்ப்ரபையானவள் சொல்லைக் கேட்டுச் சந்திர லோசனன் துசமரம் நாட்டி, சமுசு சொன்ன பேருக்கு விவாகம் செய்விப்பேனென்று சொல்ல, ஐம்பத்தாறு தேசத்து ராசர்களாலும் சொல்லொணுத சமுசைப் புரூரவ சக்கரவர்த்தி சொல்லுகிறூர்.

## 23

### முதல் சமுசுக்கு விடை

(விருத்தம்)

அங்கவங் கங்க ளைம்பத்
தாறுதே சத்து மன்னர்
தங்கள்நற் சபையைப் பார்த்துச்
சாற்றுவான் புரூர்வன் இங்கும்
அங்கும்உண் டென்ப துந்தான்
அருந்ததிக் கிணையாம் பெண்ணும்
பொங்கமா உதவி வாழ்தல்
பூதலந் தனிலென் றனே.

23. இங்கும் உண்டு அங்கும் உண்டு என்றதற்குப் பொருள் சொல்கிறுன் அரசன். அருந்ததிக்கு இணையாகிய மனைவியுடன் இல்வாழ்வு நடத்தும் ஒருவனுக்கு இம்மைவாழ்விலும் இன்பம் உண்டு; மறுமையிலும் இன்பம் உண்டு. பொங்கம் - மகிழ்ச்சி.

(வசனம்)

அங்கும் உண்டு இங்கும் உண்டு என்பது, அருந்ததிக்கு இணையான பெண்ணுடனே கூடி, துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் உதவி வாழ்ந்திருப்பான் என்றான்.

## 24

### இரண்டாவது சமுசுக்கு விடை

(விருத்தம்)

மங்கள சபையீர் கேளீர்
  மாசமு சுதனை இன்று
இங்கிலை அங்கும் இல்லை
  என்பதும் சொல்வேன் வேடன்
பங்கமாய்ப் பறவை தன்னைப்
  பதைக்கவே கொன்று தின்று
சங்கடப் படுவா னென்றே
  சாற்றினான் சபையில் தானே.

(வசனம்)

இங்கும் இல்லை அங்கும் இல்லை என்பது, வேடன் பட்சிகளைக் கொன்று தின்றும், பரோபகாரமும் இல்லாமல் தன் வயிற்றுக்கும் பற்றாமல் சங்கடப்படுவானுக்கு இகபரம் இல்லை என்றான்.

வசனம்: "துறந்தார்க்கும் துவ்வாத வர்க்கும் இறந்தார்க்கும், இல்வாழ்வான் என்பான் துணை" என்பது குறள்.

24. இரண்டாது சமுசு: இங்கும் இல்லை, அங்கும் இல்லை என்பது. அதற்கு விடை: ஒரு வேடன் சிறிய பறவையைக் கொன்று தின்கிறான். அது அவன் பசிக்குப் போதாமையாலே இவ்வுலகத்திலும் இன்பம் இல்லை; உயிர்க்கொலை செய்த பாவத்தால் மறுமையிலும் அவனுக்கு இன்பம் இல்லை.

## 25

### மூன்ருவது சமுசுக்கு விடை

(விருத்தம்)

பங்கயன் படைத்த பூவில்
மாந்தர்கள் சபையைப் பார்த்து
இங்குண்டு அங்கே இல்லை
என்பதும் சொல்வேன் தங்கள்
அங்கமே வளர்த்திங் கார்க்கும்
அன்புசெய் யாதோர்க் கென்றும்
இங்குண்டு பரமோ இல்லை
என்னவே உரைத்திட் டானே.

(வசனம்)

இங்குண்டு அங்கில்லை என்பது, உலகத்திலே தான் தேடித் தானே புசித்து, எள்ளளவாகிலும் பிறருக்கு உபகாரம் இல்லாதவனுக்குப் பரகதி இல்லை என்ருர்.

## 26

### நான்காவது சமுசுக்கு விடை

(விருத்தம்)

இங்கிதம் மிகுந்த லோகத்
திறையவர் சபையைப் பார்த்து
அங்கேஉண் டிங்கே இல்லை
யாவது சொல்வேன் கேளீர்

25. பங்கயன் - பிரமதேவன். அங்கம் - உடம்பு. பரம் - மறுமை வாழ்வு.

மூன்ருவது சமுசு: இங்குண்டு, அங்கில்லை. விடை: தங்கள் உடம்புக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொண்டு தம்நலமே பேணிப் பிறரிடம் அன்பு செய்யாதவர்களுக்கு, இவ்வுலகில் இன்பம் உண்டாகலாம்; மறுமையில் இன்பம் இல்லை.

26. நான்காவது சமுசு: அங்குண்டு, இங்கில்லை. விடை: தன் கைப்பட்ட பொருளையெல்லாம் தான் நுகராமல் பிறர்க்கே உதவி வாழ்பவன், இவ்வுலகில் இன்பம் பெருவிட்டாலும் மறுமையில் இன்பம் அடைவான்.

தன்கையி லேஅ கப்பட்
டதைப்பிறர்க் கீந்து நன்றாய்
வங்கணத் துடனே வாழ்வான்
வானுல கெய்து வானே.

(வசனம்)

அங்குண்டு இங்கில்லை என்பது, தான் கஷ்டப்பட்டுத் தேடினதைத் தான் புசியாமல் நல்ல சற்பாத்திரத்துக்கு ஈந்து வாழ்வான் சாயுச்சிய பதவி பெறுவான் என்றார்.

## 27

### சக்கரவர்த்தி சிற்பிரபையை மணத்தல்

(விருத்தம்)

சக்கர வர்த்தி சொன்ன
சமுசதைக் கேட்டே எட்டுத்
திக்குளோர் மகிழத் தேவர்
திவ்யமா மலர்கள் தூவ
வக்கணை யாம்ரா சர்க்கு
மணக்கோலம் செய்து நல்ல
பக்குவச் சித்ப்ர பைக்கும்
பண்புடன் முகூர்த்தம் செய்தார்.

(வசனம்)

சக்கரவர்த்தி ராசாவானவர் விருத்தாந்தத்தைச் சகல ராசாக்களும் சந்திர லோசனனும் கேட்டு மகிழ்ந்து, தேவர்கள் பூமாரி சொரிய, இவர்களுக்கு மணக்கோலஞ் செய்து மாலை சூட்டி முகூர்த்தம் செய்தார்.

26. வங்கணம் - நட்பு.

## 28

### சிற்பிரபை கருவுறுதல்

(விருத்தம்)

சந்திர லோசன் பெற்ற
 தையல்சித் ப்ரபையும் நல்ல
இந்திர புரிக்கு வந்தே
 இராச்சியம் ஆளும் போது
சுந்தரி யாம்பெண் ணாள்செய்
 சுகிர்தத்தால் கெர்ப்ப மாகி
வந்தனை யுடனே பத்து
 மாதமா கியும்வந் தாளே.

(வசனம்)

கல்யாணம் பண்ணிக் கொண்டு சகல வரிசை அலங்காரத்துடனே இந்திரபுரிப் பட்டணத்துக்கு வந்து ராச்சிய பரிபாலனம் பண்ணுகிற நாளையிலே, தவத்தினாலே சித்ப்ரபை தேவி கர்ப்பமாகிப் பத்து மாதமும் நிறைந்து வருகிறாள்.

## 29

(தரு)

[ராகம்......]

பல்லவி

மாதுசித் ப்ரபை வந்தாள் - பத்து
மாதமும் கெர்ப்ப முடனே நாளும்

28. சுகிர்தம் - நல்ல செயல்களின் பயன்.

அநுபல்லவி

பூதலம் புகழ் புரூரவ
சக்கர வர்த்தி தேவி அற்
புதமாய் மெய்ம் மிகவே
தப்பாமலே கற்பேமிகு (மாது)

சரணம்

அரிவையில் உயர்ந்த
ஆயிழை முதல் சாதி
அழகு தனிலே இந்த
அவனி நிறைந்த சோதி
சுரிகுழற் கிணையது
சொல்லொணாப்ரக் யாதி
துடிய திடைஅன்ன
நடையுடை பொற்புடை நீதி (மாது)

வரிவிழி மலர் செவி
வளைமதி முகம்எனும் நாடி
வளர்பிறை நுதல்மொழி
மகிழ்சீனிரச மோடி
இருதன முங்கமுத்
தேநடை யுந்தள் ளாடி
இந்தப்பெண் விந்தையது
உந்திச்சுழி சந்திரனேடி (மாது

## 30

சிற்பிரபை இரண்டு மைந்தரைப் பெறுதல்

(விருத்தம்)

சக்கர வர்த்தி தேவி
தப்பாச்சித் ப்ரபையும் நல்ல

29. முதல் சாதி என்றது பதுமினி என்ற சாதியை. துடி - உடுக்கை. செவி வளை - காது வள்ளையைப் போன்றது.

பக்குவந் தனில்இ ரண்டு
　　பாலரைப் பெற்றெ டுத்து
அக்குழந் தைக ளோடே
　　ஆனந்த மாக வேதான்
இக்குவ லயத்தை ஆண்டே
　　இருந்தனள் நீதி யாலே.

(வசனம்)

புரூரவ சக்கரவர்த்தி தேவி சித்பிரனை பக்குவ காலத்திலே இரண்டு ஆண்பிள்ளைகளைப் பெற்று மகா சந்தோஷத்துடனே நீதிவழுவாமல் ராச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தாள்.

## 31

## சக்கரவர்த்தி மந்திரியிடம் கூறித் தன் மைந்தரை அழைப்பித்தல்

(விருத்தம்)

என்னுடை மனம றிந்த
　　இங்கித மந்த்ரி கேளாய்
நன்னய மாக இந்த
　　நாட்டுளோர் மகிழத் தானும்
பண்ணிய தவத்தால் வந்த
　　பாலர்கள் இரண்டு பேர்கள்
தன்னையும் இப்போ தென்றன்
　　சமுகத்தில் அழைப்பிப் பாயே.

## மந்திரி கட்டியக்காரனிடம் கூறுதல்

(வசனம்)

மந்திரி: அகோ வாரும் பிள்ளாய், கட்டியக்காரா!

கட்டியக்காரன்: என்னையா ஸ்வாமி?

31. இரண்டு பேர்கள் தன்னையும்: ஒருமைபன்மை மயக்கம்.

மந்திரி: நம்முடைய புரூரவ சக்கரவர்த்தி குமாரர்கள் இருவரையும் சமூகத்திற்கு அழைப்பிக்க உத்தர வாகியிருக்கிறது. சீக்கிரத்திலே போய் அழைத்து வாரும் பிள்ளாய்.

## 32

### கட்டியக்காரன் மைந்தரை அழைத்தல்

(விருத்தம்)

வாக்கியந் தப்பாச் சக்ர
வர்த்திமைந் தாச ரணம்
யோக்கிய வான்க ளான
உத்தமா சரணம் சரணம்
பாக்கிய சக்ர வர்த்தி
பாலர்கள் தமைஅ ழைத்துச்
சீக்கிரம் வரவே சொன்னார்
தீரவே வருகு வீரே.

(வசனம்)

சக்கரவர்த்தி மகாராஜா தேவரீர் இருவரையும் சமூகத்திற்கு அழைத்து வரச் சொல்லி உத்தரவானபடியினாலே சீக்கிரத்திலே வாருமையா, ஸ்வாமி!

## 33

### பாலர்கள் வருதல்

(தரு)

[ராகம்:.........]

பல்லவி

பாலர்கள் வந்தனரே — சக்கரவர்த்தி
பாலர்கள் வந்தனரே.

அநுபல்லவி

பாலர்கள் வந்தனர் ஞால மதைப்பரி
பாலனம் செய்கின்ற சீல முடை இரண்டு (பாலர்).

சரணம்

தங்கச் சிமிக்கி ஆட - அண்ணனும்
தம்பிய ருங்கூடச்
சிங்கத்தின் குட்டியென்
றெக்கும் பரிமளிக்கப்
பங்கயத் தின்வத
னங்கள் இலங்கவே (பாலர்கள்)

நவரத்தி னச்சுட்டி - பாசுபந்து
நயமது பளபளென்ன
அவனியில் உள்ளமன்னர்
அவர்வந்து பணிசெய்ய
தெய்வபக்தி மிகப் பெற்ற
பலர்சித்தம் மகிழுற்ற (பாலர்கள்)

கொண்டைகள் அசைந்தாட - அதில் முத்துக்
குச்சுக் குலுங்கியாடக்
கண்ட சரமாடத்
தண்டை சதங்கையாட
எண்டிசை புகழும்ப்ர
சண்டஉத் தண்ட (பாலர்கள்)

## 34

பாலர் கூறுதல்

(விருத்தம்)

தந்தையே போற்றி போற்றி
தாதையே போற்றி போற்றி

33 ஞாலம் - பூமி. சிமிக்கி - காதணி.

அநுபல்லவி

இந்துவும் மந்தா
கினிநதி அணிசடை
இங்கித சங்கரன்
சந்ததி தேவி (வந்தாள்)

சரணம்

சந்திரனைப் போல்முகம்
இலங்க - ரத்னம் இழைத்த
கொந்தள ஓலையும்
துலங்க - உசிதமான
சுந்தரம் கண்டபெண்
மலங்க - நெற்றியில் இட்ட
சிந்தூரம் கண்டுவேள்
கலங்க - ககனம் அரை
இந்து நிகரில் அதி
சுந்தர நுதலினுள்
சந்தநல் மூக்குத்தி
யுந்திகழ் விந்தையாய் (வந்தாள்)

விழியும் கானகத்தினில்
வண்டு - அமுதமான
மொழியும் திவ்யசீனிகற்
கண்டு - உந்தியெனும்நீர்ச்
சுழியும் குயம்மல்லிகைச்
செண்டு - வயிறால்நூலின்
இழையின் பாதிஇடையும்
உண்டு - கடல்நீண்ட

37. மந்தாகினி நதி - கங்கையாறு. சங்கரன் சந்ததி - சிவ பெருமான் புதல்வன். மலங்க - மயங்க. வேள் - மன்மதன். ககனம் - ஆகாசம். இந்து - சந்திரன்.

எழிலி யெனத்திகழ்
குழல்மிசை சந்தகில்
அழகு நிறைந்தனம்
பழகிய நடையினள் (வந்தாள்)
பாவைய ரிலேபதுமினி
சாதி - தரளமணிக்
கோவை தகதகெனும்
சோதி - எல்லோருங்கண்டு
சேவைசெய் திடும்ப்ரக்
யாதி - குணத்தைச்சொல்ல
யாவ ராலும்முடியா
நீதி - யதையறிந்து
தேவர்கள் பூமாரி
தூவவும் விஞ்சையர்
பாவையர் பாடவி
லாசஉல் லாசமாய் (வந்தாள்)

## 38

### உபரிசனர் வருகை

(விருத்தம்)

மந்த்ரிமதி தரனுடனே அநேக மான
மகுடவர்த் தனர்புடைசூழ்ந் திருக்கும் வேளை
அந்தணரில் அதிகருமா மாயை காம்ய
மனைதுறந்து தவத்திலிருந் தருளே பெற்று
வந்தகா ரியம்வருங்கா ரியங்க ளெல்லாம்
அறிந்துசொல்ல வல்லவராய்க் குற்ற மற்ற
சிந்தையுடன் அற்புதமாய் அந்த வேளை
தீர்க்கமுள்ள உபரிசன ரும்வந் தாரே.

---

37. நுதலினள் - நெற்றியை உடையவள். சந்தம் - அழகு. குயம் - தனம். வயிறு ஆல் - வயிறு ஆலிலை போன்றது. எழிலி - மேகம். குழல் - கூந்தல். சந்து அகில் - சந்தனம் அகில் என்பவற்றின்புகை. விஞ்சையர் - வித்தியாதரர்.

38. மகுடவர்த்தனர் - முடியுடை வேந்தர்.

## 39

(தரு)

[ராகம்......]

### பல்லவி

முனிவர் வந்தனரே—தபோ
தனரும் வந்தனரே.

### அநுபல்லவி

முனிவர் வந்தனர்
மனுவிக் ஞானப்பேர்
அருண னிடம்உபரி
சனருந் தயவுடன் (முனிவர்)

### சரணம்

மெய்யில் திருநீறு
கையில் கமண்டலம்
துய்ய மனத்துடன்
ஐயர் தயவுடன் (முனிவர்)

இடையில் புலியுரி
உடையும் முடியது
சடையும் மிருதுள
நடையும் வடிவுடன் (முனிவர்)

பொய்யை விட்டும்
மெய்யை விரும்பி இவ்
வையத்தைத் துறந்து
ஐயர் ஒயிலுடன் (முனிவர்)

39. புலியுரி - புலித்தோல். மிருதுள நடை - மெத்தென்ற நடை.

## 40

### சக்கரவர்த்தி உபரிசனரை வணங்குதல்

(விருத்தம்)

மாதவா போற்றி போற்றி
மாமுனி நாதா போற்றி
தாதையே என்று சிம்மா
சனத்தினில் அமர வைத்து
ஏதுகா ரியங்க ளாக
என்னிடம் வந்தீர் சுவாமி
ஓதுமென் றடிப ணிந்து
உபசாரத் துடனே நின்றார்.

(வசனம்)

உபரிசனரைச் சரணம் பண்ணிச் சிம்மாசனத்தில் வைத்து, "சுவாமி! என்பேரில் கிருபை செய்து அடியேனிடத்தில் வந்த காரியம் சொல்லுமையா, சுவாமி" என்றார்.

## 41

### உபரிசனர் கூறுதல்

(விருத்தம்)

தீதிலா மனத்தி னோடு
தீர்க்கமாய்ச் செங்கோல் தன்னை
நீதியாய்ச் செலுத்து கின்ற
நிருபனே சொல்லக் கேளாய்
ஆதித்தன் மகன்உன் னைத்தொட்
டரிவைசேய் நகர்நா டெல்லாம்
பேதிப்பான் உனையும் வந்து
பிராமணன் எனவுந் தானே.

40. தாதையே - தந்தையே.
41. அரிவை - மனைவி. சேய் - மக்கள். பேதிப்பான் - வேறுபடச் செய்வான்.

(வசனம்)

அகோ வாரும்பிள்ளாய், சக்கரவர்த்தி ராசனே! நீர் நீதி வழுவாமல் செங்கோல் நடத்தினதனலே நமக்குச் சந்தோஷம் ஆச்சுது. இப்போது சனீசுவரன் ஆடிமாதம் முப்பதாந் தேதி ஆதித்த வாரத்தில் பிராமண ரூபமாய் வந்து தொட்டு, உம்முடைய தேவி, பிள்ளைகள், நகர், நாடு எல்லாம் ஒன்றோடு ஒன்றைச் சேராமல் அலங்கோலம் பண்ணுவார், பிள்ளாய்!

## 42

சக்கரவர்த்தி கூறுதல்

(விருத்தம்)

உரைத்ததைக் கேட்டு ராசன்
உள்ளமும் கலங்கா மல்தான்
தரணியில் மனுவ தாகத்
தான்பிறந் திவைகட் கெல்லாம்
கரைந்ததால் விடுமோ அந்தக்
கர்த்தனர் ஆதி நாளில்
வரைந்தது முடியும் என்றான்
மாமுனி தவத்தில் போந்தார்.

(வசனம்)

ரிஷீசுவரர் சொன்னதைக் கேட்டு மனம் கலங்காமல் சொல்லுவார்: "பூமியில் பிறந்து இதற்குத் தயங்கினல் சனீசுவரன் விடுவானே? பிரம்மா அமைப்புக்கு இரண்டுண்டோ?" என்று சொன்னதைக் கேட்டு ரிஷி போனர்.

42. தரணியில் - பூமியில். கரைந்ததால்-அழுவதால். வரைந்தது - தலையில் எழுதியது.

# 43

## சனீச்சரன் வருதல்

(விருத்தம்)

தவமுனி போன பின்பு
    சக்கர வர்த்தி ராசன்
பவங்கள்சே ராத வண்ணம்
    பாரினை ஆட்சி காட்டிக்
கவனமாய் ராஜ்ய பாரம்
    கட்டிஆள் கின்ற போது
தவப்பிரா மணனைப் போலச்
    சனீச்சரன் தானும் வந்தான்.

# 44

(தரு)

[ராகம் : நாதநாமக்கிரியை]

பல்லவி

சனியப் பிராமணன் வந்தாரே
    —பிரபஞ்சவஞ்சச்
சனியப் பிராமணன் வந்தாரே.

அநுபல்லவி

முனிவர் சொல்லிய
துணிவதும் ராசன்தன்
அநுப வமும்வந்
தணுகலாய் யாரச் (சனியப்)

43. பவங்கள் - பாவங்கள்.

## சரணம்

சங்கர னும் அந்தப்
பங்கயன் சிரசதை
யுங்கிள்ளிப் பிரம்மத்தி
யுங்கொண்டு ஓட்டினில்
எங்கினு மேஇரந்
துண்கவும் சுடலையில்
பங்கம் அறிந்துளர்
எங்கினு மேசெய் (சனியப்)

ஓலமிட் டானையின்
காலம் அறிந்துதவ
மூலம தாகிய
மாலவன் றன்னைப்
பாலுறி திருடவும்
வேலனை அடவியில்
சோலையில் மரமெனச்
சோலிகள் செய்த (சனியப்)

மூலனைக் காலக
பாலனை உதிரும்பிட்
டாலுத ரம்வளர்க்கக்
கூலிக்கு மண்ணினை
யேலபி யெனச்சுமந்து
கோலினால் பாண்டியபூ
பாலன் அடிக்கவும்செய்
நீலவர் ணனை (சனியப்)

---

44. பங்கயன் - பிரமதேவன். அடவியில் - காட்டில். சோலிகள் - வேலைகள். உதரம் வளர்க்க - வயிற்றை நிரப்ப. லபிஎன - கிடைத்தது இது என்று எண்ணி. பூபாலன் - மன்னன்.

காதக ளுகிய
பாதக ராவணன்
தோதகஞ் செய்தந்தப்
பேதைய ளாகிய
சீதையைத் தேர்தனி
லேதரை யோடெடுத்
தேதன தாகவே
போதனை செய்த

எத்திசை யும்புகழ்
அத்தியை உரித்தவர்
புத்திர ளுகிய
சத்திய வாக்கியம்
பெற்றரு ளும்பரி
சுத்த னெனுஞ்சக்ர
வர்த்தியைப் பீடிக்க
என்று தரணியிலே (சனி)

## 45

### சக்கரவர்த்தி உபசரித்தல்

(விருத்தம்)

யோகர்சொல் நாளில் விப்ரன்
உருவினைக் கண்டு சனிதான்
ஆகுமென் றெண்ணி முன்போய்
அவர்பதம் பணிந்து போற்றி
வாகுள ஆச னத்தில்
வைத்துப சாரத் தோடும்
தாகமாய் வந்த வாறு
தனைஉணர்த் திடுமென் ருரே.

44. தோதகம் - வஞ்சகம். அத்தியை - யானையை.
45. விப்ரன் - அந்தணன். சனிதான்: ஓசைப்பிழை.

(வசனம்)

முன் ரிஷி சொன்ன நான் காழிகையும் பிராமணக் கோலமும் கண்டு சனீச்சுரன் என்றெண்ணி எதிர்கொண்டு போய் நமஸ்கரித்துச் சிம்மாசனத்தில் வைத்து, "என்னிடத்தில் வந்தவகை சொல்லுமையா" என்றார்.

## 46

சனீச்சரன் கேட்டல்

(விருத்தம்)

சத்திய வசனம் தப்பாச்
சக்கர வர்த்தி யேகேள்
இத்தர ணியிலே உன்ற
னிடம்வர மூப்போ அல்லால்
உற்றவா லிபத்தில் தானே
உம்மிடம் வரவோ சித்தம்
ஒத்தது சொல்லு மென்றே
உரைத்தனன் சனியன் றனே.

(வசனம்)

அகோ வாரும் பிள்ளாய், சக்கரவர்த்தியே! நாம் உம்மிடத்துக்கு மூப்பினில் வரவோ, இளமையில் வரவோ? உம்முடைய மனசுக்குச் சம்மதியானதைச் சொல்லும், பிள்ளாய்!

## 47

சக்கரவர்த்தி விடை கூறுதல்

(விருத்தம்)

தாய்ப்பிரி யத்தோ டேஎன்
றனை ஒரு பொருட்டாய் எண்ணி
ஆப்புடன் சொல்ல வந்த
ஆண்டவா தேவ தேவா

47. ஆப்பு - பொருத்தம். எற்படும் - வந்து சேருவீர்.

மூப்பினில் வந்தால் தாங்கேன்
முக்யமாம் இளமை யிற்றான்
ஏற்படும் எனவே ராசன்
இயம்பினன் தைர்யத் தோடே.

(வசனம்)

சுவாமி ! என்னை ஒரு பொருட்டாக எண்ணி வந்த கர்த்தனே! மூப்பினில் வந்தால் தாங்கமாட்டேன். இளமை யினில் தானே வந்து உம்முடைய காட்சியைக் காட்டு மையா, சுவாமி !

## 48

குடிகள் வருகை

(விருத்தம்)

தாட்டிகம் பிறந்தே ராசன்
சனியனார் ஏவ லாலே
காட்டினில் மிருகம் வந்து
நற்றேசப் பயிரை யெல்லாம்
சூட்டிகள் செய்யு தென்றே
உலகந்து ராசன் றன்பால்
கோட்டிகள் சொல்ல நல்ல
குடிகளும் வந்திட் டாரே.

## 49

(தரு)

[ராகம்......]

பல்லவி

வந்தா ரேகுடிகள்—ராச சபையில்
வந்தா ரேகுடிகள்.

48. தாட்டிகம் - தைரியம். சூட்டிகள் செய்தல் - கொள்ளை யடித்தல்; இங்கே அழித்தல்.

அனுபல்லவி

இந்திர புரிநகரில்
    இந்த வரை இலாத
இந்த மிருகமது
    வந்த வகை ஏதென்று (வந்தாரே)

சரணம்

மானும் கலையுங் காட்டு
    மரையும் புலியும் மாவும்
ஆனை கரடி சிங்கம்
    அவை செய் துஷ்டிகள் சொல்ல (வந்தாரே)

கிளியும் பரந்த கீரிப்
    பிள்ளையும் காக்கை களும்
அணிலும் வந்தே பயிரை
    அழிக்குதெனவே சொல்ல (வந்தாரே)

கலிங்க மதுவு முழுங்
    காலுக்கு மேலே கட்டிக்
குலுங்க நடைநடந்து
    கொன்னியே பேசிக் கொண்டு (வந்தாரே)

## 50

### குடிகள் முறையிடுதல்

(விருத்தம்)

சரவணப் பிள்ளை ராம
    சந்திரப் பிள்ளை தாமோ
தரம்பிள்ளை முதலோர் வந்து
    தரணியாள் ராசன் முன்னே

49. கலை - கலைமான். மா - வேறு விலங்கு. துஷ்டிகள் - துஷ்டச் செயல்கள். அழிக்குது: ஒருமை பன்மை மயக்கம். கலிங்கம் - ஆடை.

சரணம்என் றடியில் வீழ்ந்து
சந்திர பதியே மிருகம்
வருவது கணக்கே இல்லை
வண்பயிர் அழிக்குதையா.

## சக்கரவர்த்தி வேட்டைக்கு வருவதாகக் கூறுதல்

(வசனம்)

குடியானவர்கள் வந்து முறையிடுவார்: "சக்கரவர்த்தி ராசா! ஒரு நாளிலும் இல்லாத மிருகங்கள் வந்து நாட்டை அழிக்குதையா!"

"நாம் நாளைக்கு வேட்டைக்கு வந்து மிருகங்களைச் சங்கரிக்கிறோம், பிள்ளாய்!"

## 51

## மந்திரியிடம் சக்கரவர்த்தி கூறுதல்

(விருத்தம்)

மனந்தனிலே நினைத்ததெல்லாம் அறிய வல்ல
மந்திரியே நீதானே சொல்லைக் கேளாய்
வனந்தனிலே இருந்தபுலி யாளி சிங்கம்
மான்கரடி புலியானை மரைக ளெல்லாம்
தினந்தோறும் ரூட்டிசெய்து பயிரை யெல்லாம்
தின்றழிக்கு தென்றுகுடி வந்து சொன்னார்
வனந்தனில்வேட் டைக்காடி வேண்டும் பேரை
வரவழைக்கப் பேரிகையது முழக்கி டாயே.

50. மிருகம்: ஓசைக்குறை.

(வசனம்)

நம்முடைய தேசவளம் அறிந்த மந்திரியே! மிருகங்களைச் சங்கரிக்க வேட்டைக்காரரை அழைப்பித்துப் பயணம் பேரி போட்டு வையும், பிள்ளாய்!

## 52

### சக்கரவர்த்தி வேட்டைக்குச் செல்லுதல்

(தரு)

[ராகம் : .........]

பல்லவி

வேட்டைக்கு வாரார்—சக்கரவர்த்தி
வேட்டைக்கு வாரார்.

அநுபல்லவி

வேட்டைக்கு வருகிற
 காட்டிகக் காரரின்
கூட்டம் உரைக்க
 ஒண்ணுமோ (வேட்டைக்கு)

சரணம்

நாட்டுப் பயிர்களைக்
 காட்டு மிருகங்கள்
வாட்டி அழிக்குதென்
 றோட்ட முடன்வர (வேட்டை)

ஆனை பிடிப்பவர்
 ஆனை துரத்துபவர்
மானைக் குத்துபவர்
 வாளி விடுப்பவர் (வேட்டை)

52. வாளி = அம்பு.

புலியைப் பாயுமவர்
போத்தைக் களையுமவர்
கலையைப் பிடிப்பவர்
கரடி அடிப்பவர் (வேட்டை)

உருமு வார்சிலர்
உதறு வார்சிலர்
பொருமு வார்சிலர்
பொருது வார்சிலர் (வேட்டை)

## 53

## வேட்டையாடுதல்

(தரு)

[ராகம்: .........]

பல்லவி

வேட்டை யாடிய
விசித்தி ரத்தைப்பார்—சக்ரவர்த்தி
வேட்டை யாடிய
விசித்தி ரத்தைப்பார்.

அநுபல்லவி

நாட்டுப் பயிரைக்
காட்டு மிருகங்கள்
கூட்ட மாகவந்து
ரூட்டி செய்யுதென்று (வேட்டை)

52. போத்து - ஆண்புலி. பொருதுவார் - சண்டையிடுவார்.

சரணம்

பதுங்கிப் பதுங்கிப் புலியும் பாயுதே
—கரடியின் கூட்டம்
பார்த்துப் பார்த்தொரு மிக்கச் சாயுதே
ஒதுங்கிக் கரடி களும் மிரளுதே
ஓடி யும்மத யானை புரளுதே
பிதுங்க வலையைப் பன்றி கிழிக்குதே
பின்னே ஒட்டகங் களும் முழிக்குதே (வே)

நாலு பக்கமும் வலையைக் கட்டடா
—கடம்பைக் குலத்தை
நகர்த்த டாஅந்த மரையை வெட்டடா
வேலும் எடடா கையத னிலே
மின்னல் போலொளிர் வாளை உருவிடடா
ஆலு மண்டி போட்டுத் தாவியே
அந்தச் சிங்கத்தை வாட்டு வாயடா (வேட்)

54

சக்கரவர்த்தியின் செயல்

(விருத்தம்)

ஆடினார் வேட்டை தன்னை
அமரர்கள் மகிழ்ந் தானே
நாடிய புரத்தில் வந்து
நாளையுஞ் சவாரி என்றார்
கூடிய சனிய ஞாலை
கோட்டிகள் செய்ய உள்பூந்
தாடிய சவாரி தன்னை
அமர்த்தினார் அப்போ தன்றே.

54. புரம் - இராசதானி. சவாரி - வேட்டையின்மேற் பயணம் போதல். கோட்டி - வஞ்சச்செயல். பூந்து - புகுந்து என்பதன் சிதைவு. அமர்த்தினார் - நிறுத்தினார்.

(வசனம்)

தேவர்கள் சந்தோஷப்பட வேட்டையாடிப் பயணத்துக்கு வந்தவர், நாளைக்குச் சவாரி என்று சொன்னவர், சனீசுவரன் கோட்டியினாலே மனத்தில் பயங்கொண்டு சவாரியை நிறுத்தினார்.

## 55

### பகைமன்னர் செயல்

(விருத்தம்)

சமரினிற் பின்வாங் காத
சக்கர வர்த்தி ராசன்
இமைப்புடன் சைரி யம்விட்
டெதிர்வரப் பயந்து சவாரி
அமர்த்தின தறிந்தே ஐம்பத்
தாறுதே சத்து மன்னர்
நமக்கிது சமய மென்றே
நாட்டையே கைக்கொண் டார்கள்.

(வசனம்)

எப்பேர்ப்பட்ட சண்டை சவாரி யுத்தங்களுக்கும் பயப்படாத சக்கரவர்த்தி வேட்டைக்குப் பயந்து சவாரியை நிறுத்தியதை, மற்றத் தேசத்து ராசாக்கள் அறிந்து நாட்டைத் தங்கள் கைக்குள்ளாகக் கொண்டு எதிர்ப் பாளையம் இறங்கினார்கள்.

## 56

(தரு)

[ராகம்: .........]

பல்லவி

கூடினாரே ராசாக்க ளெல்லாம்
கூடினார் கூடினாரே.

55. சமரினில் - போரில். சவாரி: ஓசைப்பிழை.

அநுபல்லவி

கூடினார் வெற்றிமலர்
சூடினார் திறக்கவும்
நாடினார் ராசாக்கள் (கூடினாரே)

சரணம்

கோட்டையைப் பூட்டினார்
பாளையம்—கூட்டினார்
வேட்டைக்குப் போகவும்
பயந்து—நிறுத்தினதை
நாட்டு மன்னரும் அறிந்து
மேட்டிமையா கவும்வந்து
பேட்டிகள்செய் துமே அந்தக்
கோட்டையை வளைத்துக்கொண்டு (கூ)

திக்குவிசயங்கள்
செய்திடும்—சக்கரவர்த்
திக்குச் சனீச்
வரன் எய்திடும்
பக்குவம் அறிந்த அஷ்ட
திக்கு மன்னரும்மெதிர்த்துச்
சிக்குமந்த நாட்டையெல்லாம்
கைக்குள்வச மாக்கிக்கொண்டு (கூடினாரே)

## 57

### மந்திரி சக்கரவர்த்திக்குச் செய்தி சொல்லி அனுப்புதல்

(விருத்தம்)

அமுதமா மொழிநி றைந்த
ஆஸ்தான கட்டியக் காரா
நமதுதே சத்தி லுள்ள
ராசாக்கள் எல்லாந் தாமே

சமர்செய்யத் துணிந்து கூடித்
தாமெதிர்த் தார்கள் என்றே
இமைக்குமுன் இந்தச் சேதி
நிருபனுக் குரையென் றனே.

(வசனம்)

**மந்திரி:** அகோ வாரும் பிள்ளாய், கட்டியக்காரா!

**கட்டியக்காரன்:** என்னையா ஸ்வாமி!

மந்திரி: நம்முடைய தேசத்தில் உள்ள ராசாக்களெல்லாம் நாட்டைக் கைக்குள் ஆக்கிக் கொண்டு நம்மைப் பகைத்து எதிர்ப்பாளையம் இறங்கியிருக்கிறார்கள் என்று சக்கரவர்த்தி ராசாவுக்கு அறிக்கையிட்டு வாரும் பிள்ளாய்!

**கட்டியக்காரன்:** மகா பாக்கியம் ஐயா, ஸ்வாமி!

## 58

## கட்டியக்காரன் அறிவித்தல்

(விருத்தம்)

ஆராய்ச்சி மணிகள் கட்டி
அவனியில் நீதி தன்னை
நேராக நடத்து கின்ற
நிருபனே சொல்லக் கேளீர்
ஊரடங் கலும வர்கைக்
குள்ளாக்கி ராசர் எல்லாம்
நேரிட எதிர்த்தார் என்றே
நிருபனே மந்த்ரி சொன்னர்.

57. கட்டியக்காரா: ஓசைப்பிழை.

58. ஆராய்ச்சிமணி - குறையிடுவார் வந்து அடித்து அரசனுக்கு அறிவிக்கும் வண்ணம் அரண்மனைவாயிலில் கட்டிவைக்கும் மணி. அவனியில் - உலகில். அடங்கலும் - முழுதும்.

(வசனம்)

பூலோக தேவேந்திரா! நம்மை அடுத்த ராசாக்கள் எல்லாம் நாட்டைக் கைக்குள் ளாக்கிக் கொண்டு நம்மை எதிர்த்தார்களென்று அறிந்து, இது சேதி, மந்திரி, தேவரீர் சமுகத்தில் அறிக்கையிட்டு வரச் சொன்னரையா ஸ்வாமி !

## 59

சக்கரவர்த்தி கூறுதல்

(விருத்தம்)

நாற்றிசை போற்ற வந்த
நம்முடைச் சமுகந் தன்னில்
வார்த்தையுச் சிதங்க ளாலே
வகைபெறுங் கட்டியக் காரா
சாற்றிய மொழிக்கு நாளைச்
சதிரினில் வந்த தற்கு
ஏற்றது சொல்வோ மென்ன
இயம்புவாய் மந்த்ரிக் கென்றார்.

(வசனம்)

சக்கரவர்த்தி: அகோ வாரும் பிள்ளாய், கட்டியக் காரா! நாளைக் காலமே சதிரில் வந்து உத்தரவு கொடுக்கிறோ மென்று மந்திரிக்குச் சொல்லும் பிள்ளாய் !

கட்டியக்காரன்: மகா பாக்கியம் ஐயர் ஸ்வாமி !

## 60

சிற்பிரபை வினவுதல்

(விருத்தம்)

மன்னர்மண்ட லீகர் யோகர்
வானவர்க் கிறைவன் மெச்சும்
என்னுடைப் பிராண காந்தா
இயம்புவேன் கேளும் உந்தம்

59. கட்டியக்காரா: ஓசைப்பிழை. சதிர் - அரசவை.

நன்னளி னம்போல் மின்னும்
நாகரீ கமு கத்தில்
மின்னலும் வாடே ஏது
விளம்புவீர் ராச கோவே.

(வசனம்)

செந்தாமரை மலர் போலே இருக்கப்பட்ட முகார விந்தம் வாடியிருக்கும் வகை ஏது? சொல்லுமையா, ஸ்வாமி!

## 61

சக்கரவர்த்தி கூறுதல்

(விருத்தம்)

சந்திர லோசன் பெற்ற
தையல்சிற் பிரபை கேளாய்
இந்திர புரிந மக்கே
இன்றெழுந் தெமைய டுத்தோர்
வந்தெதிர்த் தார்ந மக்கு
மலரயன் விதிப் பாதென்
றுந்திய மனத்தி னோடே
உரைக்கவும் புலம்பு வாளே.

(வசனம்)

“அகோ வாரும் பெண்ணே! நமக்குச் சனியன் செல் காலம் ஆனதனால் நம்மை அடுத்தவர் பகைத்தார்கள். பிரம்மா விதிப் பயன் தப்பாது” என்றார். அது கேட்டுச் சிற்பிரபை புலம்புகிறாள்.

60. நாகரீக முகத்தில் : ஓசைப்பிழை.
61. மலரயன் - தாமரை மலரில் இருக்கும் பிரமதேவன்.

## 62

## சிற்பிரபை புலம்புதல்

(தரு)

[ராகம்: புன்னாக வராளி]

### பல்லவி

அரசர்க் கரசே என்ன செய்வேன்!

### அநுபல்லவி

தரணியாள் மன்னவர்
தாமெதிர்த் தார் அதாலே (அரசர்க்)

### சரணம்

ஆறில் ஒரு கடமை
கொண்டு - புவிஐம்பத்
தாறிலும் அரசு நிற்கக்
கண்டு
சீறிடும் பகைவரை
வென்று - அஷ்ட
திக்கும் விசயம் செய்தீர்
பண்டு (அரசர்க்)

ஆராய்ச்சி மணியது
கட்டி—நீதி
அவைகள் தப்பாமலே
சுட்டி
வீராதி வீரன் சிங்கக்
குட்டி—என்னும்
மேன்மைபெற் றீரேராசாக்கள்
கெட்டி (அரசர்க்)

புண்ணியம் என்பதுதவிர்த்
தேனே—பாடும்
புலவர்மனம் நோகப்
புன்சொல்சொன் னேனே
பண்ணிய பாவங்கள்
தானோ—இப்படிப்
பலித்த தெவர்க்கும்
இடர்செய் தேனே (அரசர்க்)

## 63

### சக்கரவர்த்தி மந்திரியிடம் கூறுதல்

(விருத்தம்)

மதிதர மந்த்ரி கேளாய்
மன்னிய தளங்க ளுக்கு
இதுவரைக் குந்தான் உள்ள
தினியுமோ ராறு மாதம்
துதிபெறச் சம்ப ளங்கள்
துரிசுடன் கொடுத்தே இந்தப்
பதிதனில் வர்த்த கர்க்குப்
பாக்கியுங் கொடுத்தி டென்றார்.

(வசனம்)

அகோ வாரும் மந்திரி, மதிதர மந்திரி! நம்முடைய பட்டணத்தில் உள்ள ராணுவங்களுக்குச் சம்பளமும், இன்னும் ஆறு மாதம் அதிகச் சம்பளமும் கொடுத்துச் செட்டி வர்த்தகர்களுக்குப் பாக்கியிருந்தால் கொடுத்து விடும் பிள்ளாய்!

63. தளங்களுக்கு - சேனைகளுக்கு. துரிசுடன் - விரைவாக.

## 64

### மந்திரி கட்டியக்காரனிடம் கூறுதல்

(விருத்தம்)

கட்டியம் சொல்ல வல்ல
காரியக் காரா கேளாய்
பட்டணந் தன்னி லேதான்
பாக்கிசாக் கிகளுண் டான
செட்டிகள் வர்த்த கர்க்குச்
சேகண்டி போட்டு வைத்துக்
கொட்டிய செம்பொ னெல்லாம்
கொடுத்திடு நிலுவை தானே.

(வசனம்)

பட்டணத்தில் உண்டான செட்டிவர்த்தகர்கள் பாக்கி சாக்கி வாங்கிக்கொண்டு போகச் சேகண்டி போட்டுவாரும் பிள்ளாய் !

## 65

### சக்கரவர்த்தி நினைத்தல்

(விருத்தம்)

பண்ணிய சரூரைப் பார்த்துப்
பாளையம் இறங்கும் ராச
மன்னவர் சந்திப் புக்கு
வரவிருந் தார்சனி யன்தான்
எண்ணியே துணிக பின்னே
எண்ணுவ திழுக்கே என்று
கண்ணலை மனத்திற் செய்து
கன்னிதன் னிடம்போய்ச் சொல்வான்.

---

64. பாக்கிசாக்கிகள்: வழக்கு. நிலுவை - கொடுக்கப்படாமல் எஞ்சி நிற்கும் பணம்.

65. சரூர் - விரைவு. வரவிருந்தார் சனியன்தான் ; இசைப்பிழை. "எண்ணித் துணிக கருமம் துணிந்தபின், எண்ணுவ மென்ப திழுக்கு" என்பது குறள். கண்ணலை - நினைப்பதை.

## 66

### சக்கரவர்த்தி சிற்பிரபையிடம் சொல்லுதல்

(விருத்தம்)

காதலி யாக வந்த
கன்னிசிற் பிரபை கேளாய்
சாதக மான ராசர்
சதிசெய்ய நினைத்தார் நம்மை
ஆதலால் தப்பிப் போவ
தற்புதம் எனவே கேட்டுச்
சாதகப் பேர்க ளோடே
தாங்களும் புறப்பட் டாரே.

(வசனம்)

சக்கரவர்த்தி: அகோ வாராய் பெண்ணே, சிற்பிரபையே! ராசாக்கள்தானே நம்மைப் பகைத்தார்கள். இனி அவர்கள் நம்மை ஏவலாளியாய்ச் செய்வார்கள். அதற்குமுன் தப்பிப்போக வேணும் பெண்ணே!

சிற்பிரபை: மகா பாக்கியம்; ஐயா ஸ்வாமி !

## 67

### சக்கரவர்த்தி மனைவி மக்களுடன் புறப்பட்டுப் போதல்

(தரு)

[ராகம் : புன்னாகவராளி]

பல்லவி

புல்காரருடன் புல்கார ராய்க் கோட்டைப்
புறத்திலே வந்தாரே.

அநுபல்லவி

தங்க முடியும் ரத்னத்
தாழ்வட முங்கழற்றிப் (புல்கார)

---

67. தாழ்வடம் - மாலை. பேதையர் - அறிவில்லாதவர், பவம் பாவம்.

சரணம்

பேர்க்கோர் பிள்ளையாய்த்
தூக்கிக்கொண்டு தங்கள்
..........................................................
யோக்கிய மென்பதைவிட்டுப் (புல்)
பட்டணம் ரதகஜ
பரிசன மும்வெகு
பாக்கியம் செல்வசி
லாக்கியம் முதலாக
விட்டகன் றுநகர்
வெளியே புறப்பட்டு
வேதனை யாகவே
பேதையர் போலவே (புல்)
சிவனே தீனரக்ஷகனே
—உமையனே
சிவனே தயாபரனே
—என்றுரைத்துக்
கவனமா கச்செய்த
பவமிதென் றேஎண்ணி
அவனியா ளும்ராசர்
அவருந்தே வியுடனே (புல்)

## 68

(விருத்தம்)

இரவினில் காட்டில் பூர்வ
இராசனுந் தேவி யாரும்
பரபரப் புடன்ந டக்கப்
பாலனை வாங்கிக் கொண்டு

68. கரியவன் - சனி.

கரியவன் இரவில் பாதை
காட்டியே விடிந்து போனன்
இருவரில் மூன்னும் பிள்ளை
இளைப்புடன் சொல்லு வானே.

(வசனம்)

ராசாவும் சிற்பிரசையும் இரண்டு பேரும் காட்டுக்குப் போக, பிள்ளைகளையும் எடுத்துக்கொண்டுபோய் வழிவிட்டு, விடிந்ததன் பிறகு விட்டுப் போனர்.

## 69

### பிள்ளை கூறுதல்

(விருத்தம்)

இந்திர புரிதே சத்துக்
கிறையவ னக வந்த
தந்தையே என்னைப் பெற்ற
தாயேநீ சொல்லக் கேளாய்
உந்தியும் குழைந்து கண்ணு
மூச்சியிட் டாவி சோர்ந்த
தெந்தம்இப் பசியுந் தீர
இதற்குமோ ருரைசொல் வீரே.

(வசனம்)

வாருங்கோள், என்னைப் பெற்ற ஐயாவே, அம்மாவே! எனக்கு வயிற்றுப் பசியினலே வயிறு குழைந்து கண்ணு மூச்சியிட்டு வருகுது. என் பசியைத் தீருங்கோள், தாயே, தகப்பன்மாரே!

69. உந்தி - வயிறு. கண்ணுமூச்சியிட்டு - கண்விழிகள் நட்டுக் கொண்டு.

## 70

## அன்னையை நோக்கிப் பிள்ளை கூறுதலும் அன்னை தேற்றுதலும்

(கண்ணிகள்)

**பிள்ளை**

அன்னையே என்னைப்பெற்ற
அம்மா பசிமெத்த
ஆகுது அம்மா
தாயே—பசிமெத்த
ஆகுது அம்மா தாயே.

**அன்னை**

ஆகுது பசிஎன்றால்
அருங்கான கந்தன்னில்
அன்னம் அகப்படாதே
மகனே—இங்கே
அன்னம் அகப்படாதே மகனே.

**பிள்ளை**

அன்னம் அகப்படாதென்
றாலென் பசிதனக்
காதரவெப் படிச்சொல்
வாயே—தாயே
ஆதர வெப்படிச்சொல் வாயே.

**அன்னை**

ஆதர வுசிவன்
அல்லால் ஒருவருண்டோ
அப்பா பொறுத்துக்கொள்
வாயே—என
தப்பா பொறுத்துக்கொள் வாயே.

**பிள்ளை**

அப்பா பொறுபொறென்றால்
எப்படிப் பொறுப்பது
அதெனக் கறியச்சொல்லு
வாயே—தாயே
அதெனக் கறியச்சொல்லு வாயே.

**அன்னை**

அறியச் சொல் வதும்என்ன
ஆதி சிவன் கற்பனைக்
காரென்ன செய்வாரை
யாவே - இதற்
காரென்ன செய்வாரையாவே.

**பிள்ளை**

ஐயா ஐயா என்றால்
அரும்பசி நிற்குமோ
அன்னமா கிலுந்தரு
வாயே - கொஞ்சம்
அன்னமா கிலுந்தரு வாயே.

**அன்னை**

அன்னத்துக் கிங்கே தண்ணீர்
அரிசி நெருப்படுப்
பவைகளு மில்லை ஐ
யாவே - அடுப்
பவைகளும் இல்லைஐ யாவே.

பிள்ளை

அரிசி இங் கில்லை யென்றால்
அரும்பசி துடிக்குதே
அன்னையே என்ன செய்
வேனே - தாயே
அன்னையே என்ன செய் வேனே?

அன்னை

அரும்பசி யுந்தகித்தால்
ஏது செய் வேன் இன்னம்
அரைநாழி கைபொறுப்
பாயே—மகனே
அரை நாழி கைபொறுப் பாயே.

பிள்ளை

அரை நாழி கைபொறுக்க
லாகுமோ என் பசி
ஆற்ற முடியாதம்மா
தாயே - என் பசி
ஆற்ற முடியாதம்மா தாயே.

அன்னை

ஆற்ற உலகுதனைக்
காத்தவர்க் கல்லாலென்றால்
ஆவதும் என்ன ஐ
யாவே - என்றால்
ஆவதும் என்ன ஐயாவே ?

தகித்தால் - வருத்தினால். ஆற்ற - பொறுக்க.

பிள்ளை

பட்டினி யாகவே
இப்படி இருகாதும்
பக்கென் றடைக்குதடி
தாயே - காதும்
பக்கென் றடைக்குதடி தாயே.

அன்னை

அடைத்தால் உலகத்தைப்
படைத்தான் செயல் என்றால்
ஆவதுண் டோஎன்ஐ
யாவே - மகனே
ஆவதுண் டோஎன்ஐ யாவே?

பிள்ளை

வைதாலும் சொல்லுகிறேன்
கையுங்கா லும் குரக்கு
வலிவாங்கு தம்மா
தாயே - குரக்கு
வலிவாங்கு தம்மா தாயே.

அன்னை

கோலிவந் திருப்பார்
ஆலம் உண் டவர்க் கொரு
கோலமோ நானும் அறி
யேனே - ஒரு
கோலமோ நானும் அறி யேனே.

---

குரக்குவலி வாங்குதல் - பலவீனத்தால் இழுத்தல்; 'குரக் கொளி வாங்கு'வதாக வழங்குவர். ஆலம் - விடம்.

பிள்ளை

பாலாகி லுங்கொஞ்சம்
சோருகிலும் வெறும்
நீராகி லுந்தரு
வாயே- வெறும்
நீராகி லுந்தரு வாயே.

நீராகி லுந்தர
ஆரோ குளமோ இங்கே
பேரா வசனஞ் சொன்
ஞயே - மகனே
பேரா வசனஞ்சொன் ஞயே.

பிள்ளை

பேரா தெனச் சொல்ல
நேரா முகமது
பாரா துரைக்கிருய்
தாயே - முகம்
பாரா துரைக்கிருய் தாயே.

அன்னை

பாரா திருப்பரோ
ஆரா வமுதரும்
பதருதே பொறு பொறை
யாவே - மகனே
பதருதே பொறுபொறை யாவே

70. பேரா - நடவாத.

# 71

## சிற்பிரபை கணவனைப் பார்த்துச் சொல்லுதல்

(விருத்தம்)

பாலனும் பசியைப் பெற்றுப்
பரிதவித் தலறு கின்றான்
மாலையைப் போல வாடும்
மக்களைப் பார்த்தே எங்கள்
சீலமும் வீறும் செம்பொன்
சிறப்புமே போக வந்த
காலம்இப் படியோ என்று
கணவனைப் பார்த்துச் சொல்வாள்.

(வசனம்)

சிற்பிரபை இரண்டு பிள்ளைகளும் பசியால் வாடி யதைப் பார்த்து, "இன்று பாக்கியம் போனதும் அல்லா மல், காலம் இப்படியும் செய்யுமோ?" என்று கணவனைப் பார்த்து விசனப்படுகிறாள்.

* * * * *

[பிரதியில் இதற்கு மேற்பட்ட
ஏடுகள் இல்லை.]

71. வீறு - பெருமை.